

# சிந்தனைவளம்

நா. பார்த்தசாரதி




தமிழ்ப் புத்தகாலயம்

# சிந்தனை வளம்

நா. பார்த்தசாரதி




தமிழ்ப் புத்தகாலயம்
58, டி.பி.கோயில் தெரு, திருவல்லிக்கேணி
சென்னை-600005

சிந்தனை வளம் (கட்டுரைகள்)

முதற் பதிப்பு : ஏப்ரல், 1982

விலை ரூ. 10-50

CHINDANAI VALAM
Essays
By Naa. PARTHASARATHI
(C) Naa. Parthasarathi
First Edition: April, 1982
208 pages
10 pt. letters
10·9 kg. White Printing Paper
Box Board Binding
18×12·5 cms
ANNAI ANJUGAM ACHAGAM
Madras—600 014
TAMIL PUTHAKALAYAM
58, T. P. Koil Street
Triplicane, Madras—600 005
Price Rs 10-50

அச்சிட்டோர் :
அன்னை அஞ்சுகம் அச்சகம்,
இராயப்பேட்டை,
சென்னை—14.

# முன்னுரை

மண்வளம், நிலவளம், நீர்வளம், வனவளம், கடல் வளம், மலைவளம் என்றெல்லாம் அடிக்கடி பலரால் பேசப்படுகிறது. சிந்தனைவளத்தைப் பற்றியோ, சிந்தனை வறட்சியைப் பற்றியோ யாரும் பேசுவதே கிடையாது. சிந்தனையின் மேல் நம்மவர்களுக்கு அத்தனை வெறுப்புப் போலும்.

ஒரு நாட்டில் மற்றெல்லா வளங்களும் சரியாக அமையவேண்டுமானால் மக்களிடம் சிந்தனை வளம் சரியாக இருக்கவேண்டும். உண்மையான வறுமை என்பதே அறிவின்மைதான். உண்மையான வளம் என்பதும் அறிவுதான்.

சிந்தனை வறட்சியே மற்றெல்லா வறட்சிகளுக்கும் அடிப்படை. ஏன், எதற்கு, எதனால், எப்படி என்ற கேள்விகளை எழுப்பாமலே வாழும் சிந்தனைப் பஞ்ச நிலைமை மாறவேண்டும். அறிவும் விவாதமும் பெருக வேண்டும்.

ஒரு கிராமத்தில் ஏதாவது அக்கிரமம் நடந்து, யாரும் அதைக் கவனிக்காமலே விட்டு விட்டால் "ஏனென்று கேட்பாரில்லாமல் போயிற்று"-என்கிறோம். ஏனென்று கேட்பதுதான் சிந்தனை வளர்ச்சியின் அடையாளம்.

ஏனென்று கேட்பார் இல்லாத நிலை ஒரு கிராமத்திற்கு மட்டுமில்லை, ஒரு நாட்டுக்கும் கூட வருவதுண்டு. புத்தி சம்பந்தமாகச் சமூகத்துக்குவரும் மனநோய்களில் மிகவும் ஆபத்தான தொத்து நோய்தான் 'ஏனென்று கேட்பார் இல்லாத நிலை. சிந்திக்காத ஒருவன் மற்றவர்களும் சிந்தனை மனமற்றவர்களாகவே இருப்

பதைச் சுயநலத்துக்காக விரும்பக் கூடும். சுயநலத்துக் காக வளர்க்கக் கூடும்.

நாட்டின் தலைவர்கள், வழிகாட்டுபவர்கள், பிர முகர்கள், எல்லாருமே சிந்தனை ப்ரக்ஞையற்றவர்களாக இருந்துவிட்டால், சிந்தனை வறட்சியை நாடு முழுவதும் சுலபமாகப் பரப்பிவிட அவர்களே போதுமானவர்களா யிருப்பார்கள். இன்று நாட்டில் அந்த முயற்சி மிகவும் தாராளமாகவே நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. இக் கட்டுரைகள் சிந்தனை வறட்சியைத் தவிர்ப்பதற்காக எழுதப்பட்டவை. துக்ளக் இதழில் நான் எழுதிய இக் கட்டுரைகளை (1978-79 ஆண்டுகள்) இப்போது தமிழ்ப் புத்தகலாயம் நூல் வடிவில் கொண்டு வருகிறது. அழுத்தமான இந்தக் கட்டுரைகள் நாட்டுக்கும் மக்களுக்கும் பயன்படட்டும்.

சிந்தனையைத் தூண்டும் நோக்கத்துடன் திட்ட வட்டமான தலைப்புக்களில் எழுதப்பட்ட இக்கட்டுரை கள் சிந்தனை வளத்துக்குப் பயன்பட்டு அவ்வகை வளத்தைத் தமிழ்நாடு முழுவதும் வளர்க்க உதவக்கூடும் என்பதால் 'சிந்தனை வளம்' என்றே இதன் நூல் வடிவம் இப்போது பெயர் பெறுகின்றது.

இந்தச் 'சிந்தனை வளத்தை'த் தமிழில் ஆழ்ந்து சிந்திக்கப் பழக்கப்படுத்திக் கொண்டுள்ள தரமான நல்ல வாசகர்களுக்குப் படைப்பதில் பெருமைப் படுகிறேன்.

சென்னை
18-4-82

நா. பார்த்தசாரதி.

# சிந்தனை வளம்

## 1. சமூகப் பொறுப்புக்களும் சராசரி இந்தியனும்

இந்திய மக்களில் பலருடைய சமூகப் பொறுப்புக்களைப் பற்றி ஆராயும்போது சில விநோதமான முரண்பாடுகள் புலப்படுகின்றன. 'சோஷல் ரெஸ்பான்ஸிபிளிட்டீஸ்' எனப்படும் சமூகப் பொறுப்புக்கள், அவரவர் சுயநலத்துக் கேற்ப வேறுபடுகின்றன. சுயநலத்துக்கு நம் நாட்டில் எத்தனையோ கௌரவமான பெயர்கள் கொடுக்கப்பட்டிருக் கின்றன.

ஒரு நாள் காலையில் பால் டெப்போவில், வழக்கமாகப் பால் கிடைக்கும் நேரத்துக்குக் கிடைக்கவில்லை. நானும் காத்திருக்கிறேன். என்னோடு ஏதோ ஒரு 'பாங்க்' அலுவலர் ஒருவரும் காத்திருக்கிறார். மணி எட்டு, ஒன்பது, பத்து என்று ஆகியும் பால் வரவில்லை. நான் வாய் திறப்பதற்கு முன்பே, 'பாங்க்' அலுவலர் எரிச்சலோடு வாய் திறந்து தெருவில் கூப்பாடு போடுகிறார்.

''ஒரு முன்னறிவிப்புக்கூட இல்லாமே திடீர்னு இப்படி ஜனங்களைப் பாலுக்குத் திண்டாட விட்டா எப்பிடி? நிர்வாகத்தோட இவங்களுக்கு வர்ற சின்னச் சின்னத் தகராறுங்களுக்காகப் பொதுமக்களைத் தவிக்க விடறது எந்த வகையிலே நியாயம்?''

பாங்க் அலுவலரின் இந்தக் கோபம் எனக்கும் நியாய மாகவே படுகிறது. இரண்டு பேரும் எரிச்சலோடு வேறு இடத்தில் பால் வாங்கிக் கொண்டு அவரவர் வீட்டுக்குத் திரும்புகிறோம்.

பத்து மணிக்கு ஏதோ ஒரு 'செக்'கைக் கணக்கில் கட்ட அவசர அவசரமாகப் பாங்குக்குப் போகிறேன். நிறையக் கூட்டம். அத்தனை பேரும் 'செக்கு'குகளோடு காத்திருக் கிறார்கள்.

''செக்' கிளியரன்ஸுக்காக வாங்க மாட்டாங்களாம். ஸ்டிரைக்காம்.''

—காலையில் பால் டெப்போவில் சந்தித்த அதே பாங்க் அலுவலரையும் பார்க்கிறேன். தொடர்ந்தாற்போல் மூன்று நாள் 'செக்'குகள் 'கிளியரன்ஸு'க்காகப் போகாமல் தேங்கி விட்டால், எத்தனை பேருக்கு எத்தனை விதமான சிரமம் என்று நானும் மற்றவர்களும் எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் புலம்பியும் பயனில்லை.

''நிர்வாகத்தோட இவங்களுக்கு வர்ற சின்னச் சின்னத் தகராறுங்களுக்காகப் பொதுமக்களைத் தவிக்க விடறது எந்த வகையிலே நியாயம்?'' என்று; காலையில் பால் டெப்போவுக்கு முன் அவர் திருவாய் மலர்ந்தருளிய அதே வாக்கியத்தைக்கூட அவருக்கு நினைவூட்டிப் பார்த்தேன். பயனில்லை.

ஜனங்களைப் பாலுக்குத் திண்டாடவிட்ட பால்பண்ணை ஊழியர்கள்மேல் அப்போது சீறி விழுந்த அதே மனிதர், பாங்கில் தமக்கு முன்னால் பல்வேறு மக்களைத் தவிக்க விட்டுக் கொண்டிருப்பதைக் கண்ணாரக் கண்டேன்.

ஆகா! என்ன அற்புதமான சமுதாயப் பொறுப்பு இவருக்கு? தன்னைப் பாதிக்கும் ஒரு சிரமத்தின்போது

சமூகப் பொறுப்பு உள்ளவர்கள்போல் கண்டித்துப் பேசும் பல இந்தியர்கள்—தங்களைப் பாதிக்காத—பிறரைப் பாதிக்கும் காரியங்களில் எப்படி நடந்து கொள்கிறார்கள் என்று கவனித்தால் ஏமாற்றமாயிருக்கிறது. அருவெறுப்பாகக்கூட இருக்கிறது.

தாம்பரத்திலிருந்து அமிஞ்சிக்கரையிலிருக்கும் ஒரு கல்லூரிக்குப் படிக்கச் செல்கிற மாணவன், பரீட்சை எழுத இருக்கும் ஒரு தினத்தில் மின்சார ரயில் தாமதமாகிப் பரீட்சைக்கு லேட்டாகி விடுகிறது என்று வைத்துக் கொள்வோம். நடுவழியில் ஏதோ ஓர் அரசியல் கட்சியின் ரயில் மறிப்புப் போராட்டத்தால் அந்தத் தாமதம் நேர்கிறது என்றும் வைத்துக் கொள்ளலாம்.

உடனே மாணவன் அபாரமான கோபத்தோடு, பொறுமையிழந்து இந்நாட்டையும், ரயில்களையும், அதை ஓட்டுபவர்களையும் சபிக்கிறான். ஆனால், இந்தக் கோபமும், சாபமும் எல்லாம் பாதிக்கப்பட்டவன் அவனாக இருந்தால் மட்டும்தான்.

அவனே சக பிரயாணிகளோடு விடலைத்தனமான சண்டை சச்சரவுகளால் தானும், தன்கூடப் பயணம் செய்யும் மாணவர்களும் கணிசமான எண்ணிக்கையில் இருக்கிற பலத்தில், ஒவ்வொரு ஸ்டேஷனை விட்டும் ரயில் கிளம்பும்போது செயினைப் பிடித்து இழுத்து நிறுத்தி மற்றப் பிரயாணிகளுக்குத் தாமதத்தை ஏற்படுத்தி மகிழும் போது, சமூகப் பொறுப்பற்றவனாகிவிடத் தயங்குவதில்லை. தான் பாதிக்கப்பட்டால் மட்டுமே சமூகப் பொறுப்புள்ளவனாகிப் பதற்றமடைவதும், தான் பாதிக்கப்படாமல், பிறர் பாதிக்கப்பட்டால் அதில் மகிழ்வதும் சராசரி இந்திய மனப்பான்மையோ என்றுகூட நினைக்க வேண்டியிருக்கிறது. பல விஷயங்களுக்கும் இது பொருந்தும்.

சமூகப் பொறுப்பு இல்லாதவர்கள் இந்நாட்டின் எல்லாத்துறைகளிலும் இருக்கிறார்கள். சமீபத்திய தேர்தல் கூட்டம் ஒன்றில் ஒரு படித்த அரசியல் தலைவர் பின்வருமாறு பேசியிருக்கிறார். அவருடைய பொருளாதார ஞானத்தை

எப்படி வியப்பது? ''அன்று, ஆட்சியில் தங்கம் விலை மலிவாயிருந்தது. இன்று ஏறி விட்டது.''

தங்கம் விலை ஏறுவதும், இறங்குவதும் சர்வதேச மார்க்கெட்டில் ஒரு அவுன்ஸ் தங்கத்துக்கு என்ன விலை நிர்ணயிக்கிறார்கள் என்பதைப் பொறுத்தது. கத்திரிக்காய், வாழைக்காய்விலை போல் அது உள்ளூர்க் காரணங்களால் திடீரென்று ஏறாது. சர்வதேச மார்க்கெட்டில் ஒரு அவுன்ஸ் தங்கத்தின் விலை 450 டாலருக்குமேல் இருக்குமானால் இங்கே, எப்படிப்பட்ட கொம்பன் பிரதமராக இருந்தால் கூட அதை மலிவாக வைத்திருக்க முடியாது. ஏனென்றால், தங்க விலை நிர்ணயத்துக்கு இங்கே ஆட்சியிலிருப்பவர்கள் நேரடியாகக் காரணமில்லை. விவரம் தெரிந்தவர்கள் இந்தப் பேச்சைப் பேசியவர் எந்த அளவுக்குப் பொருளாதாரத்தில் பூஜ்யம் என்பதை அறிவார்கள். ஆனால் விபரம் தெரியாத பெரும்பாலான பாமர மக்கள். அந்த ஆட்சி போனதனால் தான் தங்கம்விலை ஏறிவிட்டது போலவும், மறுபடி அந்த ஆட்சிக்கு வந்தால் தங்கம் ஐந்து ரூபாய், பத்து ரூபாய் விலைக்குச் சவரன் சவரனாகத் தெருவெல்லாம் கூறு கட்டி இறைக்கப்பட்டுக் கிடக்கும் என்பது போலவும் நினைக்க வழி வகுக்கும் சமூகப் பொறுப்பற்றது இந்தப் பேச்சு—இந்த மாதிரிப் பொறுப்பில்லாத பேச்சுக்கும் சுயநலமே காரணம். மக்களின் அறியாமையைப் பயன்படுத்தி, அவர்களை எப்படியாவது ஓட்டுப் போடுகிற சில நாட்களுக்குத் தப்பான பிரமையில் வைக்க வேண்டும் என்று முயலும் எந்தப் பிரசங்கியும், எந்த அரசியல் தலைவனும் சமூகப் பொறுப்பின்மையில் யாருக்கும் குறைந்து விடுவதில்லை. தனக்குச் சிரமம் வருகிறபோதும், தான் பாதிக்கப்படுகிறபோதும் சமூகப் பொறுப்போடு பிறர் நடந்து கொள்ளவில்லையே என்று வருத்தப்படுகிற ஒவ்வொரு தனி மனிதனும் தன்னால் பிறர் சிரமப்படும்போதும், தான் பிறரைப் பாதிக்கும்போதும் அப்படி வருத்தப்படாத நாடு இது.

முயன்று லஞ்சம் வாங்கிய ஓர் ஊழியன்மேல் போலீஸார் நடவடிக்கை எடுத்தால் அந்த ஊழியனுக்காக

அவனது சக ஊழியர்களின் அனுதாப வேலை நிறுத்தமே பரிசாகக் கிடைக்கும் என்றிருக்கும் நாட்டில் சமூகப் பொறுப்பை எப்படி உணர்த்த முடியும்.

'காய்கறி விலை ஏறுகிறதே?' என்று மேடையிலே முதலைக் கண்ணீர் வடிக்கும் அதே அரசியல்வாதி, தான் சார்ந்திருக்கும் கட்சி மூலமோ அக்கட்சியின் மன்றத்தின் மூலமோ—போலீஸ் பாதுகாப்புக்கு உத்தரவாதமளிப்பதாகச் சொல்லி—ஒவ்வொரு நடைபாதைக் காய்கறிக் கடைக்காரனிடமும் தினசரி மாமூலை வற்புறுத்தி வசூலிக்கும் தானும் அதற்கு ஒரு காரணம் என்பதை எண்ணிப் பார்ப்பதே இல்லை. யாருக்கும் சொந்தமில்லாத இடத்துக்குத் தானே பாதுகாவலனாகி வாடகை வசூலிக்கும் ஆட்கள் இங்கே ஒவ்வொரு கட்சியிலும் இருக்கிறார்கள்.

தேர்தல்கள் வரும்போதெல்லாம் யாரிடமாவது பெருந்தொகை நிதி வசூல் செய்துகொண்டு, அவர்களது பண்டங்களைக் (சிமெண்ட், சர்க்கரை, காகிதம் போன்றவை) கிடைக்க விடாமல் - அல்லது எட்டாத உயரத்துக்கு விலையை ஏற்றிக் கிடைக்கச் செய்கிற சமூகப் பொறுப்பற்றவர்கள் நிறைந்த நாடு இது.

பிரிட்டனைப் போன்ற கனிந்த ஜனநாயக நாடுகளில் தொழிற் கட்சி ஆட்சியைப் பிடித்தாலும், கன்ஸர்வேடிவ் கட்சி ஆட்சியைப் பிடித்தாலும் மக்களுக்கு அடிப்படையான சிரமங்கள் எதுவும் இராது. இரண்டு கட்சியிலும், கட்சிகள் என்ற அளவில் வேறுபாடு இருந்தாலும் 'மக்கள் நலனைப் பேணுதல்' என்ற பொது நோக்கத்தில் வேறுபாடு இராது. 'இந்த மக்கள் நலனைப் பேணுவது' என்ற அடிப்படை நோக்கத்தைத்தான் சமூகப் பொறுப்பு என்று இக்கட்டுரை எங்கும் குறிப்பிடுகிறேன். அதன் பொருளும் இங்கே இது தான்.

வாங்கிச் சென்ற ரொட்டியில் 'பூஞ்சைக் காளான்' பூத்திருப்பதாகத் திருப்பிக் கொண்டு போய்க் காட்டினால், கடைக்காரர் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு பணத்தைக் கஸ்டமரிடம் திருப்பிக் கொடுக்கும் நாட்டில் உள்ள சமூகப்

பொறுப்பு உணர்ச்சியையும், 'ஏமாந்தவன் தலையில் எதையாவது நல்ல விலைக்குக் கட்டி அனுப்புவதுதான் வர்த்தகம்" என்று மட்டுமே, வியாபாரத்தைக் குறுக்கு வழியில் புரிந்து கொண்டிருக்கும் நாட்டின் சமூகப் பொறுப்பு உணர்ச்சியின்மையையும் ஒப்பிட்டுப் பாருங்கள். புரியும்.

'நமக்கு லாபம் ஆனால் பிறருக்கு நஷ்டமானாலும் அது பரவாயில்லை' என்று நினைக்கிற அரசியல் தலைவன், வர்த்தகன், சர்க்கார் ஊழியன், குமாஸ்தா எல்லாருமே சமூகப் பொறுப்பின் அரிச்சுவடிகூடப் புரியாதவர்கள்: புரிந்து கொள்ளவும் விரும்பாதவர்கள்.

'நமக்கு நியாயமான லாபம், பிறருக்கும் அதற்கு ஈடான பண்டத்தை விற்றிருக்கிறோம்' என்று நினைப்பவர்கள் சமூக வாழ்வின் எல்லாத் துறைகளிலும் குறைவாயிருக்கிற தேசத்தில் பொறுப்பு உணர்ச்சியும் குறைவாகத்தான் இருக்கும்; இருக்கிறது. 'எத்தனையோ பேர் அரண்மனை வாசல் பக்கம் வைத்திருக்கிற அண்டாவில் பால் பாலாக ஊற்றப் போகிறார்கள். நாம் ஒருத்தர் மட்டும் தண்ணீரை ஊற்றினால் யாருக்குத் தெரியப் போகிறது' என்று, அத்தனை பேருமே தனித் தனியாக நினைத்துத் தண்ணீரை மட்டுமே ஊற்றினாற் போலத்தான் நமது தேசிய சமூகப் பொறுப்பு உணர்ச்சியும் இருக்கிறது!

தனித் தனியே பொறுப்பில்லாமல் இருப்பது, குழுக்கள் குழுக்களாகப் பொறுப்பில்லாமல் இருப்பது என்று இதில் பல பிரிவுகள் இருக்கின்றன. பொறுப்பில்லாமல் இருப்பதன் விடலைத்தனமான சுகத்தை அதிக காலம் இந்நாட்டில் அனுபவித்து விட்டோம். இன்னும் அந்தச் சுகத்தை விட மனம் வரவில்லை. மாணவப் பருவம் முடிந்து உழைத்துக் குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டிய வயது வந்தும் அதைக் கண்டு கொள்ளாமல் சிறுபிள்ளைத்தனமாகவே விசிலடித்த படி நிற்கும் ஓர் இளைஞனைப் போல், எல்லா மக்களுமே இருந்தால் அந்தத் தேசம் என்ன ஆவது? அதன் எதிர்காலம் தான் என்ன ஆவது?

தனக்கும் பொறுப்போடு இருந்து, பிறருக்கும் பொறுப்போடு இருப்பது என்பது சிரமமான காரியம்தான். ஆனால் இந்தச் சிரமமான காரியத்தை ஒரு தேசம் எவ்வளவு காலத்துக்குத்தான் தள்ளிப் போட முடியும்? எல்லாத்துறையிலும் அக்கறையும், பொறுப்புமுள்ளவர்கள் பெருகாமல் ஒரு தேசம் பக்குவப்பட முடியாது. பக்குவப்பட்ட தனிநபர்கள் சிலர் எல்லாத் தேசத்திலும், எல்லாக் காலத்திலும் இருப்பார்கள். இந்தியாவிலும் இருந்தார்கள், இருக்கிறார்கள். ஆனால் மக்களும் பக்குவப்பட வேண்டும். மக்கள் பக்குவப்படாவிட்டால் ஜனநாயகம் சீரழியும். ★

## 2. நமது கலாசார வறுமைகள்

'வறுமையை விரட்ட வேண்டும், வறுமை ஒழிந்தா லொழிய நாடு உருப்படாது'—என்றெல்லாம் சில ஆண்டு களாக நம் காதில் விழுகிறது. அரசியல் தலைவர்கள் இவற் றைப் பற்றிப் பிரமாதமாகப் பேசுகிறார்கள், எழுது கிறார்கள்.

வறுமையைப் பற்றிப் பேசுவதும், எழுதுவதுமே வசதி யுள்ளவனாவதற்கு ஒரே வழியோ என்று பலர் குதர்க்க மாகப் புரிந்து கொள்ளும் அளவுக்கு, வறுமையை அரசியல் வாதிகள் இன்னும் ஒரு மேடைப் பிரசங்கப் பொருளாகவே வைத்திருக்கிறார்கள். தொடர்ந்து வைத்துக் கொண்டு மிருக்கிறார்கள்.

என்றாவது ஒரு நாள் ஏதாவது ஓர் அதிசயம் நடந்து, இந்நாட்டில் வறுமையே இல்லாமல் போய்விட்டால் பேசு வதற்கும் எழுதுவதற்கும் ஒன்றுமில்லாமல் போய்விட்ட அதிர்ச்சியில் பல அரசியல்வாதிகள் அப்போதே தூக்கு மாட்டிக் கொண்டு செத்துப் போய் விடுவார்களோ என்று கூட நான் நினைப்பதுண்டு.

இந்நாட்டில் வறுமையைப் பற்றி அளவுக்கதிகமாகப் பேசும் வசதியுள்ளவர்களும், அறியாமையைப் பற்றி அளவுக் கதிகமாகப் பேசும் அறிவுள்ளவர்களும், சத்தியத்தைப் பற்றி நிறைய அக்கறை காட்டுவதாகப் பாவிக்கும் அசத்திய வான்களும், பிறருடைய நியாயங்களுக்கு ஏஜென்ஸி எடுத்துக் கொண்டு வக்காலத்து வாங்கும் அநியாயப் பேர் வழிகளும், சொந்த முறையில் நீதியையும், நீதிமன்றங் களையும், கேவலப்படுத்திவிட்டு 'மக்களுக்கு நீதியும், சமத் துவமும் 'வழங்க நான் ஆட்சிக்கு வந்தால்தான் முடியும்' என்று பாசாங்கு செய்பவர்களும், எவ்வளவிற்கு நாகரிக

வறுமை, அல்லது கலாசார வறுமை உள்ளவர்கள் என்பதைச் சிந்திக்க வேண்டும்; எடுத்துச் சொல்லவும் வேண்டும்.

நாகரிகத்திலும், கலாசாரத்திலும் நாம் வேகமாக அடைந்து வரும் வறுமைகள்தான் அதிகம். கல்ச்சர், கல்ச்சர்டு, சிவிலைசேஷன், சிவிலைஸ்டு என்றெல்லாம் அகராதிகளில் பார்க்கும் வார்த்தைகளை ஞாபகப்படுத்திக் கொண்டால், நான் கூறும் புதிய வறுமைகள் என்னென்னவாக இருக்க முடியும் என்பதை ஓரளவு புரிந்து கொள்ளலாம். உண்மையில் நாம் பண்பட்டவர்கள்தானு என்று பிறர் சந்தேகப்படும் படியும், நாம் நாகரிகமடைந்தவர்கள் தானு என்று பிறர் சந்தேகப்படும்படியும் எத்தனை சமயங்களில், எத்தனை விதங்களில் நடந்து கொள்கிறோம்என்பதைக்கண்டு பிடித்துவிட்டால் நம் நாகரிக வறுமைகளையும், கலாசார வறுமைகளையும் ஓரளவு புரிந்து கொண்டு விடலாம் என்று தோன்றுகிறது.

கலை, கல்வி, கலாசாரம், நாகரிகம், பண்பாடு இவை பற்றி எல்லாம் நிறையப் பேசுகிறோம், எழுதுகிறோம். எண்ணுகிறோம். ஆனல், செயலளவில் இவை தொடர்பாக நம்மிடமுள்ள ஏழைமைகள் அல்லது பற்றுக்குறைகள்தான் அதிகம். இந்த இடைவெளியையே 'கிரிடிபிலிடி கேப்' (credibility gap) என்கிருர்கள். 'எஜுகேஷன்' 'கல்ச்சுரல் அஃபயர்ஸ்' என்ற பிரிவுகளின்கீழ் நமது மத்திய பட்ஜெட்டின் உள்ளே ஒதுக்கப்படும் பெரிய தொகைகளையும் நினைத்து நாட்டிலுள்ள கலாசார வறுமையையும் நினைத்தால், இரண்டையும் நம்மால் நம்பவே முடியாது.

இந்தியக் கலாசாரம், தமிழ்க் கலாசாரம் என்றெல்லாம் தனித் தனிப் பெயர்களைச் சௌகரியத்துக்காக வைத்துக் கொண்டிருக்கிறோமே ஒழிய 'கலாசாரம்' (கல்ச்சர் என்ற ஆங்கில வார்த்தையின் அர்த்தப்படி) என்னவோ ஒன்றுதான். பண்பட்டவர்கள், பண்படாதவர்கள் என்று இரண்டு பிரிவுகள்தான் இதில் இருக்க முடியும். மூன்ருவது வகைக்கு இதில் இடமே இல்லை.

சமயங்களில் 'கல்ச்சர்' என்ற வார்த்தையையும் 'கஸ்டம்ஸ் அண்ட் பிலீஃப்ஸ்' என்ற வார்த்தையையும் கலந்து குழப்பிக் கொள்வதால்தான் நமக்குப் பல சங்கடங்கள் வருகின்றன. பழக்க வழக்கங்கள், பிரதேசத்திற்குப் பிரதேசம் வேறுபடுகின்றன. ஆனால், கலாசாரமோ, கலாசாரமின்மையோ எல்லாப் பிரதேசத்திலும் ஒரே மாதிரியாகத்தான் இருக்க நேர்கிறது. உயர் படிப்பு, பண வசதி இவற்றால்தான் ஒருவர் 'கல்ச்சர்டு' ஆக பண்பட்டவராக இருக்க முடியுமென்று பலர் நினைக்கிறார்கள், சொல்கிறார்கள். இதை இன்று என்னால் ஒப்புக்கொள்ள முடியவில்லை. படிப்பற்ற, பண வசதியற்ற, இரயில் பாதையிலிருந்து முப்பது மைலும், பஸ் ரூட்டிலிருந்து இருபது மைலும் விலகியிருக்க முடிந்த ஒரு கிராமத்தில் சிலரிடம் நான் காண முடிந்த கல்ச்சரை. அல்லது நாகரிகத்தை இந்தியாவின் பிரதம மந்திரிகளாயிருந்த-இருக்கிற-சிலரிடம் கூடக் கண்டதில்லை; காண முடியவில்லை. ஜனாதிபதிகளைப் பற்றி இப்படி அபிப்பிராயம் சொல்லலாமா கூடாதா என்று எனக்குத் தெரியாது.

நமது புதுடில்லி, பம்பாய், சென்னை, கல்கத்தா-இந்த நகரங்களின் அகலமான, வெளிச்சமான, பகட்டான தெருக்களில் நவநாகரிக உடைகளுடனும், உதடுகளில் அரைகுறை ஆங்கிலத்துடனும் நடமாடிக் கொண்டிருக்கிற பலரிடமும் கலாசார வறுமையும், நாகரிகப் பற்றாக்குறையும்தான் மிக மிக அதிகம். நாட்டுப்புறம் என்றும் 'கண்ட்ரீ' என்றும் இவர்களால் வர்ணிக்கப்படுகிற பாமரர்களிடம் உள்ள மென்மையான, இங்கிதமான (நைஸிட்டீஸ், பிளீஸிங் மேனர்ஸ்) பல குணங்களை, பப்ளிக் ரிலேஷன்ஸையே ஒரு கலையாகப் பயின்றவர்களிடம்கூடக் காண முடிவதில்லை.

இங்கே படிக்காதவர்களிடம்கூட நிரம்பிக் காணப்படும் இந்தக் கலாசாரச் செழிப்பு, படித்தவர்களிடமும் நகரவாசிகள் பலரிடமும் ஏன் காணப்படவில்லை என்பதுதான் கேள்வி. நகரவாசிகளிடம் காணப்படுகிற பாசாங்கான நடிப்பு, போலிப் பாவனைகள், ஏமாற்று, வஞ்சனை, மோசடி

எதிலும் 'பிஸினஸ் லைக்'காக இருப்பது இவை எல்லாம் இப்போது கிராமங்களுக்கும் பரவுகின்றன என்பதுதான் புதிதாகக் காணும் அபாயம். 'அர்பனைஸேஷன்' என்னும் நகரமயமாதல் இப்படி ரிவர்ஸில் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.

நாம், நமது கிராமங்களின் இயல்பான, கள்ளங் கபடற்ற சுபாவத்தையும் மெல்ல மெல்ல மாற்றிக் கொண்டிருக்கிறோம். கலாசாரத்தை இழப்பதற்கு உபகரணங்களான சாதனங்களைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கிராமங்களுக்கும் அனுப்பி வைத்துக் கொண்டிருக்கிறோம். கருணை, அன்பு, பரஸ்பர—உதவி, சௌஜன்யம், சிநேகபாவம் இவை எல்லாம் அழிந்து, அழுத்தமான விருப்பு வெறுப்பு, எதிலும் 'அரசியலை' நுழைப்பது, அடிக்கடி கலவரங்களை விளைவிப்பது ஆகியவை கிராமங்களிலும் தொடங்கி விட்டன. நம்பிக்கை வறட்சி, எதையும் சந்தேகக் கண்களோடு பார்ப்பது ஆகிய நகரவாசிகளின் பெரும்பான்மைக் குணம் கிராமத்துக்கும் இப்போது போக ஆரம்பித்து விட்டது.

நல்லது எதிலும் நம்பிக்கை, யாரையும் அநாவசியமாகச் சந்தேகிக்காமல் இருப்பது, வலிய முன் வந்து உதவிகள் செய்வது, கடின உழைப்பைத் தவிர்க்கவோ, தள்ளிப் போடவோ முயலாமை ஆகிய இந்தியக் கிராமவாசிகளின் குணங்கள், நகர மனப்பான்மைகளின் ஊடுருவலால் இப்போது மாறி வருகின்றன. நகரவாசிகள் சிலருக்கு 'டேபிள் மேனர்ஸ்' மட்டுமே தெரியும். ஆனால், இந்தியக் கிராமவாசிக்கோ டேபிள், திண்ணை, வரப்பு வயல் வெளி, களை பிடுங்குமிடம் எல்லா இடத்திலும் எப்படி நாசூக்காக நடந்து கொள்ள வேண்டும் என்ற லௌகீகம் இரத்தத்தோடு ஊறிப் போயிருக்கும் என்பதைப் பார்க்கிற யாரும் உடனே புரிந்து கொள்ளலாம். 'கல்ச்சுரல் ஐடெண்டிடி' என்னும் கலாசாரச் சார்புக்கு இந்தியக் கிராமவாசிகளை உதாரணமாகச் சொல்லலாம் என்றால் 'கல்ச்சுரல் எலியனேஷன்' எனப்படும் கலாசார விலகி நிற்றலுக்கு, அல்லது அந்நியமாதலுக்கு நகரவாசிகளை உதாரணமாகச் சொல்ல

லாம். நகரவாசிகள் எதிலிருந்தும் அந்நியமாகி விடுவார்கள். மிகவும் சுலபமாகவே அந்நியமாகி விடுவதை அவர்களால் செய்துவிட முடியும். கட்சி விட்டுக் கட்சி மாறுவதையே சுலபமாகச் செய்யும் எம். எல். ஏ.க்கள். எம். பி.க்கள் அதை நகர நாகரிகமாகிய எலியனேஷனிலிருந்துதான் கற்றுக் கொண்டிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

செல்வம், செல்வாக்கு ஆகியவற்றில் நிமிர்ந்து நிற்கும், புதுவளம் பெற்ற தேசங்கள் சில தங்களுக்குப் பூர்வீகமான கலாசாரம் என்று என்று எதுவுமில்லையே என்பதாக வருந்துகின்றன, ஏங்குகின்றன.

ஆனுல், மிகவும் பழமையான கலாசாரங்களை உடைய நாமோ காசு, பணம் இல்லையே என்று வருந்தி, அவை உள்ள இடங்களைத் தேடிப் புறப்பட்டுக் கொண்டிருக்கிருேம். காசு, பணம் உள்ள தேசங்களிலிருந்து குடுமியும், நாமமும், பஞ்சகச்ச வேஷ்டியும்—ஜிப்பாவுமாக 'ஹரே ராமா ஹரே கிருஷ்ணு' என்று, கலாசாரத்தைத் தேடி இங்கே வந்து கொண்டிருக்கிருர்கள். இது வேடிக்கைதான்.

'வீ ஹேட் மணி ஹெட்டெட் லைஃப். வீ வாண்ட் காட் ஹெட்டெட் லைஃப்' என்பது அவர்களது புதிய கோஷமாயிருக்கிறது.

'வீ வாண்ட் மணி ஹெட்டெட் லைஃப் வீ ஹேட் காட் ஹெட்டெட் லைஃப்' என்பது நமது கோஷமாயில்லை என்ருலும் மனப்பாங்காகவாவது இருப்பதை ஒப்புக் கொண்டுதான் ஆக வேண்டும். கலாசாரமின்மையையே ஒருகலாசாரமாகப் பரப்பும் விரக்தி இயக்கங்கள் நாட்டில் உருவானது ஒரு காரணம். தலைவர்களில் காந்தியிடம் தென்பட்ட நூறு சதவிகித இந்தியத் தன்மை, அதன் பின் யாரிடமும் தென்படாமல் போனது ஒரு காரணம். காந்தி, படேல், போன்ற தலைவர்களிடம் பெரியபெரிய படிப்புக்குப் குப் பின்பும் 'இந்தியன்னெஸ்' எனப்படும் இந்தியத் தன்மை, இந்திய பாணியிலான அணுகுமுறை, இந்திய கலாசாரப் பிடிப்பு எல்லாமே இருந்தன. பின்பு வரவர மற்றவர்களிடம், அது கழுதை தேய்ந்து கட்டெறும்பான கதை

யாகி விட்டது. இந்தியத் தன்மையோடு இருப்பதே கேவலம் என்ற மனப்பான்மை ஆதிக்கம் பெற்று வளர்ந்து விட்டது.

காந்திக்கும், பட்டேலுக்கும் பின்னர் 1960-க்கும் 1979-க்கும் பின் அசல் கண்டு பிடிப்பாக இந்தியாவில்-புதியவர்களால் வளர்க்கப்பட்ட ஒரே ஒரு நவீனமோஸ்தர் கலா (அநாசாரம்) சாரம் கட்சி மாறுதல்கள்தான். இதை வேகமாக வளர்த்த பெருமை முழுவதையும் அவர்களுக்கும், அவர்களைப் போன்ற அரசியல் வாதிகளுக்குமே நாம் தர வேண்டும் என்பதில் யாருக்கும் இரண்டாவது அபிப் பிராயமே இருக்க வழி இல்லை.

இந்த 'கல்ச்சுரல் பாவர்ட்டி' அல்லது இன்னும் கடுமை யாகக் கூறப் புகுந்தால் 'கல்ச்சுரல் பாங்க்ரப்ஸி, நிலைமை உருவாவதைப் பற்றி யாருமே இங்கு கவலைநடவில்லை. கலாசார வறுமைகளோ, கலாசார திவால் நிலைமையோ பொறுப்புள்ள யாரையும் மன வேதனைப்படுத்தவில்லை, வடக்கே ஜெ. பி. 'மொரார்ஜி, தெற்கே ராஜாஜி, காமராஜ் ஆகியோர் கொஞ்சம் இந்த வறுமையைக் களைய முன் வந்து முயன்றுர்கள் என்று கூறலாம். அவையும் அப் பழுக்கற்ற முயற்சிகள் என்ற அளவோடு மட்டுமே நின்று போயின. இந்தக் கலாசார வறுமைகளையும், திவால் நிலை மையையும் எதிர்த்துப் போராடி, தேசத்தை ஒழுங்கு செய்ய முன் வரும் முழு இந்தியத் தன்மையோடு கூடிய ஒரு தலைவரைத் தேசம் இன்று எதிர்பார்த்துக் காத்திருக்கிறது என்று கூறலாமா?



# 3. புதிய வெள்ளமும் பழைய அணையும்

சர்க்கார் உத்தியோகங்களிலிருந்து ஒய்வு பெறும் வயதை 55-லிருந்து 58-ஆக்கிவிட்டார்கள். ஒருபுறம் இளம் வயதுப் பட்டதாரிகளும், படித்துவிட்டு வேலை இல்லாமல் இருப்பவர்களும் நாளுக்கு நாள் அதிகரித்து வரும்போது, மறுபுறம் ஒய்வு பெறும் வயதை அதிகப்படுத்துவதும், ஒய்வு பெற்றவர்களுக்குத் திரும்பவும் ஏதாவது ஓர் உத்தியோகம் தருவதும் ஆபத்தானது. ஆனால், இன்று ஆபத்துக்கள்தான் நாட்டில் சகஜமாக இருக்கின்றன.

சமீபத்தில் மிக நாகரிகமாக உடையணிந்த ஒரு வாலிபர், ''பி. யூ. சி. படித்திருக்கிறேன். கிளார்க், டைப்பிஸ்ட் இது மாதிரி வேலைதான் வேண்டும் என்பதில்லை. பாக்கிங், பார்சல் கட்டுவது இதுமாதிரி ஏதாவது வேலை கிடைத்தால்கூடப் போதுமானது'' என்று தேடி வந்து கேட்டபோது நான் ஆச்சரியப்பட்டுப் போனேன். என்னால் அதை நம்பவே முடியாமல் இருந்தது.

'பாக்கிங்-பார்சல் கட்டுவது' சம்பந்தமான வேலைக்கு அவரைச் சிபாரிசு செய்து ஒரு காரியாலயத்தில் விசாரித்த போது, ''பி. யூ. ஸி. படித்துவிட்டு இந்த வேலைக்கு ஏன் சார் வர்றீங்க? வேற ஏதாவது நல்ல வேலையாப் பாருங்க... இந்த மாதிரி முரட்டு வேலையெல்லாம் படிச்சவங்க உடம்பு வணங்கிச் செய்ய முடியாது...'' என்று மறுத்துவிட்டார்கள். அவர் பார்சல் கட்டத் தயாராயிருந்தும் வேலை கொடுப்பவர்கள் தயாராயில்லை.

'ஏதாவது ஒரு அட்டெண்டர் வேலையாவது கிடைத்தால் போதும்' என்று மீண்டும் அவர் மன்றாடினார். பி.யூ.சி. படித்திருக்கிறார் என்ற பீடிகையுடன் அட்டெண்டர் வேலைக்குச் சொல்லி, முயன்றபோது, ''சார்! காபி வாங்கிவர,

போஸ்டாபீஸுக்குப் போக, ஸ்டாம்பு ஒட்ட, இதுமாதிரிக் காரியங்களைச் செய்யப் படிச்சவங்களுக்கு உடம்பு வணங்காது. இந்த வேலைக்கு ஏதாவது தேட் ஃபாரம் பெயிலான பையன்—சைக்கிள் ஓட்டத் தெரிஞ்சவனுகக் கிடைச்சாலே போதும்'' என்று பதில் வந்தது. வேலை இல்லை என்று மறுக்கும்போது மட்டுமே 'பி. யூ. சி. பெரிய படிப்பு' என்று காரணம் காட்டி மறுத்தார்களே ஒழிய 'வேலை இருக்கிறது'—என்ற இடங்களில் எல்லாம் 'பி. யூ. சி என்ன பிரமாதப் படிப்பு சார்? பி. ஏ., எம். ஏ., எல்லாம் சோத்துக்குத் தாளம் போடறுங்க. ஆடிக் காத்திலே அம்மிக் குளவி பறக்கறப்பச் சருகு என்ன செய்துட முடியும்?' என்று, பி. யூ. சி. ஒரு படிப்பே இல்லை என்பதுபோல் பதில் வந்தது. என்ன முரண்பாடு பாருங்கள்!

(1) படித்தவர்களுக்கு வேலை இல்லை என்பது ஒரு வாதம். (2) படித்தவர்கள் கடின உழைப்பு அடங்கிய வேலையைச் செய்யமாட்டார்கள் என்பது மற்றொரு வாதம். (3) நாசூக்கான வேலைக்கு மட்டுமே அதிகமாகம் படித்தவர்கள் லாயக்கு என்பது மற்றொரு வாதம். (4) குறைந்த படிப்புள்ளவர்கள் பெரிய வேலைக்கு லாயக்கில்லை என்பது இன்னொரு வாதம். சில வேலைகள் படிக்காதவர்களுக்குச் சுலபமாகத் தரப்படுகிறது. அந்த வேலைகளையே படித்தவர்கள் பெற முடிவதில்லை. படிப்பு இடைஞ்சலாகவும் இருக்கிறது; தகுதியாகவும் இருக்கிறது.

'வேலையில்லாத இளைஞர்களுக்கு எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் வேலை வாய்ப்பு அளிக்கப் போகிறோம்' என்று கூறிக்கொண்டே மறுபுறம், ஏற்கெனவே வேலை பார்த்துக் கொண்டிருப்பவர்களின் உத்தியோக வயதை 55-லிருந்து 58-ஆக உயர்த்துகிறோம் என்று அறிவிக்கிறார்கள். வேலையில்லாதவர்களின் தொகை இதனால் கணிசமாகப் பெருகும். பாலுக்கும் காவல் பூனைக்கும் தோழன் என்ற மாதிரித்தான் பள்ளிகள், கல்லூரிகள், சர்வகலாசாலைகள் என்ற மெஷின்கள் அறைத்து வெளியே தள்ளும் குவியல் குவியலான படித்த இளைஞர்களைக் காயப் போட்டுவிட்டு,

ஓய்வு பெறும் வயதை உயர்த்துவதும், ஓய்வு பெற்றவர்களுக்கே மேலும் உத்தியோகங்கள் கொடுத்துக்கொண்டிருப்பதும் நாட்டில் குழப்பத்தைத்தான் உண்டாக்கப் போகிறது. படித்துவிட்டு வேலையில்லாமல் இருக்கும் இளைஞர்களின் தொகை பெருகப் பெருக, வம்பும், குழப்பமும், அமைதியின்மையும் பெருகத்தான் செய்யும். அதைத் தவிர்க்க முடியாது.

நன்றாகச் சாணையிட்டுத் தீட்டிய புது அரிவாள்களைத் துருப்பிடிக்கப் போட்டுவிட்டுப் பழைய மொண்ணை அரிவாள்களாலேயே வேலையை நடத்திக் கொள்ளலாம் என்பது போன்றதுதான், இளைஞர்களை விரக்தியடைய விட்டுவிட்டுக் கிழவர்களின் ஓய்வுக்கால வயதை அதிகப்படுத்திக் கொண்டிருப்பது ஓய்வுக் கால வயதை 55-ல் இருந்து ஐம்பதாகக் குறைத்தால்கூட நல்லது.

என்றோ ஒரு காலத்தில் ஏதோ ஒன்று முன்மாதிரியாக நடந்துவிட்டால் அப்புறம் அதை மறு பரிசீலனை செய்யாமலே கடைப்பிடிப்பது என்பதுதான் நம்நாட்டில் வழக்கம். படித்தவர்கள் குறைவாயிருந்த காலத்தில் ஓய்வு பெற்றவர்களைத் துணை வேந்தர்களாகவும், வேறு பெரிய பதவிகளிலும் நியமித்தார்கள்.

இன்று, கல்வி உலகில் இருபது வருஷம், முப்பது வருஷம் புரொபஸராகவும், ரீடராகவும், இருக்கிற சீனியர் ஆட்களுக்கு வைஸ்—சான்ஸலர் பதவிகளைத் தராமல், அந்தத் துறையோடு சம்பந்தமே இல்லாத, எங்கிருந்தோ ஓய்வு பெற்று வரும் ஒருவரைத் துணைவேந்தராக நியமிப்பது என்பது கொடுமை. எப்படி இருபது வருஷம் இங்கிலீஷ் புரொபஸராக இருந்து ஓய்வு பெறுபவர், ஓய்வு பெற்ற பின் நீதிபதியாக நியமிக்கப்பட முடியாதோ, அப்படியே பத்து வருஷம் நீதிபதியாக இருந்து ஓய்வு பெறும் ஒருவர் திடீரென்று 'அகடெமிக்' துறைக்கு நியமிக்கப்படக் கூடாது. இதனுல் 'அகடெமிக்' உலகிலேயே உருவாகும் அனுபவசாலிகளுக்கு வாய்ப்பில்லாமல் போகிறது. ஓய்வு பெற்றபின் பெரும் பதவிகளுக்கு வரும் பலர், தங்களை அப்

பதவியில் நியமித்த அரசாங்கத்துக்கு விசுவாசம் காட்டு வதில், நாலில் ஒரு பங்கு கூடப் பதவிக்கும், மக்களுக்கும் விசுவாசம் காட்டுவதில்லை.

இழுபடும் ஜவ்வு மிட்டாய் மாதிரி வருஷங்கள் நீண்டு கொண்டே போகக்கூடிய சில மூவாயிர ரூபாய்—நாலாயிர ரூபாய்ப்பதவிகளைத்தேடி ஓய்வு பெற்ற பெரிய உத்தியோகஸ்தர்கள் பிடித்துக்கொள்கிறார்கள். அந்தப் பதவி வேலைகளை அவர்களது ஆயுட் காலம்வரை இழுத்தடிக்கும் தந்திரமும் அவர்களுக்குத் தெரிந்திருக்கிறது.

ஆனால், அதே சமயத்தில் சுறுசுறுப்பும் ஆர்வமும், அறிவும், சமயோசித புத்தியுமுள்ள படித்த இளைஞர்கள் நடுத் தெருக்களில் வேலை தேடி அலைந்து துருப்பிடித்துப் போய்க்கொண்டிருக்கிறார்கள். இளைஞர்களைக் கரையேற்றுவதுதான் முதல் வேலை என்று பதவிக்குப் போகிற ஒவ்வோர் அரசியல் கட்சியும் நாற்காலிக்குப் போனவுடன் அதை மறந்துவிடுகிறது. இந்தக் கண்ணோட்டத்தில் பார்த்தால் 18 வயது நிரம்பிய அனைவருக்கும் வாக்குரிமை அளித்தால்தான் இப்பிரச்னையைத் தீர்க்க முடியும் போலிருக்கிறது. "இளைஞர்களுக்குத்தான் இந்நாட்டின் எதிர்காலத்தை முடிவு செய்யும் பெரும் பொறுப்பு இருக்கிறது' என்று மேடையில் முழங்காத தலைவர் இல்லை. ஆனால் இந்நாட்டு இளைஞர்களில் பெரும்பாலோர் தங்கள் சொந்த எதிர்காலத்தையே இன்னும் முடிவு செய்ய இயலாதவர்களாக வைக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதுதான் பிரத்யட்ச உண்மையாகும்.

உத்தியோக வயது விஷயம் தவிர நம் நாட்டில் பல்வேறு அரசாங்க அமைப்புக்களிலும், அரசாங்கச் சார்புள்ள அமைப்புக்களிலும் உள்ள சம்பள விகிதாசார வித்தியாசம் பெரும் குழப்பத்தை உண்டாக்கக் கூடியது. சில நிறுவனங்களில் அட்டெண்டர், டிரைவர் வாங்குகிற சம்பளம் வேறு சில நிறுவனங்களில் கிளார்க், ஹெட்கிளார்க் சம்பளத்தை விட அதிகமாயிருக்கிறது. பாங்குகள், எல். ஐ. சி. யில் வேலை பார்ப்பது அதிருஷ்டமாகக் கருதப்படுகிறது. ஒரு

சப்-ரிஜிஸ்திரார் ஆபீஸில் தலைமைப் பதிவாளராக இருப்பதைவிட ஒரு பாங்கில் கிளர்க்காக இருப்பது வருமான ரீதியாகப் பயன் தருகிறது. இதனால் சப்-ரிஜிஸ்திரார் வேறு வழிகளில் 'பணம் பண்ண' நேரிடுகிறது. சர்க்கார் வகை ஆபீஸ்களில் லஞ்சம் பெருகுவதற்கு இதுவும் ஒரு காரணமாகும். சம்பள விகித வித்தியாசங்கள் தவிர்க்கப்பட்டு உழைப்புக்கு ஏற்ற ஊதியம் அமைக்கப்பட வேண்டும்.

ஓய்வு பெறும் வயதை அதிகப்படுத்திவிட்டுப் பள்ளி, கல்லூரிகளில் அட்மிஷனைத் தொடர்ந்து பழைய ரீதியில் செய்துகொண்டிருந்தால் ஓர் அணையிலிருந்து தண்ணீர் வெளியேறாமலிருக்கும் நிரம்பிய நிலையில், மேலும் மேலும் புதிய தண்ணீர் வந்து நிரம்பிக்கொண்டிருப்பதுபோல் ஆகிவிடும். பழைய தண்ணீர் திறந்துவிடப் படாமலே புதிய தண்ணீரையும் தாங்கினால் அணை உடையத்தான் செய்யும். 58வரை ரெகுலர் செர்வீஸ்—அப்புறம் 2 வயது எக்ஸ்டென்ஷன் என்ற ரீதியில் போனால், இன்றுள்ள வேலையில்லாப் பட்டதாரிகள் கணிசமாகத் தொடர்ந்து வேலையின்றித் தேங்கிக் கிடப்பார்கள் என்பது தவிர்க்க முடியாதது.

உதாரணமாக, சர்க்கார் ஆபீஸ்களில் 1979 மார்ச்சில் (55 வயதுக் கணக்குப்படி) ரிட்டையராக வேண்டிய பலர் புதுச் சட்டப்படி (58 வயது நீட்டிப்புப்படி) 1982 மார்ச்சில் தான் ஓய்வு பெறுவார்கள். இதன்படி, வேலைக்குக் காத்திருப்பவர்களின் நீண்ட கியூ இன்னும் மூன்று வருஷத்துக்கு மேலே நகரவே நகராது. நகராத கியூவில் மனத்தாங்கலும், எரிச்சலும், சண்டை சச்சரவுகளும், போட்டிகளும் அதிகமாக ஏற்படும். நடைமுறைச் சிக்கல்களைக் கருதாமலே சட்டங்களைப் போட்டுவிட்டால் பயனை அனுபவித்துத்தான் ஆகவேண்டியிருக்கும். 'அவுட்லெட்' இல்லாமலே ஒரு பழங்கால அணையில் மேலும் மேலும் (பெரியாறு அணை போல என்று வைத்துக்கொள்ளுங்களேன்) புதிய தண்ணீரைக் காக்க வைப்பதைவிடக் கோளாறான காரியம் வேறு எதுவும் இருக்க முடியாது.

உடலுழைப்பு, செல்ஃப் எம்ப்ளாய்மெண்ட், வியாபாரம், புதிய முயற்சிகள் ஆகியவற்றில் 'எண்டர்ப்ரைஸிங்' ஆக இறங்குவதற்குத் துணியும் வாலிபர்கள் தென்னிந்தியாவில் மிகவும் குறைவு. நம் கல்வி முறை அவர்களை அவ்வளவு துணிந்தவர்களாகவும், நம்பிக்கை உள்ளவர்களாகவும் வளர்க்கவில்லை. ஆகவே, 90 சதவிகித இளைஞர்கள் உத்தியோகங்களை நம்பித்தான் படிக்கிறார்கள். படிப்பு முடிவதற்கும், உத்தியோகம் கிடைப்பதற்குமான இடைவெளி அதிகமாக அதிகமாக நகரங்களில் குழப்பம், ஈவ்டீஸிங், திருட்டு, நாகரிகமான கொலைகள், பிக்பாக்கெட், மோசடி, ஏமாற்று என்று பல தகராறுகள் பெருக வாய்ப்புண்டு. படித்த இளைஞர்களின் விரக்தி ஒரு நாட்டைப் பாழாக்கி விடும் தன்மை வாய்ந்தது.

சர்க்கார், உத்தியோக வயதை 58 ஆக்கியதன் மூலம் அந்த விரக்தி வளர்க்கப்படுமே ஒழியக் குறைவதற்கு வழி இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. தயவுசெய்து உடைவதற்குமுன் அணையையும் அணைக்கு முன்னுள்ள உயிர்களையும் காக்கப் பாருங்களேன்.



# 4. நமது புதிய வறுமைகள்

இந்தியாவையும் இந்திய மக்களையும் பொறுத்து ஏழ்மையும், வயிற்றுப் பசியும் மட்டுமே பெரிய வறுமைகளாகச் சொல்லப்படுகின்றன. எழுதப்படுகின்றன. ஆனால், உண்மையில் இவற்றைவிடப் பெரிய—இவற்றைவிடப் பயங்கரமான பல வறுமைகள் நம்மிடம் உள்ளன. வயிற்றுப் பசியையும், ஏழைமையையும்விட நம்மை அதிகமாகப் பாதிக்கக்கூடிய வறுமைகள் அவைதான். நுண்ணுணர்வு இன்மையைவிடப் பெரிய வறுமை வேறு ஒன்றுமில்லை என்கிற அர்த்தமுள்ள ஒரு பழைய தமிழ்ப் பாட்டு இருக்கிறது. இந்தத் தமிழ்ப் பாட்டின் கருத்தை அடிப்படையாக வைத்துப் பார்க்கும் போது, வயிற்றுப்பசியைத் தவிரவும் வேறு பல வறுமைகள் இருக்க முடியுமென்று தெரிகிறது.

ஒருவரது அறியாமையை மன்னிக்கலாம்; அறிய மறுப்பதை எப்படி மன்னிப்பது? புரியாமையை மன்னிக்கலாம்; புரிந்துகொள்ள மறுப்பதை எப்படி மன்னிப்பது? உணராமையை மன்னிக்கலாம்; உணர்ந்துகொள்ள மறுப்பதை எப்படி மன்னிப்பது?

இன்று உண்மையில் நாம், பலவற்றை அறியாமல் மட்டுமில்லை; அறிந்துகொள்ள மறுத்துக்கொண்டுமிருக்கிறோம் என்பதுதான் உண்மை.

இன்றைய நமது புதிய வறுமைகளில் முதலில் வருவது விரைவாகப் பெருகிவரும் கலாசார வறுமை. சிலைகள், கோவில் தேர்களின் பகுதிகள், பஞ்சலோக விக்கிரகங்கள் இவற்றை அந்நிய நாட்டுக்குக் கடத்தி விற்பவர்களைப்பற்றி அதிகம் கேள்விப்படுகிறோம். சிலர், இவற்றைக் கடத்தி விற்கும் நம்மவர்களைக் குறை கூறுவதற்குப் பதில், இவற்றை மதித்து விலை கொடுத்து வாங்கும் அந்நியர்களைக்குறைகூறிக் கண்டபடி தூற்றுகிறோம். எய்தவன் இருக்க அம்பை நோவதில் பயன் என்ன?

நமது சிலைகள், நமது கலைகள், நமது சங்கீதம், நமது பரத நாட்டியம் நமது பழஞ் சிறப்புக்கள் எல்லாவற்றையும் எந்த நிலையிலும், எந்த விலையிலும் விற்றுவிட, அல்லது விட்டுவிட நாம் தயாராயிருக்கிறோம். அவற்றை வாங்கவும், பாதுகாக்கவும், இரசிக்கவும், பத்திரப்படுத்தி வைத்துக் கொள்ளவும் மேற்கு நாட்டுக்காரர்கள் தயாராயிருக்கிறார்கள். எதையும் வரவேற்று மதிக்கத் தயாராயிருக்கும் மனிதர்கள் ஒரு பக்கம். எதையும் விற்கவும் இழக்கவும் தயாராயிருக்கும் நாம் ஒரு பக்கம்.

நம்முடைய கோவில்களில் தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி படிப்பவர்களை ஏளனமாகப் பார்க்கிறோம். ஷேக்ஸ்பியரையும், மில்டனையும் கொண்டாடுகிறோம். கம்பராமாயணம் படிப்பதைப் பெருமையாக நினைப்பதில்லை. தமிழை வாழ்த்துகிறோம். ஆங்கிலத்தைக் கொண்டாடுகிறோம்.

தாய் மொழியைப் பிழையாகவும், தவறாகவும், படுமோசமாகவும் எழுதுவதற்குக் கூசுவதில்லை. ஆங்கிலத்தில் ஒரு ஸ்பெல்லிங் மிஸ்டேக் வந்தால்கூடக் கூசுகிறோம். கூச வைக்கிறோம்.

உலகின் பல நாடுகளை நேசத்திலும், நல்லெண்ணத்திலும் வைத்துக் கொள்வதற்காகவும், எல்லா நாடுகளின் கலாசார உறவுக்காகவும், கலாசாரச் செல்வங்களை மதிப்பதற்காகவும் அமெரிக்காகவும், ரஷ்யாவும் போட்டி போட்டுக்கொண்டு முயல்கின்றன.

நாமோ நமது கலாசாரப் பிடிப்புள்ள சங்கீதம், நாடகம், நாட்டியம், கோவில்கள், குளங்கள், தேர், திருவிழா, தெருக்கூத்து, கிராமியக் கலைகள் எல்லாவற்றையும் மெல்ல மெல்ல மறந்தும் துறந்தும் வருகிறோம்.

இன்னும் பத்து வருஷங்களுக்குப் பின் கர்நாடக சங்கீதத்தின் கதி என்னவாக இருக்கும் என்று எண்ணிப் பார்க்கவே பயமாயிருக்கிறது. நாகரிக வளர்ச்சியிலும் நகரவளர்ச்சியிலும் தன் புராதனமான பண்பாடுகளையும், கலாசாரத்தையும் இழக்காத தேசம்தான் மானமுள்ள தேசமாயிருக்க முடியும்.

நமது பேராசிரியர்கள் இங்கர்சாலேப்பற்றியும், சீனப் பேரறிஞன் கன்பூஷியஸைப் பற்றியும் மேடைகளில் பேசுவதை மக்கள் காண்கிருர்கள். 30 வயதுக்குள் ஆதிசங்கரர் பாரத நாடு முழுவதும் ஞான யாத்திரை செய்ததைப் பற்றிப் பேசுவதற்கு மறந்து விடுகிருர்கள். மிக்சிகன் பல்கலேக் கழகம் (அமெரிக்கா), ரஷ்ய லெனின்கிராடு பல்கலேக்கழகம், போலந்தின் வார்ஸா பல்கலேக்கழகம் எல்லாவற்றிலும் காளிதாஸரின் சாகுந்தலத்தையும், சோமதேவரின் கதாசரித் சாகரத்தையும், பவபூதியின் உத்தரராம சரிதத்தையும் அந்தந்த நாட்டு மாணவர்கள் இந்திய இயலே (**Indology**) அறிவதற்காக ஆராய்ந்து கொண்டிருக்கிருர்கள். ஆனல், இன்றைய தென்னிந்திய மாணவனுக்குச் சினிமா நட்சத்திரங்களின் பெயர்கள் தெரிந்த அளவுக்குக் கூட, இந்திய இலக்கியத்தை வளப்படுத்திய மேற்படி மகா கவிகளேத் தெரியாது.

ஒரு தென்னிந்திய மாணவனுக்கு 'டெட்ராய்ட்' பற்றியும், மான்செஸ்டர் பற்றியும் தெரிந்திருக்கும். கிருஷ்ணுபுரத்துச் சிற்பங்களேப் பற்றியும், திரிகூடராசப்பர் எழுதிய அற்புதமான திருக்குற்ருலக் குறவஞ்சியைப் பற்றியும் எதுவும் தெரிந்திருக்காது.

நம்மைப் பற்றி மட்டுமே தெரிந்து கொள்ளும் கல்வி போதுமானதில்லே என்பார்கள். ஆனல் நம்மைப்பற்றி அறவே தெரிந்து கொள்ளாத கல்வி நியாயமானதில்லே என்பேன் நான்.

கலேச் செல்வங்களான நமது சொந்தக் கோவில்களே அலட்சியப்படுத்துவது, சொந்தக் காவியங்கள், இலக்கியங்களேக் கிண்டல் செய்வது, குதர்க்கம் பேசுவது, நமது மக்களின் பழக்க வழக்கங்களே இகழ்வது, நமது தேசத்து மொழிகளேக் கேவலப்படுத்துவது, நம்மவர்களின் கிராமீய கலாசாரத்தை அருவருப்போடு ஒதுக்கி விலக்கி-நம்மை மட்டும் உயர்வாக நினேத்துக் கொள்வது ஆகிய புதிய வறுமைகள் இன்றைய இளேஞர்களேப் பற்றியிருக்கின்றன. இதை மெல்ல மெல்லவாவது மாற்ற வேண்டும். இல்லா

விடில், பொதுவான வறுமையைவிட அபாயத்தை உண் டாக்கக்கூடிய வறுமைகள் ஆகும் அவை:

உழைப்பதைக் கேவலமாகவும், அவசியமற்றதாகவும் நினைக்கும் மனப்பான்மை இளைஞர்களிடையே உருவாகி வருகிறது. ஏர் பிடித்து நிலத்தை உழுகிறவனைவிட அவன் அனுப்பும் பணத்தில், வெள்ளைச் சட்டை-அரும்பு மீசை-கிருதாவுடன் சினிமாக் கொட்டகை வாசலில் வளைய வரும் அவன் மகனை ஒரு மாணவன் மதிப்புக்குரியவன் என்று நான் சொல்ல மாட்டேன்.

படிப்பு, மனத்தை இளகச் செய்து கருணை மயமாக்க வேண்டும். பிறரை மதிக்கக் கற்றுத்தர வேண்டும். கடின உழைப்பில் நம்பிக்கை கொள்ளச் செய்ய வேண்டும். முரட்டுத்தனத்தை மட்டும் கற்றுத் தருகிற படிப்பில், வெற்றுப் பிடிவாதத்தை மட்டும் கற்றுத் தருகிற படிப்பில், எங்கோ எதிலோ வறுமை இருக்கவேண்டும்.

சினிமாவில் வருகிற கனவு சீன் மாதிரி ஒட்டாமல் வாழப் பழகிக்கொண்டு வரும் இளம் தலைமுறையைப் பற்றி, நாட்டில் பொறுப்புள்ள யாரும் கவலைப்படவில்லை. சில சமயங்களில் அரசியல் கட்சிகள் சிலவற்றுக்கும், தலைவர்கள் சிலருக்குமே மாணவர்கள் இப்படி இருப்பது பிரயோஜன மாக இருக்கிறது. அவர்கள் மனத்தில் எதன் மேலாவது வெறுப்பைத் தூண்டிவிடவும், எதற்காகவாவது பஸ்ஸையும், இரயிலையும் கொளுத்தத் தூண்டி விடவும் இந்த நிலை ஏற்றதாக இருப்பதால்தானோ என்னவோ இதை யாரும் மாற்ற முயலவில்லை. **Poverty line, below poverty line** பற்றி எல்லாம் பேசுகிறுமே ஒழிய **Cultural line, below cultural line** பற்றிக் கவலைப்படுவதில்லை.

கவலையோடும், கவனத்தோடும் சிந்திக்கும்போது நம் நாட்டின் பொது வறுமையைவிட இந்தப் புதிய வறுமைகள் பயப்பட வைக்கின்றன.

கனத்த ஜமுக்காளத்தை ஒத்த போர்வையை மேலே போர்த்திக்கொண்டு வந்து இறங்கும், வித்தியாசமான உடைகளோடு கூடிய பல்வேறு ஆப்பிரிக்கர்கள் ஹீத்ரு

விமான நிலையத்தில் வந்து இறங்கும் தோற்றத்தையும், பஞ்சகச்சம், உச்சிக்குடுமி, நாமம், விபூதியோடு ஒரு சிலர் நாகரிக இளைஞர்களின் மத்தியிலே நடந்து போனாலே கேலி செய்யும் நம் நாட்டு மனப்பான்மையையும் ஒப்பிட்டு எண்ணிப்பார்க்கும்போது எனக்கு வேடிக்கையாயிருக்கிறது. உடை, சின்னம், தோற்றம்இவை எல்லாம் ஒவ்வொரு தனி மனிதனுக்கும் சொந்தமானவிஷயங்கள். கறுப்பு—சிவப்புத் துண்டு, இரட்டை இலைக் கரை வேஷ்டி, உதயசூரியன் கரை வேஷ்டி எல்லாம் எப்படிச் சின்னங்களோ அப்படித்தான் விபூதிப் பூச்சு, நாமம், தார் வைத்து வேஷ்டி கட்டுவது ஆகியவையும் சிலரது தனிப்பட்ட பழக்க வழக்கங்கள்.

பண்பாட்டுக் குறைபாடுகளில் மிகவும் கேவலமான அம்சம் பிறர் உண்பதையும், உடுப்பதையும் கேலி செய்து மகிழ்வது. இன்றைய இளைஞர்களிடம் எதையும் (தெருவில் நடக்கும் பெண்கள், கிரிக்கெட்டில் தங்களுக்குப் பிடிக்காத ஆட்டக்காரர், கற்பிக்கும் ஆசிரியர், படிக்கும் பாடங்கள், இன்னும் பலப்பல) கேலி செய்து மகிழ்கிற பழக்கம்தான் அதிகமாக இருக்கிறது. பிறரைக் கேலி செய்து மகிழ்கிற பழக்கத்தைப்போல் அநாகரிகமான பழக்கம் வேறொன்று இருக்க முடியாது. கலாசாரம், இலக்கியம், மொழி, பெண்களின் அழகு, பண்பாடு போன்ற பல விஷயங்களை நம் இளைஞர்கள் இன்னும் கேலி செய்து சிரித்து மகிழ்வதற்குரிய பண்டங்களாகவே எண்ணி வருகிறார்கள்.

இங்கு உருவாகி வரும் புதிய வறுமைகளின் அடையாளமே பிறர் நோகக் கேலி செய்து மகிழும் இந்தப் பழக்கம்தான், இந்த மாதிரியான போக்கு ஒரு வளரும் நாட்டுக்கு நல்லதில்லை.



# 5. எதையாவது எப்படியாவது

இரயிலில் டிக்கெட் இல்லாமல் பிரயாணம் செய்கிறவன் டிக்கெட் பரிசோதகர் வருகிற ஓரிரு கணங்களுக்கு, எங்காவது எப்படியாவது மறைந்து நின்று சமாளிக்க முயல்கிறுன். டிக்கெட் இல்லாமலே பிரயாணத்தை வெற்றிகரமாக முடித்துத் தான் வந்து இறங்க வேண்டிய ஸ்டேஷனில் இறங்கி விட்டாலோ டிக்கெட் பரிசோதகர் நிற்கும் கேட்டில், அல்லது வேறு சந்துகளின் வழியாக எதையாவது பண்ணி எப்படியாவது வெளியே வந்துவிட முயல்கிறுன். தவருன, இந்தப் பிரயாணியின் நிதானமில்லாத அவசரம் தான் இன்று வாழ்வின் சகல துறைகளிலும் தெரிகிறது.

பரீட்சை ஹால்களில் குத்து வெட்டுக்கள் நடைபெறுகின்றன. ஏனென்ருல், மாணவர்கள் எதையாவது பண்ணி எப்படியாவது தேர்ச்சியும், வெற்றியும் பெற முயல்கிருர்கள்.

தேர்தல்களில் குத்து வெட்டு, அடிதடி, சூறையாடல், கொலைகள் போன்றவை வழக்கமாகி விட்டன. ஏனெனில், வேட்பாளர்கள் எதையாவது பண்ணி எப்படியாவது யாருடனுவது கூட்டுச் சேர்ந்து வெற்றி பெற முயல்கிருர்கள்.

கடைவீதிகளில் கலப்படம், அளவுக்குக் குறைவாக நிறுத்தளித்தல், விலை உயர்வு இவை இயல்பாக நிகழ்கின்றன. எதையாவது பண்ணி எப்படியாவது லாபம் சம்பாதிக்க முயல்கிருர்கள். வியாபாரிகள் வியாபார தர்மங்களைப் பற்றிச் சிறிதும் கவலைப்படுவதே இல்லை.

பத்திரிகைகளின் விற்பனைப் போட்டியும், சர்க்குலேஷன் எண்ணிக்கையை மற்றவர்களைவிட அதிகப்படுத்திக் காட்டும் ஆசையும் மிகுதியானதாக இருக்கிறது. ஆகவே, எதை

யாவது பண்ணி, எப்படியாவது சர்க்குலேஷனை உயர்த்த முயல்கிறார்கள்.

ஆக, இதை இப்படித்தான் செய்து வாழ வேண்டும் என்ற பழைய வாழ்க்கை தர்மங்கள் போய், எதையாவது எப்படியாவது செய்து வெற்றி பெறலாம், வாழலாம். பிறரைக் கவருகிற விதமாக வாழ்ந்தால் போதும். அந்த மாதிரி வெற்றிகரமான வாழ்வை அடைவதற்கான மார்க்கங்கள் எப்படி இருந்தாலும் பரவாயில்லை என்று ஏற்றுக் கொள்வதுதான் சரி என்று சமூகமும், அறிவாளிகளும் சமீப காலமாகப் பெரிதும் நிர்ப்பந்திக்கப்படுகிறார்கள்.

பலாத்காரமான இந்த நிர்ப்பந்தத்திற்கு அவர்கள் ஒத்து வரவில்லை என்றால் அவர்களை 'மாஜிகள்', 'பத்தாம்பசலிகள்', 'பிழைக்கத் தெரியாதவர்கள்' என்று ஏசவும், கிண்டல் செய்யவும், தூற்றவும், சீண்டி விடவும்கூடத் தயாராயிருக்கிறார்கள் திடீர் வெற்றியாளர்கள்.

'ஒன்றில் அடையும் வெற்றியைப் போலவே அதற்கான மார்க்கமும் நியாயமானதாக இருக்க வேண்டும்' என்ற கொள்கையைச் சகல துறைகளிலும் நாம் இழந்து வருகிறோம் என்பதைத்தான் இது காட்டுகிறதா? அல்லது வேறு எதைக் காட்டுகிறது?

இந்த 'எதையாவது எப்படியாவது கலாசாரம்' இன்று நமது வாழ்க்கையின் சகல துறைகளிலும் ஊடுருவி விட்டது என்றே சொல்ல வேண்டும். ஒருவேளை இதுதான் நமது சுதந்திரத்திற்குப் பிந்திய இந்தியாவின் கலாசாரமாகவே வளருகிறதோ என்னவோ?

விளையாட்டில் ஓட்டப் பந்தயத்துக்குக்கூட நியாயங்கள் இருக்கின்றன. இரண்டு கிலோ மீட்டர் தூர ஓட்டப் பந்தயத்தில் பத்துப் பேர் ஓடுகிறபோது அதில் இரண்டு பேர் மட்டும் பாதி வழியில், ஒரு புல்லெட் மோட்டார்சைக்கிளில் ஏறிக்கொண்டு விரைந்து பந்தய முடிவிடத்திற்குப் போய்த் தாங்களே வென்று விட்டதாகப் பிரகடனப்படுத்திக் கொள்ள முடியாது. அது நிச்சயமாகப் பந்தய விதிகளுக்கு முரணான காரியம் என்றுதான் எல்லாருமே கூறுவார்கள்.

ஆனால் வாழ்க்கைப் பந்தயத்தில் மட்டும் எதையாவது பண்ணி எப்படியாவது ஜெயிக்கலாம் என்ற மனப்பான்மை எங்கும் பரவி வருகிறது.

'முடிவுதான் மார்க்கத்தை நியாயப்படுத்துகிறது. நான் ஜெயித்து விட்டால் எனது வெற்றிக்கான மார்க்கம் எவ்வளவு தவறானதாக இருந்தாலும் அது சரியானதாகி விடுகிறது என்றும், நான் தோற்றுவிட்டால் எனது வெற்றியை எதிர்பார்த்து நான் நடந்து வந்த வழி எவ்வளவு சரியானதாக இருந்தாலும் அது தவறானதாகி விடுகிறது' என்றும் இன்று கூறப்படுகிறது. இது அபாயகரமான தத்துவம் ஆகும்.

இதன்படி, மதுவிலக்கு அமலிலுள்ள ஊரில் கள்ளச் சாராயம் விற்றுக் குபேரனாகி விடுகிறவன் சரியான மார்க்கத்தில் வந்தவனாகி விடுகிறான். 'சர்பத்' வியாபாரம் செய்து நொடித்துப் போனவன் தவறான மார்க்கத்தில் வந்தவனாகி விடுகிறான். எப்படி இருக்கிறது நியாயம்?

சட்டப்படி தடை செய்யப்பட்ட ஒன்றை மக்களிடம் இரகசியமாக விற்று அவசரமாகப் பணம் பண்ணிக்கொண்டு, சட்டம் தன்னைத் தேடி வருவதற்குள் தலை மறைவாகி விடுகிற ஒருவனின் அவசரமும், பதற்றமும், பேராசையும் தான் இன்று பரீட்சை எழுதுகிறவர்களிலிருந்து பத்திரிகை நடத்துகிறவர்கள் வரை காணப்படுகிறது. நடக்கிறவர்களையும், காலால் ஓடுகிறவர்களையும் 'நொண்டிகள்' எனத் தூற்றி விட்டுப் பந்தய விதிக்கு முரணாக நடுவழியில் மோட்டார் சைக்கிளில் ஏறி ஓடி ஜெயிக்கிறவர்கள் தங்களை சூராதி சூரர்களாகக் காட்டிக் கொள்கிற நிலைமை உருவாகி வருகிறது. இந்த குயுக்தியான தத்துவத்தின்படி பார்த்தால் மகாத்மா காந்தியைவிட கடத்தல் மன்னன் ஹாஜி மஸ்தான்தான் இந்தியாவின் மிகச் சிறந்த வெற்றியாளர் என்றுகூடக் கூறி விடுவார்கள் போலிருக்கிறது.

'எதையாவது எப்படியாவது' 'பிலாஸபி'காரர்களுக்கு முதல் எதிரி தவறுகளைச் சுட்டிக் காட்டுபவர்கள்தான். தவறுகள் செய்து அமோக வெற்றிகளை அடைந்த பின்

அந்தத் தவறுகளையே தர்மங்களாக்க முயலுகிறவர்களுக்கு எது தவறு-எது சரி, எது தர்மம்-எது அதர்மம், எது நல்லது எது கொட்டது என்றெல்லாம் கண்டுபிடித்துப் பிரித்து ஞாபகம் வைத்துக்கொண்டு அடையாளம் காட்டக் கூடிய வர்கள் இருப்பதே இடையூறுதான்.

புதிதாகக் கிளம்பியிருக்கும் 'நியூ(ட்)வேவ்' கதையாளர் ஒருவரிடம், ''இப்படி எல்லாம் தாறுமாருக எழுதுகிறீர் களே? இதனுல் சமூகத்துக்கு என்ன பயன்?'' என்று கேட்ட போது, அந்தக் கதையாளர் கூறிய அதிர்ச்சியடையத் தக்க பதில் வருமாறு :

''ஒரு முதிய பிரெஞ்சுத் தாய், பருவம் வந்த தன் பெண்ணைப் பார்த்து ஒரு நாள் இரவு, 'எனக்கு வயதாகி விட்டது இயலவில்லை. எனக்குப் பதிலாக நீயே உன் தந்தை யோடு ஏன் உடலுறவு வைத்துக் கொள்ளக்கூடாது?' என்று கேட்பதாக ஒரு நாவலில் படித்தேன். அது மாதிரி எல்லாம் 'பெர்மிஸிவ்' ஆக எழுதும் 'போல்டா'ன காலம் இந்தப் பத்தாம்பசலி நாட்டில் எப்போது தான் வரப் போகிறதோ?''; என்று கேட்டதோடு அமையாமல், இது தான் '**Bold theme**' என்று கூறியதாகவும் கேள்விப் பட்டேன். 'துணிச்சல்' என்ன என்பதைப் பற்றியே எனக்கு உடனே குழப்பம் ஏற்பட்டுவிடும் போலிருந்தது. மகாத்மா காந்தி உப்பு சத்தியாக்கிரகம் செய்தது. காமராஜ், காங்கிரஸ் பிளவின்போது இந்திரா காந்தியின் பக்சம் சேராமல் மறுதரப்பில் நின்றது, சுபாஷ் போஸ் இ. தே. ராணுவம் அமைத்தது, திருப்பூர்குமரன் கொடி காக்க உயிர் நீத்தது, வாஞ்சிநாதன் வெள்ளைக்கார கலெக்டரைச் சுட்டது, கண்ணகியின் உறுதி, பாஞ்சாலியின் பழி வாங்கல்-வஞ்சினம் இதெல்லாம் துணிவு இல்லையோ என்றுகூட எனக்குத் திடீரென்று சந்தேகமே வந்து விட்டது.

இந்தப் பிரெஞ்சுக் கிழவியின் விவகாரம்தான் 'துணிவு' என்று ஒத்துக் கொள்ளாவிட்டால் நம்மை 'மடி சஞ்சி' என்று நாலு பேராகச் சேர்ந்து கொண்டு சொல்லி விடுவார்

களோ என்று கூடப் பயந்து நடுங்கி விட்டேன். எதிர் காலத்தைப் பற்றியே பயமாகி விட்டது.

ஆனால், இதெல்லாம் ஒருகணம்தான். மறுகணமே என் பழைய பிடிவாதம்தான் துணை நின்றது. சமூகத்துக்குப் பயன்படாத தனி நபர்களும், வக்கிரங்களும், வக்கரிப்புக் களும் எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம். எதை வேண்டுமானாலும் நியாயப்படுத்தலாம். வளர்ந்து கொண் டிருக்கும் நாடு ஒன்றில் 'எதையாவது எப்படியாவது' மனப் பான்மையை அப்படியே கொழுக்க விட்டு விட்டால் அந்த நாட்டுக்குத் 'தேசிய ஒழுக்கம் - அதாவது நேஷனல் காரெக்டர்' என்ற ஒன்று உருவாக முடியாது. அணு விஞ்ஞானத்தைப் போதிக்கும் ஒரு பிரெஞ்சு விஞ்ஞானியிட மிருந்து நான் கற்க வேண்டியது நிறைய இருக்கலாம். மகளைத் தந்தை பெண்டாள யோசனை கூறும் யாரோ ஒரு பிரெஞ்சு வக்கிரத்தைப் பற்றி நான் அறிந்து எனக்கோ என் நாட்டுக்கோ எந்த உருப்படியான பயனும் இல்லை.

'அது மாதிரி போல்ட் தீம் எல்லாம் இங்கே வர வேண்டாமா?' என்று கேட்பது, 'பக்கத்து ஊரில் காலரா வந்திருக்கிறதே, அது நம் ஊருக்கும் கொஞ்சம் வேண்டாமா? கொண்டு வருவோமே' என்று கேட்பதைப் போன்றதுதான்.

தலைவர்கள், எழுத்தாளர், பத்திரிகைகள், அரசியல் வாதிகள், டாக்டர்கள், இஞ்ஜினீயர்கள் ஆகியோர் துணிந்து 'எதையாவது எப்படியாவது' மனப்பான்மையைக் கை விட்டால்தான் மக்களைத் திருத்த முடியும்.

கண்ணில் பயிர்கள் தெரியாத அளவு களை மண்டி யிருப்பது போல் நமது சமூக வாழ்வை இந்த மனப்பான்மை கவ்விப் பிடித்து மூடியிருக்கிறது. இதிலிருந்து சமூகத்தையும் நம்மையும் விடுவிக்க அவசரமாக முயல வேண்டும். நியாய மான மார்க்கத்தில் முறையான வெற்றியை அடையும் பொறுமையையும், நிதானத்தையும் சிறுவர் முதல் பலருக் கும் மெல்ல மெல்லக் கற்றுத் தரவேண்டும். 'எதையாவது எப்படியாவது?' பண்ணினால் தான் தங்களைப் பிறர் கவனிப்

பார்கள் என்ற மனப்பான்மை முதலில் இலக்கியப் படைப் பாளர்களிடமிருந்து அகல வேண்டும். விதை நெல்லே கெட்டுப் போனல் அப்புறம் எதையும் வயலில் பயிர் செய்ய முடியாமல் போய்விடும்.



# 6. படித்தவர்கள் பயப்படுகிறார்கள்

புத்தியே இல்லாதவனைக்கூட நம்பலாம். புத்தியை அவ்வப்போது இடம் மாற்றி அடகு வைக்கிறவனை நம்பவே கூடாது. அறிவாளிகளும், புத்திமான்களும், ஞானிகளும், மகான்களும் கடந்த காலங்களில் ஆட்சிகளிலோ, சமூகத்திலோ நடைபெறும் தவறுகளையும், பிழைகளையும் துணிந்து உரத்த குரலில் கண்டித்துத் திருத்துகிற பொறுப்பைத் தயங்காமல் ஏற்றிருக்கிறார்கள். ஏற்கவேண்டும். படிப்பும், ஞானமும் மெய்யாகவே வளர்ந்தால் பயமும், பாவமும், அஞ்ஞானமும், சூதும் தொலைய வேண்டும். இருள் நீங்குவதற்காகத்தான் விளக்குகளை ஏற்றுகிறோம். இருளை வளர்ப்பதற்காக அல்ல.

**'படிப்பு வளருது பாவம் தொலையுது**
**படிச்சவன் சூதும் பாவமும் பண்ணினால்**
**போவான் போவான் ஐயோவென்று போவான்'**

என்று மகாகவி பாரதியார் தமது 'புதிய கோணங்கி' என்னும் குடுகுடுப்பைக்காரன் பாடலில் சொல்லியிருக்கிறார்.

ஆனால், இன்று நாட்டில் படித்தவர்கள் பண்ணுகிற சூதும், பாவமுமே அதிகம். பாமரர்கள் எது சூது, எது பாவம் என்று தெரியாமலே சிலவற்றைத் தவறாகச் செய்துவிடுகிறார்கள். பின்பு அவை சூதுகளாகவும், தவறுகளாகவும் கண்டுபிடிக்கப்படுகின்றன.

படித்தவர்களோ, திட்டமிட்டு லாபம் கருதிச் சூதும், பாவமும் பண்ணுகிறார்கள். ஒன்றைத் தவறு, தீமை, சூது, பாவம் என்றெல்லாம் தெரிந்து வைத்துக் கொண்டே அதை மாலை மரியாதை, கரகோஷம், மேள

தாளத்தோடு நடத்தி முடித்து அதற்காகப் பொன்னுடை போர்த்திக் கொள்கிற சாமர்த்தியம் இன்றைய அறிவாளி களில் பலருக்கு இருக்கிறது. நாளைய 'அறிவாளிகள்' அதற்குப் பயிற்சி பெற்று வருகிறார்கள்.

ஒரு செயலின் மூலம் புத்திக்கூர்மையை வெளிப்படுத் தும் அறிவாளிகளைவிட, மந்த புத்தியையும், அறியாமையை யும் வெளிப்படுத்தும் 'அறிவுத் தொழிலாளி'களே அதிகம். அறிவு ஒரு கௌரவமாகவும், மரியாதையாகவும், மான மாகவும் கருதப்பட்ட காலம் போய் ஒரு வசதியாகவும், தொழிலாகவும், சாதனமாகவும் மட்டுமே கருதப்படுகிற காலத்திலே நாம் வாழ்கிறோம்.

வயிற்றுக் கொடுமை தாளமுடியாமல் பூசாரியே விக்கிரகத்தை அடகு வைப்பது போலவும், சிற்பி உளியை அடகு வைத்துத் தேநீர் குடிப்பது போலவும், இன்றைய 'அறிவாளிகளில்' பலரும் ஆகிவிட்டார்கள்.

ஒரு நாட்டின் 'அறிவாளிகள்' துதிபாடிகளாகவும், தொழுது நிற்பவர்களாகவும், அடி வருடிகளாகவும் ஆகி விட்டால், அன்றுதான் அந்த தேசத்தில் உண்மையான வறட்சியும், பஞ்சமும் ஏற்படுகின்றன.

சோற்றுப் பஞ்சத்தைவிட மோசமானது புத்திப் பஞ்சம். புத்திப் பஞ்சைத்தைவிட மோசமானது தைரியப் பஞ்சம். தைரியப் பஞ்சத்தைவிட மோசமானது மனச் சாட்சிப்பஞ்சம். கருத்துப்பஞ்சம், சோற்றுப் பஞ்சத்தைவிட மோசமானது.

தண்ணீரில் எண்ணெய் கலக்க முடியாதது போல, அசல் ஞானத்தில் கோழைத்தனம் கலக்கவே முடியாது. உதாரணம்—நக்கீரன். இடம், பொருள் ஆள்கட்டு, சாபம் கொடுக்கும் ஆற்றல், எதற்குமே பயப்படாமல், 'நெற்றிக் கண்ணைத் திறந்தாலும் நீங்கள் செய்த குற்றம் குற்றமே' என்று எதிர்ப்புக் குரல் கொடுத்தானே ஓர் அறிவாளி, அவனை எப்படிப் போற்றுவது? அறிவாளிகள் சுய சிந்தனை யும், சுயமரியாதையும் அற்ற அடிவருடிகளாக இருக்கக் கூடாது என்பதற்குக் கிடைத்த முதல் உதாரணம் நக்கீரன்.

போகிற போக்கைப் பார்த்தால் கடைசி உதாரணமாகவும் அவன்தான் இருப்பானே என்று சந்தேகமாக இருக்கிறது எனக்கு.

தத்தம் பலவீனங்கள் காரணமாக அறிவாளிகள் அடிவருடிகளாகவும், துதிபாடிகளாகவும் இருக்க நேரிடுவது தவிர, இப்போது புதுவித அபாயம் ஒன்றும் ஏற்பட்டிருக்கிறது. ஆட்சியாளர்கள், பொறுப்புக்களில் இருக்கும் நிர்வாகிகள் ஆகியவர்களே அறிவாளிகளும், சிந்தனையாளர்களும் தங்களுக்கு அடிவருடிகளாகவும், துதிபாடிகளாகவும் இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறார்கள். வற்புறுத்தவும் செய்கிறார்கள்.

அப்படி யாராவது இல்லையென்றால் ஆட்சியாளர்களுக்கும், பொறுப்பிலுள்ளவர்களுக்கும் அவர்கள் மேல் கோபம் வருகிறது. முட்டாள்களின் கோபத்துக்குப் பயப்படும் அறிவாளிகளாகவே ஒரு நாடு முழுவதும் நிரம்பி விட்டால் கேட்கவே வேண்டாம்.

நாடு முழுவதும் உள்ள அறிவாளிகள் எப்படி, எந்தப் போக்கில் சிந்திக்க வேண்டுமென்று ஆள்பவர்களே முடிவு செய்து விடலாமா?

தமிழ் நாட்டில் உள்ள அறிஞர்களும், சிந்தனையாளர்களும் எப்படி எந்தப் போக்கில் சிந்திக்க வேண்டும் என்று இங்குள்ள அதிகாரிகளே முடிவு செய்து விடலாமா?

சக்தியுள்ள திருடன் தங்களைத் தேடி வந்து பறிப்பதற்குப் பதில் பலவீனமும், பயமுமுள்ள உடைமையாளர்களே திருடனின் வீட்டைத் தேடிச் சென்று அவற்றை ஒப்படைத்துப் பாதகாணிக்கையாக்கி விட்டுத் திரும்புகிற மாதிரித்தான், அறிவாளிகளே வலுவில் பதவியிலுள்ளவர்களிடம் சரணடைவதும். அடிமைத்தனங்களில் எல்லாம் மோசமானது சிந்தனை அடிமைத்தனமே. 'கட்டுப்பாடு, தேசிய ஒற்றுமை ஆகியவற்றின் ஒரே சின்னம் நமது இன்றைய பிரதமர்தான்'—என்று அறிக்கை விடும் சில 'அறிவாளிகள்'

சரணாகதி தத்துவத்தை நம்பியே அப்படி அறிக்கை விடுகிறார்கள். 'மூளை பலத்தை' நம்பி அன்று.

'இன்று கடன் நாளை ரொக்கம்' என்ற போர்டைப் போல், என்று எவர் பிரதமராக வந்தாலும் இப்படி அறிக்கை விடத் தயாராயிருக்கும் 'ஃபிளெக்ஸிபிள் அறிவாளிகளின்'—கூட்டம் ஒன்று இந்த நாட்டில் ரெடிமேடாகக் காத்திருக்கிறது.

ஒருவருடைய படிப்பு, அல்லது கல்வியின் விகிதாச் சாரத்தைக் கண்டுபிடிக்க அவரிடமுள்ள பயம், பதற்றம் ஆகியவற்றின் விகிதாச்சாரத்தைக் கண்டு பிடித்தாலே போதுமானது. 'ஐ. க்யூ'வின் மீட்டர் அதுதான்.

பயம் எல்லாப் பாவங்களுக்குமே தந்தை. பயம்தான் ஒருவனை அடிவருடியாக்குகிறது. பயம்தான் ஒருவனைத் துதிபாடியாக்குகிறது. பயம்தான் ஒருவனைத் தகுதியில்லாததை, தகுதியில்லாதவரைப் புகழ வைக்கிறது. பயம்தான் பரந்த எண்ணத்தின் வீரியத்தைக் கட்டுப்படுத்துகிறது. பயம்தான் ஒருவனுடைய சுதந்திர மனப்பான்மையைக் கொல்கிறது.

இந்நாட்டில் இன்று செய்ய வேண்டிய பணி அறியாமையை அகற்றுவது மட்டுமல்ல; அறியாமையை அகற்றும் முன், காரணமற்ற அச்சத்தை முதலில் அகற்ற வேண்டும். அச்சமும், கோழைத்தனமும், பேடிமையும் நீங்காத கல்வி என்பது, எதற்கும் பயன்படாத வறட்டுப் படிப்பே. இருட்டைப் போக்காத விளக்கு விளக்கே இல்லை.

ஒரு நாட்டு மக்கள் எந்த அளவுக்குச் சுதந்திரத்திற்குப் பக்குவப்பட்டிருக்கிறார்களோ, அந்த அளவு சுதந்திரம்தான் அவர்களுக்குக் கிடைக்க முடியும். இன்று நமக்குக் கிடைக்கிற சுதந்திரம் எதுவோ அவ்வளவிற்குத்தானா நாம் பக்குவப்பட்டிருக்கிறோம்? ★

# 7. ஆங்கிலமும் தாழ்வுமனப் பான்மையும்

சுதந்திரம் அடைந்து முப்பத்து மூன்று ஆண்டுகளுக்கு மேல் ஆகியும் மொழி தொடர்பான அடிமை மோகம் நம்மிடையே இன்னும் குறையவில்லை. ஆஷாடபூதித்தனங்கள் இன்னும் போகவில்லை.

நமது நகரங்களில் தொத்து நோய் போல் எல். கே.ஜி., யு. கே. ஜி. பள்ளிகள் தோன்றி வளர்கின்றன. இப் பள்ளிகளில் பல, ஆங்கிலத்தில் பேசவும், எழுதவும் பயிற்சியளிப்பதற்கு முயன்று, முடிவில் தோற்று, தாய் மொழியில் பேசவும், எழுதவும் முடியாமல் போவதற்கு மட்டுமே பயிற்சியளிக்கின்றன.

இப்பள்ளிகளில் தயாராகி வெளி வருகிற பலர் முழுவதுமாகத் தாய்மொழியிலும் பேச முடிவதில்லை. முழுவதுமாக ஆங்கிலத்திலும் பேச முடிவதில்லை.

'ஐ ஸீ...யூ நோ...அஃப் கோர்ஸ்...' இப்படி நடு நடுவே ஆங்கிலச் சொற்களையும், தொடர்களையும் தெளித்துச் தமிழ்ச் சொற்களையும், தொடர்களையும் நடு நடுவே கலந்து பேசும் ஓர் அரை வேக்காட்டு மொழியை இவர்கள் பேச்சிலும்—எழுத்திலும் உருவாக்கி வருகிறார்கள்.

தாய் மொழியைச் சரியாக அறியாமல்-அல்லது அறிந்து கொள்ள மனமில்லாமல் அலட்சியப்படுத்தி விட்டு, அந்நிய மொழிகளைக் கொண்டாடுவதும், கற்பதும் அடிமைத்தனங்களில் எல்லாம் தலைசிறந்ததாகும். துரதிஷ்டவசமாக இந்த அடிமைத்தனம் தமிழர்களிடையே மிகவும் அதிகமாக இருந்தது-இன்னும் இருக்கிறது.

சராசரி மலையாளியும் வங்காளியும், மலையாளமும் வங்காளமும் தெரியாத வேற்று மொழியாளனிடமும் பேச நேரும் போதுதான் ஆங்கிலத்தின் துணையை நாடுகிறார்கள்.

ஆனால், சராசரித் தமிழன் தமிழ் நன்றாகத் தெரிந்து மற்றொரு தமிழனிடமே தாழ்வு மனப்பான்மை காரணமாகவும், உயர்வு மனப்பான்மை காரணமாகவும் ஆங்கிலத்தில் பேசுகிறான்.

ஆங்கிலம், சம்ஸ்கிருதம், இந்தி, பிரெஞ்சு ஆகிய நான்கு பிறமொழிகளைத் தெரிந்திருந்த மகாகவி பாரதியார் தாய்மொழிப் பற்றின் சிகரத்தில் நின்று கொண்டு, 'யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல் இனிதாவது எங்கும் காணோம்' - என்று பாடினார்.

தமிழைத் தாய் மொழியாகக் கொண்ட பெரிய குடும்பங்களில் பிறந்த பலர், தமிழர்களால் தமிழில் எழுதப் பட்ட நூல்களுக்கு ஆங்கிலத்தில் முன்னுரை வழங்குவதை அந்தஸ்தாகக் கருதினார்கள். இந்த விநோதம் உலகில் வேறெங்கும் நடக்க முடியாது.'

மிகப் பெரிய பணக்காரக் குடும்பங்களில் வைதீக மொழியின் இடத்தை சம்ஸ்கிருதமும், லௌகீக மொழியின் இடத்தை ஆங்கிலமும் பிடித்துக்கொண்டதன் காரணமாகத் தாய்மொழியாகவும், பிரதேச மொழியாகவும் இருக்கும் தமிழ் அநாதையாயிற்று.

என் நண்பர் ஒருவர் அடிக்கடி சிரித்துக் கொண்டே, 'உலகின் எந்த மூலையிலாவது தப்புத் தப்பான அரைகுறை ஆங்கிலத்தில் இரண்டு பேர் போலியாக உரையாடிக் கொண்டிருந்தால், அவர்கள் இருவரும் தமிழர்களாகத்தான் இருக்க வேண்டும் என்று விசாரிக்காமலே முடிவு செய்து கொள்ளலாம்' என்று கூறுவார். அவர் கூற்று, நகைச் சுவையாக மிகைப்படுத்தப்பட்ட வேடிக்கையன்று. உண்மையே என்பதை நான் பலரைப் பார்த்து முடிவு செய்திருக்கிறேன்.

ஒருவன் தாய் மொழியைத் தவிர வேறு மொழியைப் பேசுவதோ, எழுதுவதோ, மதிப்பதோ தவறு என்று நான் சொல்ல வரவில்லை. தாய்மொழியை அவமதித்து விட்டு வேறு மொழிகளைத் தாழ்வு மனப்பான்மையினாலும், உயர்வு மனப்பான்மையினாலுமே மதிக்கிறவன்

எவனோ அவன் ஆஷாடபூதி என்பதைத்தான் வற்புறுத்த விரும்புகிறேன்.

டாக்டர் பட்டம் பெற்ற தமிழ்ப் பேராசிரியர். ஒருவரும், நானும் ஒரு கல்லூரியில் முத்தமிழ் விழாவில் பேசப் போயிருந்தோம். விழாவைத் தொடங்குவதற்கு முன் கல்லூரி முதல்வர் அறையில் முதல்வருடன் (அவரும் தமிழர்தான்) செயற்கையாக ஆங்கிலத்திலேயே வலிந்து சொற்களைத் தேடித் தேடிப் பேசிக் கொண்டிருந்தார் தமிழ்ப் பேராசிரியர். நான் தமிழிலேயே பேசிக் கொண்டிருந்தேன்.

முத்தமிழ் விழா தொடங்கி மேடைக்கு வந்து பேசிய போது அதே பேராசிரியர், 'தமிழர்கள் தங்களுக்குள் செயற்கையாக ஆங்கிலத்தில் உரையாடிக் கொள்வது' பற்றிக் கிண்டல் செய்தும், கண்டித்தும், சாடியும் முழங்கினார். அவரை அடுத்து நான் பேசியபோது, 'தமிழில் பேச வேண்டுமென்று மேடையில் முழங்கிவிட்டு ஆங்கிலத்தில் பேசும் கொள்கை முரண்பாடுள்ளவர்கள் வெகு தொலைவில் இல்லை. நம் அருகிலேயேகூட இருக்கிறார்கள்' என்று குத்திக் காட்டியபோது கல்லூரி முதல்வர் என்னைப் பார்த்துப் பொருள் பொதிந்த புன்னகை புரிந்தார். பேச்சளவில், மேடையளவில் தமிழ் உணர்ச்சியைக் கொட்டிக் குமுறிவிட்டுத் தனி வாழ்வில் தமிழ் உணர்ச்சியே இல்லாமல் வாழும் ஆசாரக் கள்ளர்கள் நிறையவே இருக்கிறார்கள்.

ஒரு தமிழ்க் கட்டுரையிலோ, சொற்பொழிவிலோ அதிகமான ஆங்கிலச் சொற்றொடர்களோ மேற்கோள்களோ இருக்குமானால் எழுதியவர் அல்லது பேசுகிறவர் தமிழ்ப் பேராசிரியர் என்று கண்டுபிடித்து விடலாம். திருக்குறள் அல்லது கம்பராமாயண மேற்கோள்களுடன் நல்ல தமிழில் அதே கட்டுரையோ, பிரசாங்கமோ அமையுமானால் எழுதியவர் ஆங்கிலத்தில் பெரும் புலமையுள்ளவர் என்று கண்டுபிடித்து விடலாம்.

இந்த முரண்பாட்டுக்கு என்ன காரணம்? தாய்மொழி அல்லது சுதேசி மொழி அறிஞர்களுக்கு ஆங்கிலம் சம்பந்த

மாக இருக்கும் தாழ்வு மனப்பான்மைதான் காரணம் என்று எனக்குத் தோன்றுகிறது.

தாய்மொழியில் ஒருமை-பன்மைத் தவறு, நிகழ்கால இறந்த காலக் குழப்பம் போன்ற இலக்கணப் பிழைகள் செய்வதை மன்னித்து ஏற்கலாம் என்றும், ஆங்கிலத்தில் அதே பிழைகளையோ, ஸ்பெல்லிங் தவறுகளையோ கைதவறிச் செய்தால்கூட அது பஞ்சமா பாதகங்களில் ஒன்றுபோல, மன்னிக்கவும் சகித்துக் கொள்ளவும் முடியாதது போலவும் நமது ஆசிரியர்களும், அந்தஸ்துள்ளவர்ளும் உண்டாக்கி வைத்திருக்கும் 'பிரமை'யை என்னென்பது?

ஒரு வெள்ளைக்காரன் முதன் முதலாகத் தமிழ் கற்கும் போது செய்ய முடிந்த உச்சரிப்புப் பிழைகள், ஒருமை. பன்மை, உயர்திணை, அஃறிணை மயக்கங்களை முதன்முதலாக ஆங்கிலம் படிக்கிற இந்தியனும் செய்ய நேர்வது சகஜம், செய்யலாம், செய்வதுதான் இயற்கை என்ற சகஜ மனப்பான்மை நம்மவர்களுக்கு ஏற்படாதவரை, ஆங்கிலத்தைப் பொறுத்த மட்டும் நாம் தாழ்வு மனப்பான்மையும், அடிமைத்தனமும் உள்ளவர்கள்தான் என்பது என் முடிவு.

இப்போது தமிழ்க் கதைகள் எழுதும் எழுத்தாளர்களில் சிலர் அவற்றை ஆங்கிலத்திலேயே எழுதித்தமிழில்'டிரான்ஸ் லிட்டரேட்' செய்து நடுநடுவே சில தமிழ் வார்த்தைகளையும் தூவிவிடுகிறார்கள். இது யதார்த்த நோக்கில் கதாபாத்திரத்தைச் சித்தரித்துக் காட்டும் வகையில் இருக்குமானல் ஏற்கலாம்.

கதையில் வருகிறவன் குப்பனே, சுப்பனே யாரானாலும் எப்படியும் ஆங்கிலத்தைத் திணித்துவிட வேண்டும் என்கிற அரிப்புப் போக வேண்டும். இந்த அவசியமற்ற அரிப்பு இருக்கிறவரை இவர்களும் தாழ்வு மனப்பான்மையிலிருந்து நீங்கியவர்களில்லை என்றே கொள்ள வேண்டியிருக்கும்.

மகாத்மா காந்தியின் சுதந்திர வேட்கையை நாம் கொண்டாடுகிறோம். சுதேசி மனப்பான்மையையும் நாம் கொண்டாடுகிறோம். சுதேசி மொழிகளை மட்டும் கொண்

டாட மறுக்கிறோம். நம்நாட்டு மொழிகளைக் கேவலமாக எண்ணியபடி அந்நிய மொழிகளை மதித்துக் கற்கிறோம்.

தேசத்தை மட்டும் அந்நியர்களிடமிருந்து மீட்டு, விடுதலை பெற்றுவிட்டோம். ஆனால் பல விஷயங்களில் நமக்கு இன்னும் விடுதலை கிடைக்கவில்லை. சுதேசி எண்ணங்கள் வரவில்லை. சுதேசி மொழிகளை மதித்து வழிபடக் கற்கவில்லை.

ஐரோப்பாவிலேயே இங்கிலாந்துக்கு அண்டை நாடுகளான பிரான்ஸிலும் ஜெர்மனியிலும்கூடப் பிரெஞ்சு மொழியையும், ஜெர்மன் மொழியையும்விட ஆங்கிலத்தை உயர்வாக மதிப்பதில்லை. ஆனால், ஆறாயிரம் மைல்களுக்கு அப்பால் உள்ள நாமோ சுதேசி மொழிகளைக் கிண்டல் செய்துகொண்டே விதேசி மொழிகளுக்கு அடிமைச் சேவகம் புரியக் காத்திருக்கிறோம்.

சுதந்திரம் என்பது சொல்லிக் கொடுத்து வரக்கூடிய உணர்வில்லை. தாழ்வு மனப்பான்மை உள்ளவன் சுதந்திரமாக இருப்பதுபோல் பாசாங்கு செய்யலாம். ஆனால், நிஜமாகவே சுதந்திரமாக இருக்க அவனால் முடியாது. அப்படி இருக்க அவனுக்குத் தெரியவும் தெரியாது. தாய்மொழி அபிமானமற்ற அந்நிய மொழி மோகங்கள் எல்லாவற்றுக்குமே தாழ்வு மனப்பான்மையும், அடிமைப் புத்தியுமே காரணங்கள் என்பது என் உறுதியான முடிவு ஆகும்.



# 8. நமது பண்பாட்டுப் பஞ்சங்கள்

அரிசிப் பஞ்சம், சர்க்கரைப் பஞ்சம், மண்ணெண்ணெய்ப்பஞ்சம் என்றெல்லாம் கேள்விப்பட்டிருக்கிறோம். அந்தப் பஞ்சங்கள் எல்லாம் அவ்வப்போது ஏற்படுகின்றன, தீர்கின்றன. சில பஞ்சங்கள் தேர்தல்களில் அரசியல் கட்சிகளின் வெற்றிக்கும், வேறு சில பஞ்சங்கள் அரசியல் கட்சிகளின் தோல்விக்கும் பயன்பட்டிருக்கின்றன.

ஒரு நாட்டின் சோற்றுப் பஞ்சம், தண்ணீர் பஞ்சம் எல்லாமே கண்ணுக்குத் தெரியக் கூடிய வெளிப்படையான பஞ்சங்கள்,

அவற்றைத் தீர்க்கப்போவதாகவும், ஒழிக்கப்போவதாகவும், விரட்டப்போவதாகவும் சவால் விட்டுப் பிழைப்பவர்கள் பலர், ஆனால் யாரும் தீர்க்கவோ, விரட்டவோ முயலாமல் கண்ணுக்குத் தெரியாத நுணுக்கமான பஞ்சங்கள் சில இப்போது நம் நாட்டில் வளர்ந்து வருகின்றன,

அதில் முக்கியமானது பண்பாட்டுப் பஞ்சம். கலாசாரப் பஞ்சம், நாகரிக வறுமை, பண்பாட்டு வறட்சி ஆகியவை இன்று பெருகியிருப்பதுபோல் இதற்கு முன் என்றும் பெருகியிருந்ததில்லை என்று தோன்றுகிறது. அரசியல். வர்த்தகம், கல்வி முதலிய சகல துறைகளிலும் இன்று பண்பாட்டுப் பஞ்சம் பெருகியிருக்கிறது.

இந்தப் பஞ்சம் ஓரிடத்தில், ஒரு வடிவத்தில் ஒரு சமயத்தில் தெரிவதில்லை. பல இடங்களில், பல வடிவங்களில், பல சமயங்களில் இது கண்ணுக்குத் தெரிகிறது. சுதந்திரமும், ஜனநாயகமும், உரிமைகளும், வசதிகளும் பெருகி (?) அறவே பண்பாடு பெருகாத தேசத்தை என்னவென்பது?

பண்பாடு இல்லாத வசதி, பண்பாட்டைக் கற்றுத் தராத வறட்டுக் கல்வி இரண்டுமே பயனற்றவை ஆகும்.

பலருக்கு உடம்பு முதுமையடைகிற அளவில் நாலில் ஒரு பங்குகூட மூளை முற்றுவதே இல்லை. இன்னும் சிலருக்கு வயது முதுமை எல்லாம் வருகின்றன; ஆனால் உடம்பிலோ மனத்திலோ வளர்ச்சியே வருவதில்லை, இவை எல்லாம் எப்படி நோய்களோ அப்படியே பண்பாடு வளராமல் தேங்கி விடுவதும் ஒரு நோயே.

சென்னை நகரின் பிரதானமான சாலை ஒன்றில் காலை பத்து மணிக்குத் திடீரென்று அத்தனை ஆட்டோ ரிக்‌ஷாக்களையும். டாக்ஸிகளையும் குறுக்கே நிறுத்திப் போக்கு வரத்தைத் தடுத்து விடுகிறார்கள் எல்லாமும் எல்லாரும் அப்படியே ஸ்தம்பித்துப் போகிறார்கள்.

போலீஸுக்கும் ஓர் ஆட்டோ டிரைவருக்கும் தகராறு, போலீஸை எதிர்த்து ஆட்டோ—டாக்ஸி டிரைவர்களின் நடவடிக்கை இது.

அந்தச் சாலையைக் கடந்து பிரசவ ஆஸ்பத்திரிக்குப் போவதற்காகக் காரில் ஒரு நிறைமாத வயிற்றுப் பிள்ளைக் காரி காத்திருக்கிறாள்.

அவளுக்கு நடுத் தெருவிலேயே குழந்தை பிறக்கிறது. டாக்டர் இல்லாமல், உதவிகள் இல்லாமல் நடுத்தெருவில் செத்துப் பிழைக்கிறாள் அவள். ஒரு தாயை இப்படி நட்ட நடுத் தெருவில் தவிக்க விடுவதுபோலப் பண்பாட்டுக் குறைவுவேறென்ன இருக்க முடியும்?

இன்னொருவர் அயல்நாட்டுப் பிரயாணி. அவரும் காரில் அந்தச் சாலையைக் கடந்து விமான நிலையத்துக்குப் போக வேண்டும்.

இந்த நடுத் தெரு மறியல் ஒரு மணி நேரம் நீடித்தால் அவருடைய பிரயாணம் தட்டிப் போய் விடும்.

ஒரு போலீஸ்காரர் தன்னைச் சிரமப்படுத்தியதற்காக ஊரை எல்லாம் சிரமப் படுத்தியே தீர வேண்டும் என்பது ஆட்டோ ரிக்‌ஷா ஓட்டுபவரின் பண்பாடாக இருக்க வேண்டுமானால் அந்த நாடு எப்படி உருப்படும்? தவறு போலீஸ்கார ருடையதாக இருந்தாலும், ஆட்டோ டிரைவருடையதாக இருந்தாலும் அதை முறைப்படி தீர்த்துக் கொள்ள

முடியும். அதை விட்டுவிட்டு, நான் ஒரு நிமிஷம் கஷ்டப் பட்டேன். ஊரெல்லாம் ஒரு மணி நேரம் கஷ்டப்படட்டுமே, என்ற பாணியில் செயல்படுவது பண்பாட்டுக் குறைவானது மட்டுமில்லை, அநாகரிகமானதும் ஆகும்.

இதே போல் ஒரு சந்தர்ப்பத்தில், ஒரு பிரிட்டிஷ் பிரஜை அல்லது தொழிலாளி எப்படி நடந்து கொள்கிறான் என்பதைத் தெரிந்து கொண்டால் பண்பாடு என்பது என்ன வென்றுவது புரியும்.

1976 மார்ச், ஏப்ரல் மாதங்களில், நான் லண்டனில் இருந்து போது, தேம்ஸ் நதியில் படகு விடுகிறவர்கள் இரண்டு நாள் படகுகளை ஓட்டாமல் நிறுத்தினார்கள். வேலை நிறுத்தமில்லை, அவர்கள் சம்பந்தப்பட்ட ஏதோ ஒரு தொழிற்சங்க மாநாட்டுக்குப் போவதற்காகத்தான்.

ஆனால், அந்தப் படகு விடும் தொழிலாளர்களுக்குத் தான் எத்தனை பண்பாடு! இரண்டு நாள் வேலை செய்யாமல் விடுவதால் பொது மக்களும், சுற்றுலாப் பயணிகளும் தங்களைத் தவறாகப் புரிந்து கொண்டு விடுவார்களோ என்று அஞ்சி, 'பொது மக்களும், சுற்றுலாப் பயணிகளும் கருணை கூர்ந்து எங்களை மன்னிக்க வேண்டும். இரண்டு தினங்கள் அவர்களுக்கு நாங்கள் பயன்பட முடியாமல் இருப்பதற்காக வருந்துகிறோம்; நாளன்றைக்குக் காலையில் மீண்டும் எங்கள் சேவையைத் தொடர்வோம் என்பதை மகிழ்ச்சியுடன் அறிவித்துக் கொள்கிறோம்' என்னும் பொருள்பட எளிய ஆங்கிலத்தில் மூலைக்கு மூலை அறிவிப்புக்களை எழுதி வைத்திருந்தார்கள். இதில் உள்ள பண்பாடு என்னை வியக்க வைத்தது.

'நாளை டாக்சி ஓடாது! நாளை ஆட்டோ ஓடாது! நாளை ரயில் ஓடாது! நாளை பஸ் ஓடாது'—என்கிறபாணியில் பொது மக்களையும் அந்நிய நாடுகளிலிருந்து சுற்றுலாப் பயணிகளாக வந்திருக்கும் விருந்தினர்களையும் மிரட்டுகிறாற் போலவே அறிவிப்பு வெளியிடுகிற நமது பண்பாட்டுப் பஞ்சத்தை என்னவென்று வர்ணிப்பது? ஒரு சிறு உபசார மன்னிப்புக்கூட இந்த மிரட்டலில் இல்லையே?

கலகம், புரட்சி, போராட்டம் ஆகியவற்றில் ஈடுபட்டால்கூடப் பிரிட்டிஷ்காரர்களுக்கு அவற்றையும் பண்பட்ட விதத்தில் நடத்தத்தெரியும். நாகரிகமாக இயக்குவதற்குத் தெரியும்.

வடக்கு அயர்லாந்து, பிரிட்டனிலிருந்து பிரிந்து தனி நாடாக வேண்டும் என்று போராடுகிற புரட்சியாளர்களுக்கு ஐ. ஆர். ஏ. என்று பெயர், அவர்கள் தங்கள் கோரிக்கையை வலியுறுத்துவதற்காக லண்டனில் டாக்ஸிகளில் வெடி குண்டு (டைம் பாம்) வைத்தல், ரயில்களில் வெடி குண்டு வைத்தல் போன்ற தீவிர நடவடிக்கைகளில் இறங்குவதுண்டு. இந்தத் தீவிர நடவடிக்கைகளுக்கு இடையிலும் பொது மக்களை அநாவசியமாக விரோதித்துக் கொள்ளக் கூடாது என்கிற பண்பை அவர்கள் ஒரு சீராகக் கடைப் பிடிப்பதைக் கண்டேன்,

ஒரு நாள் இரவு. சவுத் லண்டன் டெக்னிகல் கல்லூரி அருகே மேனர் அவென்யூவில் உள்ள ஒரு தமிழ் நண்பரின் வீட்டுக்குச் சாப்பிடச் செல்வதற்காக ட்யூப் ரெயிலில் (பாதாள ரயில்) பெல் சைஸ் பார்க்க ஸ்டேஷனில் ஏறி, லிவர்பூல்ஸ்டிரீட் ஸ்டேஷன் வரை சென்று ரயில் நிறுத்தப் பட்டு, எல்லாரையும் அவசர அவசரமகப் போலீஸார் வந்து கீழே இறங்கச் சொன்னார்கள். காரணம் கேட்ட போது, ரயிலில் ஐ. ஆர். ஏ. டைம் பாம் இருப்பதாகப் போலீஸுக்குத் தகவல் வந்திருப்பதாகவும், பிரயாணிகளை அபாயத்திலிருந்து மீட்கத்தான் இந்த அவசரம் என்றும் தெரிவித்தார்கள்.

அது மட்டுமில்லை, அருகிலிருந்த பங்களா தேஷைச் சேர்ந்த அம்மையார் என்னிடம் கூறினார் ;

''நான் மூன்று வருடங்களாக லண்டனில் இருக்கிறேன்! இந்த ஐ. ஆர். ஏ. காரர்களிடம் ஒரு நல்ல பண்பாடு உண்டு. ரயிலிலோ, பஸ்ஸிலோ, டாக்ஸியிலோ டைம் பாம் வைத்தாலும் மிக அருகிலிருக்கும் ஒரு போலீஸ் ஸ்டேஷனுக்கு அவர்களே டெலிஃபோன் செய்து, 'நாங்கள் இது போல வைத்திருக்கிறோம். பொது மக்களின் நன்மைக்காக

வும் பாதுகாப்புக்காகவும் இதை உங்களுக்கு முன்கூட்டியே தெரிவிக்கக் கடமைப் பட்டிருக்கிறோம்' என்று விரைவாகக் கூறிவிட்டுத் தாங்கள் எந்த நம்பரிலிருந்து பேசுகிறோம் என்பதைப் போலீஸார் அறிய முயலு முன் தொடர்பைத் துண்டித்து விடுவார்கள். நாட்டின் பொது மக்கள் தங்கள் இயக்கம் பண்பாடற்றது - தொல்லை தருவது - கொடூர மானது என்று புரிந்து கொண்டு விடக்கூடாது என்பதுதான் காரணம்'' என்பதாக அவர் விளக்கினார்.

பொது மக்களுக்குத் தொல்லைகளும் சிரமங்களும் தருவதற்காகவே திட்டமிட்டு நடத்தப்படும் நம்முடைய நாட்டு வேலை நிறுத்தங்கள், பந்த்கள், அர்த்தால்கள், மறியல்கள் எனக்கு நினைவு வந்தன.

மக்களிடம் பண்பாடற்றவர்கள் என்று பெயரெடுத்து விடக்கூடாதே என்பது அவர்களுடைய கவலை. எப்படி யாவது மக்களைத் தங்கள் கவனத்திற்குள்ளாக்க வேண்டும் மென்பதே நம்நாட்டு வேலை நிறுத்தக்காரர்களின் கவலை.

பெண்கள் கல்லூரி அருகே உள்ள பஸ் நிறுத்தத்தில் பஸ் ஏறினேன். பஸ்ஸுக்குள் இரண்டு இளைஞர்கள், ''டேய் இப்போ போயி அவ காலை மிதிச்சுட்டு அல்லது அவமேல இடிச்சுட்டு, உடனே சாரி மிஸ்!' ப்ளீஸ் 'எக்ஸ்க் யூஸ் மீ.' என்றே சொல்லப் போகிறேன் பார்! உன்னாலே முடியுமா?''- என்று தங்களுக்குள் பேசிக் கொண்டதை என் காதால் கேட்டேன்.

வம்புக்காக ஒரு பெண்ணின் காலை மிதித்து விட்டு அல்லது இடித்துவிட்டு அவளிடம் மன்னிப்புக் கேட்பது போல நடிப்பது ஒரு பொழுதுபோக்காக மாறிப் பண் பாட்டு நெறி கெட்டு விட்ட நாடு எங்கே, சிறிய தப்புக்குக் கூட ஆத்மார்த்தமாக மன்னிப்புக் கேட்கும் பண்பட்ட நாடுகள் எங்கே?

தெரியாது செய்துவிட்ட தவறுக்காக மன்னிப்புக் கேட்பது பண்பாடு, மன்னிப்புக் கேட்பதற்காகவே தவறு செய்வது, குறும்பு அல்லது அநாகரிகம். இந்த அநாகரிகம் அல்லது காட்டுமிராண்டித்தனம் எல்லாத் துறைகளிலும்

சமீப காலத்தில் வளர்ந்து வருகிறதோ என்று அஞ்சுகிறேன் நான்.

நாகரிகம், பண்பாடு பிறரைப் புண்படுத்தாமல் வாழும் சஹ்ருதயம் போன்றவை பற்றி நமது கதாகாலட்சேபங்களிலும், தமிழ் இலக்கியச் சொற்பொழிவுகளிலும், திருக்குறள் பிரசாரங்களிலும் நிறையவே உரக்கப்பேசுகிறார்கள். ஆனால், நடை முறையில், கழுதை தேய்ந்து கட்டெறும்பான கதையாக ஆகி வருகிறது நமது பண்பாடு. கடந்த காலப் பண்பாடு- புறுவுக்காகச் சிபிச் சக்ரவர்த்தி தன்னுடைய உடம்பை அறுத்துக் கொடுத்தது, மனு நீதிச் சோழன் தன் மகனையே தேர்க் காலில் இட்டுக் கொன்றது. எல்லாம் இன்றைய நமது சிறப்புக்கள் ஆகிவிடப் போவதில்லை. அதே போல்தான், இராமாயண, மகாபாரதப் பண்பாடுகளும் இன்றைய நமது பண்பாடுகள் ஆகிவிடப்போவதில்லை.

நாம் பெருங்காய வாசனையைக்கூட இழந்த வெற்று டப்பாக்களாக இருந்து கொண்டே 'ஒரு காலத்தில் எங்களில் பெருங்காய வாசனை இருந்தது, அதற்கும் முன்பு பெருங்காயம் கூட எங்களுக்குள் இருந்தது' என்று புலம்பிக் கொண்டு இருப்பதில் பயனில்லை.

இன்றைய நமது பொது வாழ்வின் சகலதுறைகளிலும் சோற்றுப்பஞ்சம், துணிப் பஞ்சம், தண்ணீர்ப் பஞ்சத்தை விடப் பண்பாட்டுப் பஞ்சம் பயங்கரமாக இருக்கிறது என்பது என் கருத்து. 

# 9. சராசரி இந்தியனின் சமூகப் பொறுப்பின்மைகள்

ஒரு நாடும் அதன் மக்களும் கட்டுப்பாடாக முன்னேற அவர்கள் எந்த அளவு சமுதாயப் பொறுப்பு உள்ளவர்களாக இருந்தார்கள், இருக்கிறார்கள், இருக்கப் போகிறார்கள் என்பதைக் கவனிக்க வேண்டியது மிகவும் முக்கியம்.

சுதந்திரம் அடைந்து முப்பது ஆண்டுகளுக்குப் பின்னும் பொறுப்பு உணர்ச்சிகளைப் பற்றி இன்னும் சிந்திக்க வேண்டிய நிலைமையில்தான் நாம் இருக்கிறோம். சிந்தனையே இன்னும் முடிவடையாத நிலை.

பொது மக்களைப் பொறுப்புள்ளவர்களாக ஆக்க முடியாத தலைவர்களும், தலைவர்களைப் பொறுப்பு உள்ளவர்களாக ஆக்க முடியாத பொது மக்களும் நிறைந்த நாடாக நாம் தொடர்ந்து இருக்கிறோமோ என்கிற சந்தேகம் தவிர்க்க முடியாததாகவே உள்ளது.

சரியான பாதையில் சென்றாலும்கூடத் தவறான முன்னுரிமைகள், ஒரு தேசத்தையும் அதன் நிர்வாக யந்திரத்தையும், முடிவில் மக்களையும் பொறுப்பற்றவையாக்கி விடப் போதுமானவை. தவறான முன்னுரிமைகளுக்கு நமது நாடு பெயர் பெற்றதாகும்.

அதனால் இந்த முப்பதாண்டுகளில் ஒவ்வொரு துறையையும், ஒவ்வொரு பிரதேசத்தையும், ஒவ்வொரு பிரிவையும், எவ்வளவிற்கு அதிக பட்சம் சமூகப் பொறுப்பற்றவையாக்க முடியுமோ அவ்வளவிற்கு ஆக்கி முடித்தாயிற்று என்று தோன்றுகிறது. மீதியிருப்பவற்றை அப்படி ஆக்கும் முயற்சியில் இப்போது ஈடுபட்டிருக்கிறோம். நமது சமூகப் பொறுப்பின்மைகள் இன்னும் தொடர் கதையாகவே இருக்கின்றன. முற்றுப் பெற்றுவிடவில்லை. தொலை தூரத்து நகரத்திலிருந்து வரும் எக்ஸ்பிரஸ் ரயில் மறு நாள் அடுத்த

பயணத்துக்குத் தயாராவதற்காகச் சுத்தம் செய்யப்பட ரயில்வே யார்டில் நிற்கிறது.

சிறு திருட்டுக்குத் தேவையான கருவிகளுடன் ஒரு கும்பல் புகுந்து கக்கூஸில் பதித்திருக்கும் எவர்ஸில்வர் பிளேட்கள், மின்விசிறி. ஆகியவற்றைக் கழற்றிக் கொண்டு போகிறது. காவலுக்கு இருக்கவேண்டிய ரயில்வே பாதுகாப்புக் காவலர், மற்ருெரு மூலையில் சீட்டு விளையாடிக் கொண்டிருந்து விடுவதால் திருட்டு அவர்கவனத்திலிருந்து தப்பி விடுகிறது.

இன்ெனுரு மூலையில், சரக்கு ரயிலில் திருட்டு நடந்து கொண்டிருக்கிறது. பல ரயில்வே புக்கிங் ஆபீஸ்களிலேயே, பத்திரிகை பார்ஸலானுல் பத்துப் பத்திரிகைகள், மாம்பழப் பார்ஸலானுல் ஒரு டஜன் மாம்பழம் என்று, பார்ஸல் புக்கிங் ஆட்களே கேட்டு வாங்கிக் கொள்கிருர்கள். எங்கே கஸ்டமர் கொடுக்காமல் மறந்துவிடப் போகிருரோ என்று பொறுப்பாக ஞாபகப்படுத்திக் கேட்டு வாங்கிக் கொள்வதை எப்படிச் சமுதாயப் பொறுப்பின்மை என்று கூறமுடியும்?

சென்னையில், ரிஃபைனரியிலிருந்து வரும் எண்ணெயை நடு வழியில் ஓட்டை போட்டு எடுத்தவர்களைக் கைது செய்கிருர்கள். பல நாள் இந்த எண்ணெய்த் திருட்டு நடந்த பின்தான் சம்பந்தப்பட்டவர்களுக்கு விழிப்புணர்ச்சி வந்திருக்கிறது. தொடர்ந்து காலை- மாலை தினசரிகளைப் படிக்கும் போது, திருட்டு, பொதுச் சொத்துக்களைக் கொள்ளையடிப்பது என்பது நமது 'தேசிய குணநலன்'களில் ஒன்ருகவே ஆகி விட்டதோ என்று கூடத் தோன்றுகிறது. காசு, பணம் எதுவும் திருட முடியாமல் அநாதைகளாகவும் அநாதரவாளர்களாகவும் பெண்கள், தாய்மார்கள் அகப் பட்டால் அவர்களிடமிருந்து உடம்பையும், கற்பையும் திருடுவது என்பது போலீஸ் ஸ்டேஷன் முதல் போக்கிரி களின் இருப்பிடம் வரை மாமூலாகி வருகிறது. பெண்களும் திருடப்படுகிருர்கள்.

ஓரிடத்தில் இலட்சக் கணக்கில் செலவழித்துத் தார் ரோடு போடப்படுகிறது. ரோடு போடப்பட்டு முடிந்து புதுக்கருக்கு அழிவதற்குள்ளேயே மின்சார இலாகா ஆட்கள் வந்து புது ரோட்டைக் கடப்பாரையால் தோண்டித் தங்கள் வேலை முடிந்ததும் மறுபடி மூடி விட்டுப்போய் விடுகிறார்கள். வாய்க்கால் போலக் குறுக்கே ஒரு பள்ளம் உண்டாகி விடுகிறது. அடுத்த நாள், பத்தடி தள்ளி அதே சாலையில் இன்னொரு பகுதியில் கார்ப்பொரேஷன் தண்ணீர்க் குழாய் வேலைக்காரர்கள் தோண்டி விட்டுத் தங்கள் வேலை முடிந்ததும் மறுபடி மூடி விட்டுப் போய் விடுவார்கள், புது ரோட்டின் குறுக்கே இன்னொரு வாய்க்கால் பள்ளமாக விழும்.

நாலைந்து நாள் தள்ளி அதேசாலையில் வேறு ஒரு பகுதியில் டெலிபோன் இலாகா கேபிள்களைப் பதிக்க ஏதாவது தோண்டலாம்.

மூன்றாவதாக, இன்னொரு வாய்க்காலும் உண்டாகி விடும். மூன்று இடங்களில் புத்தம் புதிய சாலை பழுதாகி விடும். மூன்று துறைகளின் தனித் தனிப் பொறுப்பின்மைகள்- மொத்தமான பொறுப்பின்மையாக மாறி ஒரு சாலையைப் பாதிக்கிறது. அரசு அலுவலகங்கள் சிக்கனமாக இருப்பதற்கான வழி வகைகளைக் கண்டறிய மத்திய அரசு ஒரு கமிட்டி நியமிக்கிறது என்று வைத்துக்கொள்வோம்.

இந்தக் கமிட்டியில் இந்திய மாநிலங்களின் அடிப்படையில் இருபதுக்கும் மேற்பட்ட உறுப்பினர்கள் இருந்தால் இவர்கள் டெல்லியில்கூடிப் பேசி முடிவெடுக்கவே மாதா மாதம் டி. ஏ. என்ற பேரில் கால் லட்ச ரூபாய் ஊதாரித்தனமாகச் செலவழியும்.

அந்தக் கமிட்டி கலைந்து விட்டால் அப்புறம் தங்களுக்கு வேலை எதுவும் இராதே என்று பயத்திலும், தற்காப்பு உணர்விலுமே கமிட்டி நீடித்துக் கொண்டிருக்கும். இந்திய நாடு சுதந்திரமடைந்த நாளிலிருந்து இப்படிப் பொறுப்பற்று இயங்கும் கமிட்டிகள் பல இருக்கின்றன. அவைகளைக் கலைத்து விடலாமா, வேண்டாமா என்ற சர்ச்சை எழு

மானால் அதை முடிவு செய்வதற்குக்கூட அரசாங்கம் தன் வழக்கப்படி ஒரு கமிட்டியை நியமித்துவிடக்கூடும்.

இன்னும் இலட்சக்கணக்கான ஊர்களுக்கு நியாயமான குடி தண்ணீர் சுகாதார வசதிகளை நம்மால் செய்து தர இயலாமல் இருக்கும் போது, கலர் டெலிவிஷனைப் பற்றி அக்கறை காட்டி ஆராய்ந்து கொண்டிருக்கிறோம். தவறான முன்னுரிமைகள் வேறு பொறுப்பற்று இயங்குவதற்குக் காரணம் ஆகின்றன.

ஏற்றிஇறக்கும்போது துறைமுகங்களில் தரைமீது சிந்திக்கிடந்து விரயமாகும் கோதுமை, மைதா போன்ற வற்றைக் கண்டால்.' நாமா ஏழை நாடு என்ற சந்தேகமே வந்து விடும். பொதுப் பண்டங்களை விரயமாக்குவதிலும், வீணடிப்பதிலும் அத்தனை சிரத்தை நமக்கு,

சராசரி இந்தியனுக்குச் சமூகப் பொறுப்பின்மை என்பது பல ஆண்டுகளாகவே இரத்தத்தில் ஊறிப்போனது. தன் வீட்டைச் சுத்தமாக வைத்துக்கொள்வதற்காக நடுத் தெருவில் குப்பையைக் கொண்டுவந்து கொட்டி விடும் அத்தனை சிரத்தையையும், அக்கறையையும் ஒவ்வொரு தனி மனிதனும் பழகிக் கொண்டிருக்கிறான் இங்கே.

சிலர் தன்னளவில் பொறுப்போடு வாழ்ந்து பொதுப் பொறுப்புக்களில் மெத்தனமாக இருக்கிறார்கள். இப்படிப் பொறுப்பின்மை நாளுக்கு நாள் வளர்ந்து வருகிறது. பெரிய நகரங்களில் தினசரி வழக்கமாகி விட்ட ஊர் வலங்களுக்காக அரசாங்க பஸ்கள் வேறு பாதைகளில் சுற்றிப்போகும்படி அனுமதிக்கப்படுகின்றன. இதனால் ஏற்படுகிற எரி பொருள் விரயம் பற்றி யாரும் சிந்திப்பதில்லை.

எல்லா சர்க்கார் அலுவலகங்களிலும் மேலேயிருந்து கீழே உள்ள ஆள்வரை யாரும் எந்தப் பிரச்னைக்கும் பொறுப் போடு பதில் சொல்வது அபூர்வம்.

ஹெட்கிளார்க்கைப்பார்த்தால், சூப்பிரிண்டெண்டைப் பாருங்கள் என்பார்கள் 'சூப்பிரிண்டெண்டைப் பார்த்தால் 'ஆடிட் செக்ஷனில் போய் விசாரியுங்கள்' என்பார்கள்.

ஆடிட் செக்ஷனில் போய் விசாரித்தால், மறுபடி ஹெட் கிளார்க்கிடம் பந்தாடுவார்கள்., பார்க்கிற யாரிடமிருந்தும் பொறுப்போடு கூடிய பதிலைப் பெறவே முடியாது.

மத்திய, மாநில அரசாங்க அலுவலகங்களில் இது சர்வ சகஜமான நிகழ்ச்சி. பொறுப்பு என்பது சுமைதான், கனம் தான். பொறுப்பில்லாத நிலை என்பது சுகமாகவும், உல்லாச மாகவும் இருக்கலாம்.

ஆனால், எல்லாருமே சுமையைக் கீழே இறக்கி வைத்து விட்டு நிற்க ஆசைப்படுகிற தேசத்தில் அந்தத் தேசத்திற்கே தேவையானவற்றை வேறு உலகிலிருந்து தேவதூதர்களா வந்து எடுத்துச் சுமந்து கொண்டு போவார்கள்?

படித்தவர்களே பொறுப்பற்று இருக்க விரும்பினால் கதி மோட்சமே இல்லை. உ. பி, யில் பதவிக் காலம் முடிந்து போன பாராளுமன்ற உறுப்பினர் ஒருவர், பழைய—காலா வதியான ரயில்வே பாஸைக்காட்டி மிரட்டியே நீண்ட காலம் முதல் வகுப்பில் ஓசிப்பயனணம் செய்து வந்தாராம். அரசன் எவ்வழி அவ்வழி மக்கள். பொறுப்பின்மை என்பது மேலிருந்து கீழ் நோக்கிப்பாய்கிற வியாதி.

சமூகப் பொறுப்பில்லாத தலைவர்கள் நிறைந்த தேசத்தில் சமூகப் பொறுப்புள்ள மக்களை உருவாக்க முடிவது சிரம சாத்தியமான காரியம். விதை ஒன்று போடச் சுரை ஒன்று முளைக்காது.



# 10. அபத்தமான மொழி பெயர்ப்புக்கள்

கடந்த பத்துப் பதினைந்து ஆண்டுகளாகத் தமிழ் மொழியில் சில இடங்கள், சில பொருள்கள், சில அலுவலகங்களைப் பொறுத்த பெயர்களை, தீவிரமாக மொழிபெயர்க்கும் முயற்சி ஆரம்பமாகி நடை பெற்றுவருகிறது. இந்த முயற்சியில் நல்ல மொழி பெயர்ப்புக்களை விட அபத்தமான மொழி பெயர்ப்புக்களே அதிகமாகக் கிடைத்திருக்கின்றன. பாமர மக்கள் தெளிவாகப் புரிந்து கொள்ள முடிந்த மொழி பெயர்ப்புக்களைவிட, அவர்களை மேலும் குழப்பமடையச் செய்யும் மொழிபெயர்ப்புக்களே பெரும்பாலும் செய்யப் பட்டுள்ளன. மொழி பெயர்ப்பைவிட மூலமே நன்கு புரிகிறது என்ற நிலை உண்டாகிறது.

''ஒரே ஒரு தனி வார்த்தையாக 'லாரி' (lorry) என்று இருப்பதைத் தனித் தமிழிலோ, தூய தமிழிலோ சொல்ல வேண்டுமென்ற முனைப்பில் சரக்கு + உந்து சரக்குந்து, பண்ட உந்து என்றெல்லாம் மொழிபெயர்க்கிறார்கள். பிற மொழி வார்த்தையை நம் மொழியிலுள்ள மற்றொரு வார்த்தைக்குப் பெயர்ப்பதைவிட, அந்த அர்த்தத்தைத் தரும் விதத்தில் இரண்டு மூன்று வார்த்தைகளாகப் பெயர்க்கிறோம். அந்த மொழிபெயர்ப்பிலும் ஒரே மொழிபெயர்ப்பைக் கொண்டு திருப்தி அடைவதில்லை. சரக்குந்து என்பதில், 'சரக்கு' என்ற சொல் தமிழா இல்லையா என்ற சந்தேகம் வந்தவுடன் 'பண்ட உந்து' என்று மற்றொரு மொழிபெயர்ப்பை உண்டாக்குகிறார் ஒருவர். எல்லாம் தமிழிலேயே இருக்க வேண்டும், வெளியிலிருந்து எதுவும் வரக்கூடாதுஎன்ற எண்ணத்தில் இந்தமொழிபெயர்ப்புக்கள் செய்யப்படுகின்றன. இப்படி வெளிக் காற்றே ஆகாது என்று நம் வீட்டு ஜன்னலையும், கதவுகளையும் இறுக்கி மூடி

அடைத்துக் கொண்டு மூச்சுத் திணற வேண்டியது அவசியம் தானு என்பதைச் சிந்திக்க வேண்டும்.

தான் தூய்மையாகவும், வேறு எதுவும் தன்னில் வந்து கலந்து சேர்ந்து விடாமலும் இருக்க வேண்டுமென்று சமுத்திரம் ஆசைப்பட்டு, நதிகள் எல்லாம் தன்னில் சங்கமமாவதைத் தடுத்தால் என்ன ஆகும்? சமுத்திரமே இராது.ஆனல் நதிகளின் கலப்பால் சமுத்திரம் வளப்படவே செய்யும்.

'கண்ட கண்ட ஆட்கள் கண்டகண்ட பணத்தைக் கொண்டு வந்து போடுகிருர்கள். எவன் பணமும் வந்து கலந்து நம் தனித் தன்மையைக் கெடுத்துவிடக் கூடாது' என்று ஒரு பாங்க் நினைத்தால் என்ன ஆகும்? சீக்கிரமே திவாலாகி விடும்.

உலகின் எல்லாப் பெரிய மொழிகளும் சமுத்திரம் போன்றவை. ஒரு பெரிய சமுத்திரத்தில் வந்து கலக்கின்ற வரையில்தான் நதிகளுக்குத் தனித்தனியே பெயர்களும், துறைகளும், கரைகளும் உண்டு. சமுத்திரத்தில் வந்து கலந்த பின் அவை சொந்தப் பெயர்களையும், கரைகளையும், துறைகளையும் இழந்து சமுத்திரம் என்ற பொதுப் பெயரை அடைவது தவிர்க்க முடியாதது. இதேபோல் பெரிய மொழி ஒன்றில், தவிர்க்க முடியாதபடி எந்தத் திசையிலிருந்து எப்படிப்பட்ட வார்த்தைகள் வந்து கலந்தாலும், அவை வந்து கலக்கிற மொழிக்குச் சொந்தமாகி வளத்தைக் கொடுக்கின்றன, என்றே கொள்ள வேண்டும்.

எங்கேயிருந்து யாரிடமிருந்து 'டெபாஸிட்' செய்யப் பட்டாலும் பாங்கில் 'டெபாஸிட்' செய்யப்பட்டு, அங்கே இருக்கிற வரை பணம் அதன் சொத்தாகவே கருதப் பட்டுப் பாதுகாக்கப்படும். மொழியில் டெபாஸிட் செய்யப்படும் சொற்களுக்கும் இது பொருந்தும். தவிர்க்க முடியாதபடி ஒரு மொழியிலிருந்து இன்னெரு மொழியில் வந்து கலக்கும் சொற்களும் இப்படிப் பட்டவையே. ஆக்ஸ்போர்ட் டிக்ஷனரியிலும், சேம்பர்ஸ் டிக்ஷனரியிலும் ஒவ்வொரு புதுப் பதிப்பின்போதும் பல நூறு அதிக வார்த்தைகள் சேர்ந்து விடுகின்றன. அப்படிச் சேரும் வார்த்தைகள் அந்த மொழியை வளப்படுத்துகின்ற

னவே ஒழிய நலியச் செய்து விடவில்லை. இதை இப்படி ஒப்பிட்டுப் பார்ப்பதே அறிஞர்கள் வழக்கம்!

ஆனால், தமிழ்நாட்டு மனப்பான்மை தனி ரகமாக இருக்கிறது. கலப்பு உணவு, கலப்பு மணம், கலப்பு உரம் எல்லாம் வேண்டும். ஆனால், சொற்கள் மட்டும் தவிர்க்க முடியாதபடி கூட வந்து கலந்துவிடக் கூடாது. எப்படியும் அதை அபத்தமாகவாவது மொழிபெயர்த்தாக வேண்டும்.

ஏர்பிரேக், லாரி, பஸ், ரயில், ஆகியசொற்கள் நிரட்சர குட்சிக்குக் கூடப் புரிகிற அளவு சகஜமாக நம் மக்களுக்குத் தெரிந்தாலும், காற்றுத் தடை (ஏர் பிரேக்), சரக்குந்து (லாரி): பேருந்து (பஸ்), புகைவண்டி (ரயில்) என்றெல்லாம் அவற்றை 'மொழி பெயர்க்கிறவர்கள் இருக்கிறார்கள். டீஸலில் ஓடும் ரயில், மின்சார ரயில் எல்லாம் வந்தபின் 'ரயில்' என்ற பதமே டீஸல் வண்டி, மின்சார வண்டி எல்லாம் வந்த பின்பும் பொருந்துகிறது. அடிப்படை அர்த்த அமைப்பு மாறாமல் இருக்கிறது.

**'Women's Consumer Co-operative Society'** என்பதை, 'பெண்கள் நுகர்வோர் கூட்டுறவுக் கழகம்' என்று அர்த்தமே குழப்பமடைகிறாற்போல் மொழி பெயர்க்கிறார்கள். 'பெண்களுக்கான நுகர்வோர் கூட்டுறவு'—என்பதுபோல் மொழி பெயர்த்தால் அபத்தமான அர்த்தமாவது வராமல் இருக்கும்.

**'Minor Irrigation Project'** என்பதை 'சிறு நீர்ப் பாசனத் திட்டம்' என்று, மொழி பெயர்ப்பதை விடுத்து அதையே சிறிது மாற்றி, 'சிறிய நீர்ப்பாசனத் திட்டம்' என்று அருவெறுப்பான அர்த்தம் வராமல் மொழி பெயர்க்கலாம். அர்த்தம் குழம்பாமல் கவனிப்பது மிக மிக அவசியமானது.

பாமரமக்களின் மொழி பெயர்ப்பில்கூட அபத்தம் இருக்காது. படித்தவர்களின் மொழி பெயர்ப்பில்தான் அபத்தம் அதிகம் இருக்கும். L ஆங்கிள் என்பதைப் பாமரத் தொழிலாளி 'ட'ஞ ஆணி என்றும், 'அயர்ன் பாக்ஸை' 'இஸ்திரிப்பெட்டி' என்றும், ரேடியோவை

'ரேடியோ பெட்டி' என்றும், ஃபிரிஜிடேரை 'ஐஸ் பெட்டி' என்றும் 'ப்ளம்' என்பதைச் 'சீமை இலந்தப்பழம்' என்றும் கெரோஸின் என்பதைச் 'சீமைஎண்ணெய்' என்றும், 'பம்ப் செட்' என்பதை 'இறவை மெஷின்' என்றும், டிராக்டரில் கட்டி உழுவதை 'உழவு மிஷினில் உழுவது' என்றும் பாமரர்கள் சகஜமாக மொழி பெயர்த்துச் சொல்லி விடுவார்கள். அவர்கள் மொழி பெயர்ப்பில் செயற்கையோ, குழப்பமோ, புரியாத் தன்மையோ இருக்காது. செயற்கை, புரியாத்தன்மை குழப்பம் இவை எல்லாமும் இவற்றை விடவும் அதிகமான அபத்தங்களும், படித்தவர்களின் மொழி பெயர்ப்புக்கே உரிமையானவை. இந்த விஷயத்தில் 'கல்லாத பேர்களே நல்லவர்கள்' என்பது என் கருத்து. மொழி பெயர்க்கப்படும் மொழியில் (**Rceptive Language**) சரியான ஒரு பதங்ரிகள் கிடைக்காத பட்சத்தில் மூலமொழி (**Donor Language**)யின் புரிந்த பதங்களை அப்படியே பயன்படுத்துவதில் தவறில்லை என்ற மனப்பான்மையே சிறந்தது. லாரி, பஸ், டெலிபோன், டெலிவிஷன் ஆகிய சொற்களுக்கும், அவற்றைப் போன்ற பிற சொற்களுக்கும் இது பொருந்தும். அபத்தமான, யாருக்கும் புரியாத, குழப்பக்கூடிய ஒரு மொழி பெயர்ப்பை விட சுமாரான, எல்லோருக்கும் புரிந்த, யாரையும் குழப்பாத பிறமொழிச் சொல்லே தேவலாம் என்று நினைக்கத் தோன்றுகிறது.

**Trunk Call**-முண்டக் கூவல்; காபி-குளம்பி, கொட்டை வடி நீர்; **Tea Stall**-சூடான சுவை நீரங்காடி; **Jeep**-வல்லுந்து; பொது நோக்கு உந்து (ஜெனரல் பர்ப்பஸ் வெகிக்கிள்), பஸ்-பேருந்து; ப்ளஷர்-இன்ப உந்து ஆகியபல மொழி பெயர்ப்புக்களைப் பாருங்கள். 'கார்' என்பதே எவ்வளவு சகஜமாகப் புரிகிறது என்று நினைத்துப் பார்த்தால்தான், என் வாதத்திலுள்ள நியாயம் புரியும்.

மொழி பெயர்க்கப்பட்டு உருவான தமிழ் மொழிக் குறியீடுகளைவிட, மூலமாக இருக்கும் பழைய பிற மொழிச் சொல்லே நமக்கு நன்ருகப் புரிகிறது. டாக்ஸி-வாடகை

வண்டி என்ருல் குறிப்பாகக் காரை மட்டும் குறிக்காது. வாடகைக்கு வரும் ரிக்ஷா, குதிரை வண்டி அனேத்தையும் தான் குறிக்கும். எல்லோருக்கும் புரிந்த டாக்ஸியை ஏன் புறக்கணிக்க வேண்டும் என்பது தான் கேள்வி.

'**Special Rebate**' என்பதை 'விசேஷத் தள்ளுபடி' என்று மொழிப் பெயர்த்தால்கூடப் புரியும். 'சிறப்புத் தள்ளுபடி' என்று இப்போது இது மொழி பெயர்க்கப்பட்டு வருகிறது. 'சிறுநீர்ப் பாசனம்', 'பெண்கள் நுகர்வோர் கூட்டுறவு' போல இதுவும் குழப்பமான பொருளேயே தரு கிறது. சிறப்பையே தள்ளுபடி செய்துவிற்கிருர்களோ என்று தான் தோன்றுகிறது நமக்கு.

தமிழைப் பொறுத்தவரை, மொழி பெயர்க்கிறவர்கள் தங்கள் புலமையையும், ஆணவத்தையும், ஈகோவையும் காட்ட முயலும் போதுதான் அபத்தங்கள் அதிகமா கின்றன. 'புரிய வைப்பதுதான் முதன்மையானதும் முக்கிய மானதும் ஆகும்' என்பதுதான் மொழி பெயர்ப்பாளனின் லட்சியமாக இருக்க வேண்டும். உதாரணமாக **Incometax** 'வருமான வரி'-இந்த மொழி பெயர்ப்பில் ஆணவமே தெரியவில்லே பாருங்கள். **Maritime Judiciary**-'நெய் தலியல் நீதிநெறி' இந்த மொழிபெயர்ப்பில் படிப்பின் ஈகோ தெரிகிறது. நெய்தல் நிலநெறி நெய்தலியல் நீதி நெறி என்பது சாதாரண மக்களுக்குப் புரியாது. நெய்தல் நிலம் என்பது நீர்ப்பகுதியும், நீர்ப் பகுதியைச் சார்ந்த கரை நிலத்து வாழ்க்கையையும் குறிக்கும். மாரிடைம் ஜுடிஷியரி நீர்ப் பகுதியை மட்டுமே குறிக்கும்.

'**Male Members female Members**' என்பதை ஆணு றுப்பினர், பெண்ணுறுப்பினர் என்று மொழி பெயர்பப்தும், 'ரெடிமேட் ஷாப்' என்பதை 'ஆயத்த ஆடை அங்காடி' என்று மொழி பெயர்ப்பதும் படு குழப்பங்கள். வார்ப்பதை கஜளப் பற்றிய விழிப்பு உணர்ச்சியோடு மொழிபெயர்ப்பில் ஈடுபடுவது முக்கியம். வார்த்தைகளேப் பற்றிய விழிப்பு உணர்ச்சி இருந்தால்தான் ஒருவர், சிறுநீர்ப்பாசனம், பெண்கள் நுகர்வோர் கூட்டுறவுக்கழகம், சிறப்புத் தள்ளு

படி, ஆணுறுப்பினர், பெண்ணுறுப்பினர், காற்றுத் தடை போன்ற அபத்தமான மொழி பெயர்ப்புகளை மொழி பெயர்க்காமல் இருக்க முடியும். கக்கூஸ் (போர்த்துக்கீசிய வார்த்தை) என்பதை இப்போது சிலர், ஆண்கள் ஒதுக்கிடம், பெண்கள் ஒதுக்கிடம் என்று மொழிபெயர்க்கிறார்கள். இதுவும் குழப்பமானதே.

ஆடை கழற்றுதல் போன்ற நவீன நடனங்கள் நடைபெறுகிற 'நைட்-கிளப்'புக்குப் போகிற ஆண்கள்தான் 'பெண்கள் நுகர்வோர் கூட்டுறவுக் கழகம்' அமைக்க முடியும். **'Women's Consumer Co-operative Society** யின் பொருளை அது தருவதைவிட, நான் மேலே கூறியது போன்ற வக்கிரமான பொருளையே அது தருகிறது.

**Guide Book**—கையேடு, **Tutorial**—தோற்றோரியல் என்பதுபோல், மூலவார்த்தையையே ஏறக்குறைய 'டிரான்ஸ் லிட்டரேட்' செய்தது போல் மொழி பெயர்ப்பவர்களும் சிலர் இருக்கிறார்கள். ஆனால், அந்த மாதிரி நபர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவு.

டிரைவரை 'ஓட்டுநர்' என்றும், கண்டக்டரை 'நடத்துநர்' என்றும் மொழி பெயர்த்தாலும் பெயர்த்தார்கள், பல விநோத அர்த்தங்களை அவைகள் தருகின்றன. டிரைவர் பஸ்ஸை ஓட்டி வரும் அசுர வேகத்தைப் பார்த்து அஞ்சி நடு நடுங்கித் தெருவில் மற்றவர்கள் பயந்து ஓடுவதால், சகல ஜீவராசிகளையும் ஓட்டுபவர் (சில சமயங்களில் இந்த உலகத்திலிருந்தேகூட) என்ற பொருளில் 'ஓட்டுநர்' என்ற மொழி பெயர்ப்பு செய்யப்படுகிறது. பஸ் 'பிரேக் டவுன்' ஆகும் போதெல்லாம் பயணிகளை இறங்கி நடக்கச் செய்வதால் கண்டக்டரை நடத்துநர் (நடத்திச் செல்பவர்) என்றழைப்பதும் பொருத்தமாக இருக்கிறது.

சிறப்பைத் தள்ளிவிட்டு விடுவது அல்லது ஸ்டாக்கைச் சிறப்பாகத் தள்ளி விடுவது என்ற பொருள்களில் 'சிறப்புத் தள்ளுபடி' பயன்படுகிறது. பல சமயங்களில் பஸ்ஸில் புழுக்கமாக இருப்பதால் தானோ என்னவோ, 'காற்றுத் தடை' என்று அவர்களே ஒப்புக்கொண்டு எழுதிப் போட்

-டிருக்கிறார்கள்' என்று பரிகசிக்க இடம் தருகிறது 'ஏர்-ப்ரேக்'கின் அழகான மொழிபெயர்ப்பு. டெலிவிஷனை 'வானொளி' என்கிறார் ஒரு மொழி பெயர்ப்பாளர். மின்னல் நட்சத்திரம், சூரியன், சந்திரன் அனைத்துமே 'வானொளி தான். இதில் எதையும் குறிக்கலாம் அது. டெலிவிஷனே எல்லாருக்கும் புரியும்போது, அதைவிடப் புரியாத மொழி பெயர்ப்புக்களை அல்லது, குழப்பமான மொழி பெயர்ப்புக்களை வைத்துக் கொண்டு கழுத்தறுப்பது எதற்காக என்பது தான் என் கேள்வி. உங்களில் பலரது கேள்வியாகவும் அது இருக்கலாம்.

'இப்படியே போனால் தமிழில் தமிழ் இருக்காது-மொழி பெயர்ப்புக்கள் மட்டும்தான் மீதமிருக்கும்' என்று ஒரு நண்பர் அடிக்கடி குறைப்பட்டு வருந்துவார். அது நியாய மான வருத்தமே. அபத்தமான மொழி பெயர்ப்புக்களை விட, சுமாரான புரிகிற வேற்று மொழிப் பதங்களே போதும் என்று ஏற்றுக் கொள்வதில் பாவமோ, வெட்கமோ இல்லை.

பஸ், லாரி, பிரேக்' டெலிபோன் எல்லாம் எல்லாருக்கும் புரிகிற சொற்கள் என்பதனாலேயே புறக்கணிக்கப் படவேண்டுமா என்ன? விஞ்ஞானப் புதுமைகள் எவற்றையும் கண்டு பிடிக்கத் துப்பு இல்லாமல் அவற்றுக்கான மட்ட மான மொழி பெயர்ப்புக்களை மட்டும்கண்டு பிடித்து அதை மக்கள் தலையில் கட்டுவதிலேயே இன்னும் எவ்வளவு காலத்தை வீணாக்கப் போகிறார்களோ? ★

# 11. தேசபக்தி என்பதுதான் என்ன?

எது எது எல்லாம் தேசபக்தி என்று கூறுவதைவிட எதுஎது எல்லாம் தேசபக்தி இல்லை என்று கூறி விடுவது இப்போது மிகவும் சுலபமாயிருக்கும்போல் தோன்றுகிறது. கதர் கட்டுவது, மகாத்மா காந்திஜிக்கு ஜே என்பது, சுதந்திரம் எனது பிறப்புரிமை என்று முழங்குவது—இவை எல்லாம் தேசபக்தியின் அடையாளங்கள் என்று, நாற்பது ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னால் இந்நாட்டில் இவ்வார்த்தைகளுக்குச் சுலபமாக வியாக்கியானம் கிடைத்தது.

'நல்லவனாக இருப்பது என்றால் என்ன?'—என்கிற கேள்விக்கு, எப்படி ஒரு வாக்கியத்தில், ஓர் எல்லையில் ஒரு கோட்டைப் போட்டு அர்த்தத்தைச் சொல்லி முடிக்க இயலாதோ அப்படியே 'தேச பக்தனாக இருப்பது எப்படி?'—என்கிற கேள்விக்கும் ஒரு வாக்கியத்தில் பதில் சொல்லிவிட முடியாது. ஓர் குறுகிய எல்லைக்குள்ளேயும் பதில் சொல்லிவிட முடியாது.

சுதந்திரம் பெறுவதற்கு முன்னர் பிரிட்டீஷ்காரரை எதிர்ப்பதற்கும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்ப்பதற்கும் இந்நாட்டுத் தேசபச்தியில் இடமிருந்தது. இன்று சுதந்திரம் பெற்று முப்பது ஆண்டுகள் கழிந்தபின் அது பொருத்தமற்றதாகவும் அவசியமற்றதாகவும் ஆகிவிட்டது.

ஒரு பொது நல்ல குணத்தை, அல்லது பண்பை ஒரு குறிப்பிட்ட இயக்கத்தோடும், அதன் மனிதர்களோடும் சேர்த்துப் பார்ப்பதாலோ, ஒரு குறிப்பிட்ட காலத்தோடு சேர்த்துப்பார்ப்பதாலோ பிற்காலத்தில் சில அபாயங்கள் ஏற்படும். தேசபக்தி என்ற வார்த்தையும் இந்நாட்டில் இப்படி ஓர் அபாயத்துக்கு ஆளாகியிருக்கிறது. சரியாகவோ, தவறாகவோ தேசபக்தி, தேசபக்தர் என்ற வார்த்

தைகள் இந்நாட்டின் மிக மூத்த காங்கிரஸ் தலைவர்களுட னும் காங்கிரஸ் இயக்கத்துடனும் சம்பந்தப்படுத்தியே பேச வும்—எழுதவும் பட்டுவிட்டதால், மற்றவர்களுக்கும், மற்ற இயக்கங்களுக்கும் அது சம்பந்தமில்லாதது போல ஒரு பிரமை உண்டாக்கப்பட்டு விட்டது. தேசபக்தி—தேசபக் தன்—என்ற மிக உயர்ந்த—மிக விரிந்த பொருளுள்ள பதத் தின் எல்லை குறுக்கப்பட்டுவிட்டது. தற்செயலாக இப்படி நேர்ந்து விட்டதன் காரணமாக இப்போது இப்பதத்தை மறுபரிசீலனை செய்யவேண்டி யிருக்கிறது.

நாம் சுதந்திரம் அடைந்து விட்ட பின் தேசபக்தி என்பது பொருளற்றதாகி விட்டது போல் பேசுகிறவர் களும் இங்கே இருக்கிறார்கள்.

சுதந்திரம் அடைய வேண்டும் என்று போராடும் தேசத் தைவிட, சுதந்திரம் அடைந்து விட்ட தேசத்தில்தான் அதிக மான தேசபக்தி தேவை.

'ஜனகணமன' பாடும்போது எழுந்திருந்து விறைப் பாக நின்று விடுவது, ஒருமைப்பாட்டுப் பிரதிக்ஞை எடுத் துக் கொள்வது, 'நாம் இந்தியர்—நமது நாடு இந்தியா' என்று கூட்டமாக ஒன்றுகூடிக் கிளிப்பிள்ளைகள் போல் உச்சரிப்பது இவை எல்லாமே வெறும் சடங்கு ரீதியான தேசபக்திதான்.

நாட்டின் உற்பத்தித் திறனை வளர்ப்பது, உணவுப் பொருளை வீணாக்காமல் இருப்பது, மிகவும் அரிதான அந் நியச் செலாவணியைச் சிக்கனமாகப் பயன்படுத்துவது, காரணமற்ற வேலை நிறுத்தங்களால் தேசப் பொருளாதாரத் தைச் சீர்குலைக்காமல் இருப்பது, கலவரங்களும் தடலடிப் போராட்டங்களும் நடத்தித் தேசத்தின் பொதுச் சொத்துக் களுக்குச் சேதம் விளைவிக்காமலிருப்பது இவை எல்லாம் தான் உண்மையான தேசபக்தி என்று இன்று கொள்ள வேண்டும்.

கதர் கட்டிக் கொண்டு, மகாத்மா காந்திக்கும் பாரத மாதாவுக்கும் ஜே போட்டுவிட்டு, மேலே சொன்ன தேச நலனுக்குகந்த எல்லாச் செயல்களையும் காற்றில் பறக்க

விடுகிற ஒரு காங்கிரஸ்காரனைவிட, மேலே சொன்ன எல்லாவற்றையும் அதைவிட அதிகமாகவும் தேசநலனுக்கு உகந்தவற்றைச் செய்கிற எந்தக் கட்சியையும்சார்ந்த அல்லது சாராத—கதர் கட்டாத—ஒரு பாமரனை, முதல் தரமான தேசபக்தனாக நான் ஏற்றுக் கொள்வேன். ஒரு மணமகன் தன் திருமண நாளின் புனிதத்தன்மை குறித்தும் சடங்கு சம்பிரதாயத்துக்காகவும் கோடி வேஷ்டியை மஞ்சளில் நனைத்துக் கட்டிக் கொள்கிறான் என்பதற்காக வாழ்நாள் முழுவதுமே புனிதத் தன்மையைக் காப்பதற்காக மஞ்சள் கோடி வேஷ்டியைக் கட்டிக் கொண்டு திரிய வேண்டுமென்ற அவசியம் உண்டா?

கதரும் அப்படித்தான். அந்நியத் துணிகளின் ஆதிக்கம் இருந்தபோது அந்தச் சுதேசித் துணி புனிதமாகவும் தேச பக்தியின் அடையாளமாகவும் இருந்தது. எழுபத்தைந்து சதவிகிதம் உள்நாட்டில் தயாராகும் துணிகள் கிடைக்கிற இந்நாளில் அது ஒரு பழைய புனித ஞாபகமாக மட்டுமே நிற்க முடியும்.

நாடு நன்றாக இருக்கவேண்டும், நாட்டு மக்கள் நன்றாக இருக்கவேண்டும், அதற்கும், அவர்களுக்கும் சாதகமான அனைத்தையும் சொல், செயல், சிந்தனைகளால் செய்வேன் என்றும்—பாதகமான எதையும் சொல், செயல், சிந்தனை களால் செய்யமாட்டேன் என்றும் உறுதியாயிருப்பவன் எவனாயிருந்தாலும் அவனே தேசபக்தியுள்ளவன். அவன் எந்தக் கட்சியில் இருந்தாலும் இல்லாவிட்டாலும் அவனு டைய தேசபக்தி என்பது தேசத்தின்மேல் உள்ள அக் கறையே ஒழிய ஒரு கட்சியின் மேலுள்ள நாட்டம் மட்டும் இல்லை. அப்படி நினைப்பது வெறும் அறியாமையே.

பிரயோஜனமில்லாத, உப்புச் சப்பில்லாத அயல் நாட்டுப் பயணங்களைச் செய்யும் அமைச்சரைவிடச் சிக்கன மாகப் பெட்ரோல் செலவழிக்கும் ஒரு கார் சொந்தக்காரன் பெரிய தேசபக்தன் என்பது என் அபிப்பிராயம்.

நாட்டின் நலனைத் தன் நலனாக நினைத்து உண்மையோடு பாடுபடுகிறவர்கள், நாட்டின் கஷ்ட நஷ்டங்களாக நினைத்து

உணர்கிறவர்கள் இன்று எல்லாக் கட்சிகளிலும் இருக்கிறார்களா, அல்லது எல்லாக் கட்சிகளிலுமே இல்லையா என்று தான் கேட்க வேண்டி வருமே ஒழிய, ஒரு குறிப்பிட்ட கட்சியை மட்டுமே வைத்துத் தேசபக்தியை ஆராய்வது இன்றும் இனிமேலும் சாத்தியமில்லை.

தேசத்தின்மீது ஆத்மார்த்தமான அக்கறை கொண்ட ஒரு நகரசுத்தித் தொழிலாளி சிரேஷ்டமானவன் என்று நினைத்து மதிக்கிற நெஞ்சுரம் இருந்தால்தான் அசல் தேச பக்தியை நிறுக்க முடியும்.

நாட்டின் சுதந்திரப் போராட்டத்தைத் தனியாக முன் நின்று நடத்திய காரணத்தால்தான் 'தேசபக்தி' என்ற வார்த்தை நினைவு வந்ததும், காங்கிரஸ் (இன்றுள்ள எந்தக் காங்கிரஸ் பிரிவும் இந்த 'அபவாத'த்துக்குரியதில்லை) நினைவு வருகிறது.

மக்கள் தொகையில் தியாகிகள், தேசத் தொண்டர்கள் என்ற ஒரு தனிப் பிரிவினரே இருந்தனர். இன்று நிலைமை அப்படியில்லை. பஸ்ஸின்மேல் கல்லெறிகிறவன், போலீஸாரிடம் அடிபடுகிறவன் அத்தனை பேரும் தியாகிதான் இன்று.

முந்நூறு கோடி ரூபாயில் நிறைவேற்ற முடிந்த ஒரு திட்டத்தை இருநூற்றெண்பது கோடி ரூபாயில் முடித்துத் தேசத்துக்கு இருபது கோடி ரூபாய் சிக்கனப்படுத்துகிற ஒரு இன்ஜீனியர்தான் இன்றைய தேசபக்தன். அன்று மூவர்ணக் கொடி தாங்கி பிரிட்டிஷ் போலீஸிடம் அடிபட்டு ஜெயிலுக்குப் போனவன் எவ்வளவு பெரிய தியாகியோ அவ்வளவு பெரிய தியாகி என்று கதர் அணியாத இந்த உண்மை இன்ஜீனியரை இன்று மதிக்கக் கற்றுக்கொள்ள வேண்டும்.

நாட்டின் விவசாய உற்பத்தி, தொழில் உற்பத்தி இவை குன்றாமல், இருக்கப்பாடுபடும்ஒவ்வொரு நல்ல தொழிலாளியும்கூட இன்று தேசபக்தன் ஆகிறான்.

தேச சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டவர்கள், அல்லது ஈடுபட்டுச் சிறை சென்றவர்கள்தான் அன்று தேச பக்தர்கள். அந்நிய ஏகாதிபத்தியத்துக்கு ஒத்துழைத்த

வர்கள், தேச பக்தர்களைக் காட்டிக் கொடுத்தவர்கள், எல்லோரும்தான் தேசத் துரோகிகள்.

ஆனால் இன்றோ தேச முன்னேற்றத்துக்கு உழைக்காத—தேச முன்னேற்றத்துக்கு எதிராக உழைக்கிற—அனைவரும் தேசத் துரோகிகளே. சுதந்திரத்துக்குப் போராடுகிற நாட்டில் இருந்தவர்களைவிட அதிகமான தேச பக்தர்கள் சுதந்திரம் அடைந்த நாட்டில்தான் இருக்கவேண்டும். எஸ். எஸ். எல். சி. பாஸ் செய்தவனுக்கு அனா ஆவன்னா அல்லது ஏ, பி, சி, டி, தெரிந்திருக்க வேண்டும் என்பது எப்படிச் சொல்லாமலே விளங்குமோ, அப்படியே ஒரு தேசத்தின் விசுவாசமுள்ள குடிமகன் தேசபக்தனாகவும் இருக்கவேண்டும் என்பது சொல்லாமலே விளங்கும். ஆனால், நம் நாட்டு வழக்கப்படி சாதாரணமாக ஒருவருக்கு இருக்க கவண்டிய குணங்களையே சிறப்பியல்புகளாக உயர்த்திப் பேசுவது உண்டல்லவா? அதுபோல் 'தேசபக்தியும்' பேசப்படுகிறது.

'இவர் தாய்மொழியில் பற்றுள்ளவர்'—என்று ஒருவரைப்பற்றிச் சொல்வது உண்டல்லவா? தேச பக்தியைப் பற்றியும் அப்படிற்தான் சிறப்பித்துச் சொல்லிக்கொண்டிருக்கிறோம். தாய் மொழியில் பற்றில்லாதவராக இருப்பதே இயல்புக்கு மாறானது என்ற உணர்வு ஏற்படுவதற்குப் பதில், தாய்மொழி தெரிந்து அதில் பற்றுள்ளவராகவும் இருப்பது பெரிய காரியம் என்பதாகச் சொல்லிப் பெருமைப் படுத்தியும், பெருமைப்பட்டுக் கொண்டும் இருப்பது போல் தான் தேசபக்தி விவகாரமும் சில சமயங்களில் பெரிது படுத்தப்படுகிறது.

சாதாரணமாக இருந்தாக வேண்டிய நல்ல குணங்களையே விசேஷமான குணங்களைப்போல் மேடையில் சும்மா வானளாவப் புகழ்ந்து பேசிப் பழகிவிட்ட நம் நாட்டில், மிகப் பல விஷயங்கள் இப்படித்தான் உள்ளன.

'இவர் ஆங்கிலேயர்—இவருக்கு இங்கிலீஷில் நல்ல பற்று உண்டு'—என்று லண்டனில் ஒருவரை இன்னொருவருக்கு அறிமுகப்படுத்த மாட்டார்கள். சிரிப்புக்கிடமாகிவிடும்

அப்படி அறிமுகம். ஆனுல் இங்கே அப்படி அறிமுகப்படுத்து வது சர்வசகஜம்.

மிகப் பெரிய பாரம்பரியமுள்ள நமது பக்தி இயக்கத்தில் எப்படி 'மூட பக்தி' என்று ஒரு இரண்டாந்தர வகை ஏற் பட்டு விட்டதோ, அப்படியே தேசபக்தியிலும் பல மூட பக்திகள் எற்பட்டு விட்டன. தேச பக்தியைக் கட்சிகளிட மிருந்து விடுவித்து,தேசத்தின் எல்லாத் தரப்பு மக்களிடமும் கொண்டுவந்து பரப்பிஞல்தான் அதிலுள்ள மூடபக்தி ஒழிய வழி பிறக்கும் போலும்.

# 12. காட்சிக்கு எளிமை

ஓர் அரசியல்வாதி காட்சிக்கு எளியவனுக இருக்க வேண்டும். அதாவது, மக்கள் சிரமப்படாமல் கண்டு பேசித் தங்கள் குறைகளைக் கூற முடிந்தவனுக இருக்க வேண்டும் என்று, மன்னராட்சிக் காலத்து அரசியல் பற்றி எழுதிய போது திருவள்ளுவர் கூறியிருக்கிருர்.

ஜனநாயகம், தேர்தல் ஆகிய புதிய முறைகள் அடங்கிய இந்தக் காலத்துக்கு இது இன்னும் அதிகம் பொருந்தும். இது மக்களாட்சிக் காலமாயிற்றே!

'காண்பதற்குச் சுலபமானவனுகவும் கடுஞ்சொற்களைப் பேசாதவனுகவும் உள்ள அரசியல் தலைவனின் செல்வாக்கே வளரும்' என்பது திருவள்ளுவர் கருத்து.

இன்றைய அரசியல் தலைவர்களில் பலரைக் காண்பதே 'குதிரைக் கொம்பாக' இருக்கிறது. தேர்தல்களின்போது ஓட்டுச் சேகரிக்க வருகிற சமயத்தில் மட்டும் அவர்கள் சாதாரண மனிதர்களையும், பாமரர்களையும் தேடி வருகிருர்கள்.

தேர்தல்கள் முடிந்து வெற்றி பெற்றுப் பதவிகளில் போய் அமர்ந்த பின்பு அவர்களைத் தேடிச் சாதாரண மனிதர்களும், பாமரர்களும் போனுல் சந்திப்பதற்கு நிதானமும் பொறுமையும் இல்லாமல் தட்டிக் கழிக்கிருர்கள் அவர்கள்.

நிறையப் பேரைச் சந்தித்துப் பேசினுலே தங்கள் செல்வாக்கும், பெருமையும் குறைந்து விடுமோ என்றுகூட எண்ணுகிருர்கள்.

இதில் சில தலைவர்கள், பிரமுகர்களின் மனப்பான்மை மிகவும் விநோதமானதாக இழ்க்கும். கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசை என்பது போல் தங்களை நிறையப் பேர் தேடி வர வேண்டும் என்ற ஆசைக்குத் குறைவிருக்காது..

அதே சமயம் அப்படித் தேடி வருகிறவர்களைப் பார்த்து நாலு வார்த்தை பேசவும் முடியாது.

சினிமா உலகிலிருந்து புறக்கணிக்கப்பட்டுத் தூக்கி எறியப்பட்டிருந்தாலும், ''இப்போதுதான் ஷூட்டிங்கிலிருந்து வருகிறேன். மேக்-அப்பைக்கூடச் சரியாகக் கலைக்க நேரமில்லை'' என்று கூறிக் கொள்ளும் மாஜி நடிகனைப் போலத் தன்னைச் சுற்றிலும் சதா ஒரு கூட்டம் இருப்பது போலப் பாவித்துக் கொள்ளாவிட்டால் இந்நாட்டில் பல அரசியல்வாதிகளால் உயிர் வாழவே முடியாது.

மக்களில் யாரையும் சுலபமாகக் காண்பதற்கோ, பேசுவதற்கோ, பழகுவதற்கோ தனக்கு நேரமில்லை என்று கூறிக் கொள்வதிலேயே இந்நாட்டு அரசியல் தலைவன் பெருமைப் படுகிறான். இந்நாட்டு அரசியல்வாதிகளின் ஆஷாடபூதித் தனங்களில் இதுதான் தலைமையானது.

தனது பெருமைகளிலும் கௌரவங்களிலும் முக்கியமானது, தன்னை மற்றவர்கள் அத்தனை சுலபமாகப் பார்த்து விட முடியாது என்பதுதான் எனப் பெருமைப்பட்டுக் கொள்வதைப் போல் ஒரு ஜனநாயக நாட்டில் கேவலமான பெருமை வேறொன்றும் இருக்க முடியாது.

முதன் மந்திரியாக இருந்த காலத்திலும், அகில இந்தியக் காங்கிரஸ் தலைவராக இருந்த போதும், இவை இரண்டுமே இல்லாமல் மக்களின் அன்புக்குரிய பெருந்தலைவராக இருந்த போதும் காமராஜ் அவர்கள் காட்சிக்கு எளியவராக வாழ்ந்தார். அது சென்னையோ, மதுரையோ, டில்லியோ, பம்பாயோ அவர் தங்கியிருக்கும் இடத்தில் அவரைக் காண்பதற்காகத் தேடிச் செல்பவர்களை அவர் ஒரு போதும் ஏமாற்றியதோ தட்டிக் கழித்ததோ கிடையாது.

நாள்தோறும் ஆயிரக்கணக்கானவர்களை அலுக்காமல், சலிக்காமல் சந்தித்தார் அவர். எங்கோ ஒரு சாதாரணக் குக்கிராமத்திலிருந்து நம்பிக்கையோடு தேடி வருகின்ற சாதாரணக் கட்சித் தொண்டனிலிருந்து, டில்லியிலிருந்து சந்திக்க ஏற்ற நேரம் காலம் எல்லாம் முன்கூட்டியே

ஏற்பாடு செய்து கொண்டு வரும் பெரிய பிரமுகர் வரை காமராஜ் அவர்களை ஒரு சிரமுமில்லாமல் சந்திக்க முடிந்தது.

பொது வாழ்வில் ஈடுபடுபவன் என்பவன் தெருவோரத்தில் முளைத்திருக்கும், சுலபமாகக் கிடைக்கிற மருந்துப் பச்சிலையைப் போல மக்களுக்குக் கிடைக்க வேண்டும். மலை உச்சியில் போய் மட்டுமே அடைய முடிந்த சஞ்சீவி பர்வதத்து மருந்துச் சரக்காக அவன் இருக்கக் கூடாது.

காந்தி, நேரு, காமராஜ் போன்ற தலைவர்கள் கடைப் பிடித்த இந்த அபூர்வமான எளிமை இன்று இல்லை.

தெய்வங்களைக்கூட நேரே கண்டும் வரம் கேட்டும் வாங்கி வந்துவிடலாம் போலிருக்கிறது. சில தலைவர்களையும் மந்திரிகளையும் சந்திக்கவே முடிவதில்லை.

ஜனநாயகத்தில் மக்களையும் பத்திரிகையாளர்களையும் சந்திக்காமல் ஒதுங்கி உயர்த்திக் கொள்கிறவர்களை மக்கள் ஒருநாள் ஒதுக்கி விடுவார்கள்.

ஹெரால்டு வில்ஸன் நாளைக் காலையில் பிரிட்டிஷ் பிரதம மந்திரி பதவியிலிருந்து விலகப் போகிறார். லண்டனில் நம்பர் 10 டவுனிங் தெருவின் முகப்பில் எந்தக் கூட்டமும் இல்லை. எப்போதுமே அந்த இடம் அப்படித்தான் இருக்குமென்றும், நம்மூர் மாதிரிப் பதவியிலிருப்பவனைப் பட்டிக்காட்டான் யானை பார்த்த மாதிரிப் பார்ப்பது வழக்கமில்லை என்றும் அங்குள்ள நண்பர்கள் கூறினார்கள்.

ஸ்காட்லாந்திலிருந்து உல்லாசப் பயணம் வந்த பள்ளிக் குழந்தைகளின் கூட்டம் ஒன்று 10, டவுனிங் தெரு வாயிலில் நிற்கிறது. வில்சனே மலர்ந்த முகத்தோடு வெளியே வந்து குழந்தைகளிடம் குலாவுகிறார். மழலை மாறாத ஆங்கிலத்தில் ஒவ்வொரு குழந்தையும் 'மிஸ்டர் வில்சன்!' என்று அவரை விளித்து அழைப்பதைப் பார்த்து வியக்க முடிகிறது. ஒரு பரபரப்பு இல்லை. எல்லாம் சகஜமாக இருக்கிறது.

இங்கு அப்படி நடக்குமா? எத்தனை கெடுபிடி? எத்தனை ஜபர்தஸ்து? எவ்வளவு போலீஸ் எல்லாம் இருக்கும்?

பிரிட்டனைப் போல் ஜனநாயகத்தின் கனிவு பூரணமாக இருக்கும் நாடுகளிலும் எளிமை இருக்கிறது. அந்தப் பிரிட்டனிடமிருந்து விடுபட்டுச் சுதந்திர நாடான நாம் மட்டும் நமது எளிமையை எங்கே பறி கொடுத்தோம் என்பதுதான் புரியவில்லை.

வடஇந்தியத் தொழிலதிபர் ஒருவர் தமிழ் நாட்டில் முக்கியப் பொறுப்பில் இருக்கும் ஒருவரைச் சந்தித்து மாலை யணிவிக்கப் புறப்பட்டு வந்து ஏழு நாள் காத்திருந்து விட்டு ஏமாற்றத்தோடு ஊர் திரும்பினார். அந்த முக்கியஸ்தரை எங்கே பார்க்க முடியும், எப்போது பார்க்க முடியும் என்று புரிந்து கொள்ள முடியவில்லை. பார்க்க விடாமல் இழுத் தடிக்கிற வரைதான் மதிப்பு இருக்கும் என்ற ஒரு பிரமை தான் இதற்கெல்லாம் காரணமாயிருக்க வேண்டும்.

தலைவர்களை 'ஓவரா'கக் கும்பிட்டுத் தொழுது உயர்த்திக் குட்டிச் சுவராக்கும் இந்நாட்டு மக்களும்கூட இதற்குக் காரணமாயிருக்கலாம்.

தங்களை நிறையப் பேர் தேடி வருகிறபோது அவர்களைப் பாக்காமல் தட்டிக் கழித்துத் தலை கனத்துப் போவதும், தங்களை யாருமே சீந்தாத காலத்தில் தாழ்வு மனப்பான்மை யால் குன்றிக் குறுகிப் போவதும் இந்நாட்டுத் தலைவர்களில் பலருக்கு வழக்கமாயிருந்திருக்கிறது; இன்னும் இருக்கிறது.

இந்நாட்டு அரசியல்வாதிகளில் பலர் பதவியும் செல்வாக்கும் இல்லாத போது சிரமப்படுவதற்குக் காரணமே, பதவியும் செல்வாக்கும் இருக்கும்போது அவர்கள் போடும் ஆட்டம்தான். எப்போதுமே எளிமை யாக இருந்தால் கவலை இல்லை. மேட்டில் இருப்பவன் பள்ளத்தில் விழ முடியும். சம தரையில் இருப்பவன் எங்கும் விழ மாட்டான், விழ முடியாது.

மக்களை ஒதுக்குவது, அவர்கள் பார்வையில் படாமல் தப்பிப்பது இவை எல்லாமே தாழ்வு மனப்பான்மையாலே வரும் வியாதிகள்.

காந்தி, நேரு, காமராஜ், மொரார்ஜி போன்ற பெரிய தலைவர்கள் (மக்களைச் சந்தித்துப் பேசுவதில்) எளிமையைக்

கடைப்பிடித்தார்கள். கடைப்பிடித்திருக்கிறார்கள். வீடு தேடி வருகிற பொதுமக்களைச் சந்திக்க அவர்கள் அஞ்சியது இல்லை. இன்றையப் பிரமுகர்கள், மந்திரிகள், முதல் மந்திரிகள், காமராஜ் அவர்களை முன் மாதிரியாகக் கொண்டு, காண்பதற்குச் சுலபமானவர்களாகத் தங்களை ஆக்கிக் கொள்ள வேண்டும்.

மக்களால் சுலபமாகக் காண முடியாதவர்கள் மக்களைக் காண முடியாத நிலை ஏற்பட்டு விடலாம். பொதுவாழ்வில் இருப்பவனுக்குக் காட்சிக்கு எளியவனாக அமையும் தன்மை மட்டும் இல்லாவிடில் அவன் நாளடைவில் கவர்ச்சியற்றவனாகி விடுவது நிச்சயம். 

# 13. ஏனோதானோ மனப்பான்மை!

நம்முடைய நகரங்களிலும், நகர்ப்புற வாழ்விலும் இப்போதெல்லாம் டாக்டர்களால் மருந்தும், சிகிச்சையும் அளிக்க முடியாத ஒரு புதுவகை வியாதி தென்படுகிறது. பெரும்பாலான சமயங்களில் இதை ஒரு வியாதி என்று புரிந்து கொள்வதைவிட நாகரிகமென்றும், ஃபாஷன் என்றுமே நம் மக்கள் புரிந்து கொண்டிருக்கும் அபாயமும் இருக்கிறது.

பூரணமான அறியாமையைக்கூட மன்னிக்கலாம். அறிந்தது போன்று பாவிக்கும் அறியாமையையும், அறியாததுபோல் பாவிக்கும் அறிவையும் மன்னிக்கவே முடியாது; மன்னிக்கவும் கூடாது.

இந்த இரண்டிலும் பின்னதாகிய, 'அறியாததுபோல் பாவித்துக் கொண்டு சும்மா இருந்துவிடும் அறிவுதான்' இன்று நாட்டைக் குட்டிச்சுவராக்குகிறது. ஒன்றில் மட்டுமில்லை. பல துறைகளுக்கும் இது பொருந்தும்.

பல சமயம் உங்கள் காதில் அடிக்கடி விழும் உபதேசம் என்ன? 'எல்லாம் அப்படித்தான் இருக்கும்; கண்டு கொள்ளாமல் போங்க' என்றும், 'இராமன் ஆண்டால் என்ன? இராவணன் ஆண்டால் என்ன?' என்றும் நீங்கள் கேள்விப்படுகிற வாசகங்கள்தான் நான் மேலே குறிப்பிட்ட நோயினது முதல் அடையாளங்கள். பொறுப்பு, அதிகாரம், நிர்வாகம்—மொத்தத்தில் ஆட்சியிலிருப்பவர்கள் ஏனோதானோ மனப்பான்மையோடு இருந்தால் மக்கள்தான் தட்டிக் கேட்க வேண்டும். மக்களே ஏனோதானோ மனப்பான்மையோடு இருந்தால் யார் தட்டிக்கேட்பது? தட்டிக் கேட்க ஆளில்லா விட்டால் எந்தத் தப்பும் வேகமாக வளர் [illegible] இயல்பு. சுதந்திரமும், ஜனநாயகமும், தேர்தல்

களும்கூட நாம் எதிர்பார்க்கும் நல்ல விளைவுகளைத் தராமல் போவதற்குப் படித்தவர்களிடமும், மத்தியதர வர்க்கத்தினரிடமும் பரவலாக இருக்கும் இந்தக் கோழைத்தனமும், ஏனோதானோ மனப்பான்மையுமே காரணம்.

ஏனோதானோ மனப்பான்மையை மேற்கொள்வதில் கூட இரண்டு மூன்று விதங்கள் இருக்கின்றன. தனக்குச் சம்பந்தமில்லாத விஷயங்களில் ஏனோதானோ மனப்பான்மையோடிருப்பவர்கள், பொது விஷயங்களில் மட்டும் ஏனோதானோ மனப்பான்மையோடிருப்பவர்கள், பேதா பேதமில்லாமல் சகல விஷயங்களிலும் ஏனோதானோ மனப்பான்மையோடு இருப்பவர்கள் என்று இவர்களில் பல ரகங்கள் உண்டு.

ரெளடிகளுக்கும், சமூக விரோதிகளுக்கும் இந்த ஏனோதானோ மனப்பான்மையைப் பார்த்து எப்போதுமே படுகொண்டாட்டம். மேற்குறிப்பிட்ட சமூக விரோதச் சக்திகள் பொது வாழ்விலும், தனி வாழ்விலும் கொழுத்துச் செழித்துக் கிளை பரப்பி வளர்வதற்கே இந்த ஏனோதானோ மனப்பான்மைதான் உரம்.

நகரங்களின் வசதிகளும், கிராமங்களின் ஒதுக்குப்புறமான இயல்புகளும், தனித்தன்மைகளும் கொண்ட ஓர் ஊரில் சிறிதுகாலம் நான் தமிழாசிரியராக இருந்தபோது ஏற்பட்ட அனுபவங்களையும் சென்னை நகர அனுபவங்களையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது ஏனோதானோ மனப்பான்மையின் விகிதாசாரம்-வளர்ச்சி அளவு எல்லாம் புரிகிறது. ஒரு 'காண்ட்ராஸ்ட்'கூட இதில் இருக்கிறது.

அந்தக் கிராமத்தில் எதிலும் ஒதுங்கிப் போகிற, கண்டு கொள்ளாமல் இருந்து விடுகிற மனப்பான்மையை நான் அதிகம் பார்த்ததில்லை. கிராமத்தில் எந்தத் தெருவில் எந்த வீட்டில் நல்லது கெட்டது நடந்தாலும் அதில் மற்றவர்களுக்கும் பங்கு இருக்கும். மற்றவர்கள் விலகிப் போவதோ, பாராமுகமாக இருந்து விடுவதோ நேரவே நேராது. எந்த விஷயமும் ஊர் முழுவதும் அக்கறையுள்ள விஷயமாக இருக்கும்.

ஒரு தெருவில் ஒரு வீட்டில் சாவு நடந்தால், பிணத்தை எரிப்பதற்காக அத்தனை வீட்டாரும் தங்கள் தங்கள் வீட்டு வாசல்களில் தத்தம் பங்காக ஐந்தாறு எருவட்டி கொண்டு வந்து அடுக்கி விடுவார்கள். பிணத்தை எடுக்கிற வரை மற்றவர்கள் வீட்டிலும் அடுப்புப் புகையாது. இறந்தவன் ஏழையாயிருந்தாலும், பணக்காரனாயிருந்தாலும் இந்தக் கூட்டுத் துயரம், கூட்டு மரியாதை எல்லாம் உண்டு. திருமணம் முதலிய மகிழ்ச்சிகளிலும் இப்படி உறவு உண்டு. இயல்பாகவே கூட்டுறவைக் கிராமங்களில் கடைப்பிடிக்கிறார்கள்.

கிராமத்தில் நாலு பெண்கள் குளித்துக் கொண்டிருக்கிற ஒரு படித்துறையருகே யாராவது காலிப் பயல், பெண்கள் காதில் கேட்கக் கூசும் வார்த்தைகளைப் பேசிக்கொண்டு நின்றால், அந்தப் பாதை வழியாகப் போகிற எழுபது வயதுக் கிழவன்கூட அதில் இருந்து விலகி, "நமக்கேன் வம்பு?" என்று போகாமல் அந்தக் காலியைத் துணிந்து கண்டிப்பான். எதிர்த்து நின்று விரட்டுவான். துணிந்து விரோதித்துக் கொள்வான்.

கிராமத்தில் ஒரு தெருவில் ஒரு வீட்டில் திருடு நடந்து விட்டதாகக் குரல் கேட்டால் திருடனைப்பிடிக்கக் கிராமத்து ஆண்பிள்ளைகள் அனைவரும் கம்பு, தடிகளோடு ஓடி வருவார்கள். ஒருவருக்குச் சொந்தமான வைக்கோல் படைப்பில் தீப்பிடித்துவிட்டால் அத்தனை வீட்டுக்காரர்களும் வாளியும், குடமுமாக அதை அணைக்க ஓடிவருவார்கள்.

கிராமத்தில் ஒரு பஞ்சாயத்து உறுப்பினர் தேர்தல் வந்து, அந்தத் தேர்தலுக்காக ஊரறிந்த யோக்கியன் ஒருவனும் அயோக்கியன் ஒருவனும் நின்றால், கட்டுப்பாடாக அனைவரும் போய் வோட்டுப் போட்டு அயோக்கியனைத் தோற்கடித்து நல்லவனைத் தேர்ந்தெடுத்து உதவுவார்கள்.

இங்கே நான் சொல்லுவது இருபது வருஷத்துக்கு முந்திய தமிழ்நாட்டுக் கிராமங்களைப்பற்றிய என் அனுபவ பூர்வமான கணிப்பு ஆகும். கட்சி அரசியலும், சுயநலமும்,

ஏனோதானோ மனப்பான்மையும் இப்போது சில கிராமங்கள் வரையில்கூடப் போய் அவற்றையும் கெடுத்தாலும் கெடுத்திருக்கலாம்.

ஓர் ஒப்புநோக்குக்காக இனிமேல், இங்கே என் சென்னை நகர அனுபவங்களைச் சொல்கிறேன். இரண்டையும் படித்துவிட்டுச் சிந்திப்பீர்களாயின் 'ஏனோதானோ மனப்மான்மை' பற்றிய 'காண்ட்ராஸ்ட்' உங்களுக்குப் புரியும்.

ஒருநாள் கடற்கரையில் நாசூக்காக உடையணிந்த நாலைந்து இளம்பெண்களுடன் இரண்டு மூன்று வாட்டசாட்டமான அரும்பு மீசை இளைஞர்களும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் தோற்றத்திலிருந்தும், பேசிக்கொண்டிருந்த தோரணையிலிருந்தும் வசதியான குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் என்று அறிய முடிந்தது.

அப்போது அவர்களுக்கு வெகு அருகில் வந்து உட்கார்ந்த ரௌடிகளின் தோற்றமுடைய இரண்டு துண்டு பீடி ஆட்கள், பெண்கள் கேட்கக் கூசும் செங்காங்கடை பாஷையில் விடாமல் இரைந்து பேசினார்கள். பேசவேண்டும் என்பதற்காக இல்லாமல், அருகே அமர்ந்து இங்கிதமான குரலில் தங்களுக்குள் மெதுவாகவும், நாகரிகமாகவும் பேசிக் கொண்டிருக்கும் மற்றவர்களை வலுவில் சண்டைக்கு இழுக்க வேண்டும் என்றே அந்தத் துண்டு பீடி ஆட்கள் முயல்வதாகத் தெரிந்தது.

அரும்பு மீசை, டி ஷர்ட் இளைஞர்களையும், யுவதிகளையும் இது பாதித்தாலும், கண்டு கொள்ளாமல் அமர்ந்திருந்தார்கள். ஓர் அரும்பு மீசை இளைஞர், தான் ஜூடோ, கராத்தே படிப்பது பற்றிப் பெண்களுக்கு அவர்கள் நகைத்து மகிழும் விதத்தில் விளக்கிக் கொண்டிருந்தார். துண்டு பீடி ஆட்கள் எல்லை மீறி ஆபாசமாகப் பேசத் தொடங்கிய பின்பும், அரும்பு மீசை இளைஞர்கள் அலட்டிக் கொள்ளவில்லை. பாதிக்கப்படவில்லை.

ஆனால், நான் பொறுமை இழந்தேன். அந்தத் துண்டு பீடி ஆட்களை நோக்கி, ''இது பீச்! பொது இடம். மத்த

வங்களும் வந்திருப்பாங்கங்கற நினைப்போட நடந்துக் கணும்'' என்று நான் கண்டிக்க முற்பட்டபோது, ''டோண்ட் பிக் அப் குவாரல்ஸ்! லெட் தெம் நாட் டிஸ்டர்ப்டு. இக்னோர் தெம்'' என்று அந்த அரும்பு மீசை, டி ஷர்ட் இளைஞர்களில் ஒருவர் என்னைச் சமாதானப்படுத்த முயன்றார். பின்பு, அவர்கள் அங்கிருந்து மெல்ல எழுந்து நழுவியும் விட்டார்கள். கடைசியில் எனக்கும் துண்டு பீடி களுக்கும் நடுவே சண்டை மூண்டதுதான் மிச்சம்.

மற்றொரு சமயம், நகரின் தனியான ஒரு குடியிருப்புப் பகுதியில் வீட்டு ஆண்பிள்ளைகள் எல்லாம் ஆபீஸ் போன பின், சரியான பகல் நேரத்துக்கு இரண்டு போக்கிரிகள் ஒரு வசூல் நோட்டும் கையுமாக ஒவ்வொரு வீட்டிலும் புகுந்து பெண்களை மிரட்டி ஐந்து, பத்து என்று பணம் கறந்து கொண்டிருந்தார்கள். ஒவ்வொரு சமயம் ஒவ்வொன்றைச் சொல்லி, 'நன்கொடை' என்ற பெயரில் இவர்களது பலாத் கார வசூல் தொடர்ந்தது. மாதக்கணக்கில் அது தொடர்ந்தது.

''பகல் நேரம் பூராவும் நாம ஆபீஸ் போயிட்டா அப் புறம் பொம்பளைங்க தனியாத்தான் இருக்க வேண்டியிருக்கு. வசூலுக்கு வருகிற ரௌடிகளோ பணம் தர முடியாது என்று மறுக்கிற வீட்டுப் பெண்களிடம், 'ஏம்மா, நீ பவுட ருக்குச் செலவழிக்கலே? ஹேர் ஆயிலுக்குச் செலவழிக்கலே? இதுக்கு ஒரு அஞ்சு ரூவா குடுத்தா தேய்ஞ்சா போயிடுவே?' ன்னு மிரட்டறாங்களாம். அவங்களை விரோதிச் சுண்டா வேற வம்பு வருமோன்னு பயப்பட வேண்டியிருக்கு. அஞ்சு, பத்துச் தொலைச்சாத் தொலையறதுன்னு விட்டுட வேண்டி யிருக்கு சார்'' என்று ஒரு படித்த சர்க்கார் உத்தியோகஸ் தர் என்னிடம் அலுத்துக் கொண்டார். எனக்கு வந்த கோபம் கொஞ்சநஞ்சமில்லை.

சட்டம், போலீஸ் எல்லாவற்றைப் பற்றியும் தெளி வாக அறிந்திருந்தும்-கையாலாகாத்தனத்தினாலும், ஏனோ தானோ மனப்பான்மையினாலும், போனால் போகட்டும்

என்று நூறு குடும்பத்து ஆண்பிள்ளைகள் சும்மா இருந்து விட்டால், இரண்டே இரண்டு தெருச் சுற்றிகள் கொள்ளை யடிப்பதைத் தொடர முடிகிறது. அப்புறம், அந்த இரண்டு போக்கிரிகள் வரக்கூடிய நாள் என்று உத்தேசமாகத் தெரிந்த ஒரு நாளில், நான்கு முக்கியமான துணிந்த குடும் பத்து ஆண்பிள்ளைகளை லீவு போட்டுவிட்டு வீட்டிலேயே இருக்கச் செய்து தந்திரமாகப் போலீஸில் பிடித்து ஒப் படைக்க யோசனை சொன்னேன். அப்படியே செய்து தொல் லையை ஒழிக்க முடிந்தது.

இன்னொரு தெருவில் திடீரென்று வீட்டு முன்புறங்களில் எல்லாம் தாறுமாருகக் குடிசைகள் முளைத்து வீட்டில் வசிப்ப வர்கள் உள்ளே போக, வெளியே வர முடியாமல் தெருவி லேயே மலஜலம் கழிக்கிற நிலைமை உருவாகிப் பல மாதங் களுக்கு அந்த நிலைமை தொடர்ந்தது. அந்தத் தெருவிலுள்ள சகல கட்சிக்காரரும் இதனுல் சிரமப்பட்டாலும்: அவர்களது கட்சித் தலைமை இதை ஒரு பிரச்னையாக்கப் பயப்பட்டது. எல்லாக் கட்சிகளுக்கும் குடிசைவாசிகள் என்முல் ஒரு 'வீக் னஸ்.' ஒரு பயம்.

ஒரு தேர்தலில், எலெக்ஷன் தேதியில் மழை வந்து விட்டது. படித்தவர்களும், நடுத்தர வர்க்கத்தினரும் 'மழையில் யார் போய் அலைவது?'-என்று சும்மா இருந்து விட்டார்கள். இந்த ஏனோதானோ மனப்பான்மையால் நல்ல வேட்பாளர் ஒருவர் தோற்கடிக்கப்பட்டார். இன்னொரு தேர்தலன்று கிருத்திகையோ, தைப் பூசமோ வந்தது. பலர் வோட்டளிக்கப் போகவில்லை. ''கிருத்திகையன்னிக்கு எலெக்ஷன் வச்சா எப்படி சார்?'-என்று சும்மா இருந்து விட்டார்கள். அதே சமயம் எலெக்ஷனில் வோட்டுப் போடாமல் மிச்சம் பிடித்த நேரத்தை வைத்து, விரதமோ, நோன்போ வழிபாடோ செய்து கிருத்திகைக்காகவும் அவர் கள் எதுவும் கிழித்து விடவில்லை. சும்மா வராமல் இருப் பதற்குக் கிருத்திகை ஒரு சாக்கு. அவ்வளவுதான். கிருத் திகையையும் மதிக்காமல் தேர்தலையும் மதிக்காமல் இதென்ன தட்டிக் சழிக்கும் மனப்பான்மையோ?

தாக்குப் பிடிக்கும் தன்மை (**Resistance**) இருந்தால்தான் ஏனோதானோ மனப்பான்மை போகும். ஏனோதானோ மனப் பான்மை, கையாலாகத்தனம், தட்டிக் கழிக்கும் இயல்பு, தப்பிப் போதல் (**Escapism**) எல்லாம் இருக்கிறவரை, 'அப் பாவிகள்' என்ற பட்டம்தான் நமது மக்களுக்கு மிஞ்சும். ஒரு ஜனநாயக நாட்டின் மக்கள் எவ்வளவு காலம் தான் அப்பாவிகளாக இருப்பது என்பதைப் பொறுத்துத்தான் இதுவரை உச்சவரம்பு எதுவும் கிடையாதே? ★

# 14. ஆஸ்பத்திரிகளும் சர்க்கார் அலுவலகங்களும்...

நம்முடைய சர்க்கார் அலுவலகங்களில் நுழையும் போது ஆஸ்பத்திரிகளின் நினைவும், அரசாங்க ஆஸ்பத்திரி களின் நெரிசலான பொது வார்டுகளில் நுழையும்போது சர்க்கார் அலுவலகங்களின் நினைவும் தவிர்க்க முடியாமல் எனக்கு ஏற்படுவதுண்டு. உங்களிலும் சிலருக்கு அப்படி ஏற் பட்டிருக்கலாமோ என்னவோ? காரணம், இரண்டிலுமே நோய்களும், நோயாளிகளும் இருப்பதுதான். ஒன்றில் நாற் காலிகளிலும், கேபின்களிலும் உத்தியோக நோயாளிகள் உட்கார்ந்திருக்கிறார்கள். மற்றொன்றில் கட்டில்களில் படுக்கைகளில், நோயாளிகள் படுத்திருக்கிறார்கள். அவ் வளவுதான் வித்தியாசம். ஒன்றில் எந்தச் சிகிச்சையாலும் நோய்கள் தீர்வதே இல்லை. மற்றொன்றில், நோயோ நோயாளியோ தீர்வதுண்டு.

எல்லா வகையான சர்க்கார் அலுவலகங்களிலும் மந்த புத்தி, நாட்களைக் கடத்துவது, தட்டிக் கழிப்பது, விபரம் புரியாமை ஆகிய நோய்கள் பொதுவாக உள்ளன. மிகச் சில அலுவலகங்கள்கூட இதற்கு விதிவிலக்காக இருக்க முடியுமா என்பது சந்தேகம்தான். நல்லெண்ணமுள்ள புதிய நபர்கள் வேண்டுமானால் சில இடங்களை மாற்றலாம்.

சர்க்கார் அலுவலகங்கள், பொது மக்களுக்காகப் பொதுமக்களின் வரிப் பணத்திலிருந்து நடத்தப்படுபவை. ஆனால், அந்த அலுவலகங்களில் பொது மக்கள் அடிமை களைப் போலவும், குற்றவாளிகளைப் போலவும் நடத்தப்படு படுகிறார்கள் என்பதுதான் நடைமுறை உண்மை. பிச்சைக் காரர்களைப் போல் பொதுமக்கள் அங்கே ஏங்கி நிற்க நேர் கிறது.

தங்களைத் தேடி வருகிற பொதுமக்களை, அவர்கள் படித்தவர்களாக இருந்தாலும், பாமரர்களாக இருந்தாலும் இழுத்தடிப்பது, அலைக்கழிப்பது, பந்தாடுவது, குழப்புவது, காலதாமதப்படுத்துவது இவை எல்லாம் நம் சர்க்கார் அலுவலகங்களில் சகஜமாகவும், வழக்கமாகவும் இருந்து வருகிறது. இவற்றை - இந்த நோய்களை - சுதந்திரம், ஜனநாயகம், கால வளர்ச்சி, விஞ்ஞான மாறுதல்கள் என்ற எந்தவித மருந்துகளும் இதுவரை பூரணமாகக் குணப்படுத்த வில்லை என்றே தோன்றுகிறது. பிரிட்டிஷார் நம்மை விட்டுப் போய்ப் பல ஆண்டுகளாகியும் இந்த 'ரெட்டேப் பிஸம்' என்ற நோய் நம்மை விட்டுப் போக மறுக்கிறது. இதற்கு யார் காரணம்?

இவையெல்லாம் வெள்ளைக்கார ஆட்சி நமக்கு மிச்சம் வைத்துவிட்டுச் சென்ற சொத்துக்கள் என்று சிலர் சொல்கிறார்கள். அது சரி என்று எனக்குப் படவில்லை.

இங்கிலாந்திலுள்ள சர்க்கார் அலுவலகங்கள், தபாலாபீசுகள், பாங்குகள் எல்லாவற்றையும் பார்த்த பின் நமது நோய்கள் நூற்றுக்கு நூறு சதவிகிதம் சுதேசித் தன்மை கொண்டவையே என்ற முடிவுக்கு நான் வந்தேன்.

மாதிரிக்கு இரண்டு நாட்டிலுமுள்ள சில அலுவலகங்களை ஒப்பிட்டுப் பார்க்கலாம். அங்குள்ள பாங்குகளில் லீவு நாட்களில்கூடப் பணம் எடுக்க வழி உள்ளது.

ஜனதா அரசின் வெளியுறவு மந்திரி வாஜ்பாய், எவ்வளவோ துரிதப்படுத்த முயன்ற பின்னும்கூட, ஓர் இந்தியப் பிரஜை பாஸ்போர்ட் வாங்குவது என்பது இன்னும் நாட்கணக்கில் - வாரக் கணக்கில் இழுபடக் கூடிய காரியமாகவே உள்ளது.

பிரிட்டனில் அப்படி இல்லை. எந்தத் தபாலாபீஸிலும் ஸ்டாம்ப் வாங்குவது போலவோ, மணியார்டர்ஃபாரம் வாங்குவதுபோலவோ வெகு சுலபமாக ஒரு பிரிட்டிஷ் பிரஜைதன் பாஸ்போர்ட்டை வாங்கி விடமுடியும். தாமதம், இழுத்தடிப்பது, அலைக்கழிப்பது என்ற பேச்சுக்கே அங்கு இடமில்லை.

போஸ்ட் ஆபீஸ் வாசலிலோ, இரயில் நிலைய முகப்பிலோ, டெலிஃபோன் பூத் மாதிரி சிறிய கூண்டுகள் புகைப் படக் கருவிகளுடன் உள்ளன. இவற்றில் ஆள் கிடையாது. போட்டோ எடுத்துக் கொள்ள விரும்புகிறவரே கூண்டுக்குள் நுழைந்து கதவைச் சாத்திக்கொண்டு காசு போட வேண்டிய துவாரத்தில் காசைப் போட்டால், ஒரு நிமிஷத்தில் எதிரே உள்ள காமிரா படத்தை எடுத்துப் பிரிண்டுகளைக் கொடுத்து விடும். அந்தப் படங்களை ஒட்டி விண்ணப் பத்தைப் பூர்த்தி செய்து தபாலாபீஸில் கொடுத்தால் அதிக பட்சம் அரைமணி நேரத்தில் பாஸ்போர்ட் கைக்கு வந்து சேர்ந்துவிடும். தாமதமே ஆகாது.

இப்படி அரைமணி நேரத்தில் பாஸ்போர்ட் கைக்கு வருவதை நம் நாட்டில் நினைத்துப் பார்க்கக் கூட முடியாது. காரியங்களை இழுத்தடித்துத் தாமதப்படுத்திச் செய்தால் தான் தங்களை மதிப்பார்கள் என்று ஒவ்வொரு சர்க்கார் அதிகாரியும் நினைக்கிற நாடு இது. தாமதம்தான் கௌரவமா?

போலி கௌரவம், அலைக்கழிப்பது, தாமதப்படுத்துவது பிறருக்கு உதவ முடியாமல் செய்து கொள்வதன் மூலமே தங்களை உயர்த்திக் கொள்ள நினைப்பது, வறட்டு ஜம்பம் இவற்றை ஏதோ ஒரு விகிதாச்சாரத்தில் கலந்தால், அந்தக் கலவைதான் இந்திய சர்க்கார் அதிகாரியாக இருக்கும்.

வெள்ளைப்பளிங்கு இழைத்து, மொஸைக் பாவி, எவ்வளவு பிரமாதமான கட்டிடத்தை சர்க்கார் அலுவலக உபயோகத்துக்குக் கொடுத்தாலும் மூன்றே நாளில் குப்பை, அழுக்கு, லெட்ஜர் மலைகள், ஃபைல் குவியல்கள் எல்லாம் சேர்ந்து ஒரு காகித ஆஸ்பத்திரியாக அது ஆகிவிடும் இங்கே. இட சுத்தம், கை சுத்தம், ஒழுங்கு பார்க்கப் பளீரென்று இருப்பது இவை எல்லாம் நமது சர்க்கார் அலுவலகங் களோடு ஏன் நிரந்தர விரோதம் பாராட்டுகின்றன என்பதே புரியவில்லை.

உலகின் மற்ற முன்னேறிய தேசங்களின் அதிகாரிகள் எல்லாம் தங்களைத் தேடி வருகிறவர்களின் காரியங்களைத்

துரிதமாக முடித்துக் கொடுப்பது எப்படி என்று முயன்று சாமர்த்தியத்தைக் காட்டுகிறார்கள் என்றால், நம் சர்க்கார் அதிகாரிகள் காரியங்களை உடனே முடித்துத் தருவது என்னும் பாவத்தைச் செய்து விடாமல், இழுத்தடிப்பதில் சாமர்த்தியத்தைக் காட்டி வருகிறார்கள். பொது நிறுவனங் களான பாங்குகள், இன்ஷூரன்ஸ் அலுவலகங்கள் ஆகிய வற்றில் கஸ்டமர்களுக்கு உதவாமலிருப்பது எப்படி என்பதில் விசேஷப் பயிற்சி அளிக்கப்பட்ட நபர்கள் இங்கே நிரம்பியிருக்கிறார்களோ என்று கூட நமக்கு அடிக்கடி நினைக்கத் தோன்றும்.

மாத முதல் வாரம் அல்லது இரண்டாவது வாரத்தில் மின்சாரக் கட்டணம் கட்டும் இடம், பால் கூப்பன் வாங்கும் இடம் இவைகளில் போய்ப் பார்த்தால் உங்களுக்கு இது புரியும். நாலு கவுண்டரில் பணம், செக்குகள் வாங்க ஆட் கள் இருப்பார்கள். ''இரண்டு கவுண்டரில் 'க்யூ' நீளமாக இருக்கும். மற்ற இரண்டு கவுண்டர் ஆட்கள் யாரோடா வது பேசிக் கொண்டிருப்பார்கள் அல்லது நியூஸ் பேப்பர் படித்துக் கொண்டிருப்பார்கள்.

சும்மா இருக்கிற கவுண்டரில் விசாரித்தால், ''இங்கே கேஷ் மட்டும்தான். அந்தக் கவுண்டருக்குப் போ'' என்று பந்தாடுவார்கள். இங்கே செக் மட்டும்தான். அந்தக் கவுண்டருக்குப் போ''—என்பார் செக் பகுதி ஆசாமி. எதில் வேலை குறைவாயிருக்கிறதோ—அல்லது வேலையே இல்லையோ அதைத் தாங்கள் செய்து கொண்டிருப்பதாகப் பாவிப்பதும், சொல்லிக் கொள்வதும் நம் அதிகாரிகளின் வழக்கம். பொதுமக்களுக்கு உதவுவது என்பது அவர்கள் இரத்தத்திலேயே ஊறாத விஷயம் போலும். நல்ல விதிவிலக்கு ஒன்றுகூட இல்லையா என்று நீங்கள் கேட்கலாம். சென்னைப் பல்கலைக் கழக அலுவலகத்திற்குப் போனால், எதைப் பற்றி யாரிடம் விசாரித்தாலும் புரியாது, தெரியாது என்ற மழுப்பல் பதில்கள்தான் கிடைக்கும். அவ்வளவு புரியாமை, அறியாமைகளுக்கு மத்தியில் ஒரு முதிய முஸ்லீம் அலுவலர், தம்மால் முடிந்த வரை வருகிறவர்களுக்குப்

பொறுமையாக விவரங்களை விளக்கிக் கொண்டிருப்பார். அவர் ஒரு பாராட்டத்தக்க நல்ல விதிவிலக்கு. தட்டிக் கழிக்கத் தெரியாத இம்மாதிரி கர்ம வீரர்கள் சர்க்கார், அல்லது சர்க்கார் சம்பந்தப்பட்ட அலுவலர்களில் மிகவும் குறைவு என்றே கூறலாம்.

ஒரு சர்க்கார் ஆஸ்பத்திரியில், பால் என்று தவருகக் கருதி வெள்ளை நிற பினுயிலை நோயாளிக்கு ஊற்றிக் கொடுத்த நர்ஸைப் பற்றி சமீபத்தில் பத்திரிகையில் படித்தோம் அல்லவா? அது மாதிரித் தடுமாற்றங்கள், ஒன்றிற்கு அப்ளை செய்ய வேண்டிய சிகிச்சையைச் சம்பந்தமில்லாத மற்ருென்றிற்கு அப்ளை செய்வது, நோயாளிக்குச் சிகிச்சையோ மருந்தோ அளிக்காமல் ஆரோக்கியமான வனுக்கு அவற்றை அளித்து, அதன் மூலமே அவனை நோயாளி ஆக்குவது இவை எல்லாம் நமது ஆஸ்பத்திரிகளுக்கும், சர்க்கார் அலுவலகங்களுக்கும் பொதுவானவை.

ஒழுங்காக வரிகட்டி முடித்து விட்டு நிம்மதியாயிருப்ப வனுக்கு டிமாண்ட் நோட்டீஸ், அல்லது 'ரிக்கவரி நோட்டீஸ்' வரும். அடாவடித்தனமாக, வந்தது வரட்டும் என்று வரியே கட்டாமலிருப்பவனுக்கு ரசீதும், ரீஃபண்டும் போய்ச் சேரும். இப்படிக் கூறுவது கொஞ்சம் மிகைதான் என்ருலும், நம் சர்க்கார் அலுவலகங்களின் ஆரோக்கிய மற்ற நிலைமையை விளக்க இவ்வாறு அதிசயோக்தியும் தேவைப்படுகிறது.

மந்திரி, ஐ. ஏ. எஸ். அதிகாரி, இதர சர்க்கார் ஊழியர் கள் அனைவரும் தாங்கள் மக்களின் சேவகர்கள் என்று அடிக்கடி பிரசங்கங்களில் கூறுகிருர்கள். ஆனுல், நடைமுறை யில் மக்களைக் காக்கப் போடுவது, தட்டிக் கழிப்பது, அலைக் கழிப்பது ஆகியவற்றையே அவர்கள் தொடர்ந்து செய்து கொண்டிருக்கிருர்கள். சர்க்கார் அலுவலகங்களும், அதிகாரிகளும் சிவப்பு நாடா முறை, தந்தக்கோபுர மனப் பான்மை. இவற்றிலிருந்து விடுபட்டாலொழிய இதற்கு விடிவு பிறக்கப் போவதில்லை.

அப்படி ஒரு விடிவு பிறக்கிறவரை, ஆரோக்கியமில்லா தவர்களாகவே வைத்துக் கொள்வதிலும், ஆரோக்கிய மானவர்களை விரைந்து ஆரோக்கியமற்றவர்களாக மாற்று வதிலும் நம்முடைய ஆஸ்பத்திரிகளுக்கும், சர்க்கார் அலுவலகங்களுக்கும் ஒரு போட்டி இருந்தே தீரும் என்பது என் கருத்து.

ஏனெனில், இவை இரண்டிலுமே சந்தேகத்துக்கு இடமில்லாத வகையில் நோய்களும் நோயாளிகளும் நிரம்பி இருக்கிறார்கள்.



# 15. 'நடுநிலை' என்னும் நாடகம்

தமிழில் 'நடுவு நிலைமை' என்றொரு வார்த்தை திருக்குறள் காலத்திலிருந்தே புழக்கத்தில் இருந்து வருகிறது. திருவள்ளுவர் அந்தத் தலைப்பில் பத்துக் குறளையும் பாடிவிட்டுப் போயிருக்கிறார். ஒருவேளை அதற்கு முன்னாலிருந்தே இவ்வார்த்தை புழங்கியிருக்கலாம்.

அந்தப் பழைய வார்த்தை அன்று பயன்படுத்தப்பட்ட அர்த்தத்திற்கும் இன்று நாம் பயன்படுத்துகிற அர்த்தத்திற்கும்நிறைய வித்தியாசங்கள் இருக்கின்றன. பழைய அர்த்தம் அநேகமாக இன்று செத்துவிட்டது.

இன்று அந்த வார்த்தை கதகளி, ஒட்டந் துள்ளல் ஆகிய நாடகங்களில் பயன்படுத்துகிற முகமூடி போல், பலவற்றை மறைக்கும் முகமூடியாகப் பயன்படுகிறது. கொஞ்சம் கலா பூர்வமான முகமூடி என்றுகூடச் சொல்லிக் கொள்ளலாம்.

நடுநிலைக் கொள்கை, நடுநிலைப் பத்திரிகை, நடுநிலையாளர், நடுநிலைமை முதலான எல்லா வார்த்தைகளும், பிரயோகங்களும் இன்று முகமூடியாகவே பயன்பட்டு வருகின்றன. முகமூடி எவ்வளவு அழகாயிருந்தாலும் அதன் நோக்கம் மூடுவதுதான்.

அழுகிய புண்ணுக்குப் புனுகு பூசிக் கெட்ட நாற்றத்தை மறைக்க முயல்வது போல், ஒரு மோசமான, அல்லது சுமாரான காரியத்தைப் பிரமாதமான வார்த்தையால் சொல்ல முயலும் முயற்சியாக இன்து அது இருக்கிறது. பல மோசமான விஷயங்கள் இன்று பிரமாதமான வார்த்தைகளால் எழுதவும் பேசவும் படுகின்றன. அப்படிப்பட்ட 'பிரமாதமான' வார்த்தைகளில் 'நடு நிலைமை' என்பதும் ஒன்றாக இருக்கிறது. உயர்ந்த பொருளில் வழங்கிய அதன் கடந்த காலப் பெருமையோடு, உயர்ந்த ரகத்தினைச் சேர்ந்த வார்த்தையாக மட்டும் இருந்து, பொருள் தேய்ந்து போய்

வழங்கும் அதன் இன்றைய நிலைமை ஒப்பிடத்தக்கது. அப்போதுதான் அதன் 'டெப்ரஸியேஷன் வேல்யூ' நமக்குத் தெரியும்.

உயிரும், உணர்வும் இல்லாது போனாலும் உயிருள்ள தாய்ப் பசுவை ஏமாற்றிப் பால் கறக்கப் பயன்படுகிற பொய்க் கன்றுக் குட்டியைப் போல்தான், நடுநிலை என்ற வார்த்தையும் இன்று பயன்படுத்தப்படுகிறது. வைக்கோல் அடைத்த கன்றுக் குட்டி என்றால் உங்களுக்குப் புரியலாம்.

'நிறுப்பதற்கு முந்திய நிலையில், தான் சமமாக இருந்து—பின்பு தான் நிறுக்கும் பொருளையும் சமமாகச் சீர்தூக்கும் தராசு போல் அமைந்து, எக்காரணத்தைக் கொண்டும் ஒரு பக்கமாகச் சாய்ந்து விடாமல் நடுவு நிலைமை பேணுவது பெரியோர்க்குரிய குணங்களில் அழகியது'—என்பது, நடுவு நிலைமை பற்றிய திருக்குறளின் ஆதார சுருதியான விளக்கம்.

இந்த இலக்கணத்தின்படி பார்த்தால் நிறுப்பது முக்கியம் என்பதைவிட, நிறுப்பதற்கு முன் சமமாக இருப்பது என்பது தான் மிகமிக முக்கியம். நிறுக்கத் தொடங்குவதற்கு முன்பே ஒரு பக்கமாகத் தாழ்ந்து போய் அல்லது உயர்ந்து போய் இருக்கும் தராசு எதையும் சரியாக நிறுக்க முடியாது என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். நிறுத்த பின்பு வரும் எடைக் குறைவுகள் — கோளாறுகளைவிட — நிறுப்பதற்கு முந்திய கோளாறுகளும் எடைக் குறைவுகளும் கவனிக்கப்பட வேண்டும். நிறுப்பதற்கு முன்பே கோளாறாக இருக்கும் தராசினால் நன்றாக நிறுப்பது போல் நடிக்கத்தான் முடியுமே ஒழிய, நன்றாக நிறுக்க முடியாது. பாசாங்கு உண்மையாகிவிட முடியாது.

'சமன் செய்து சீர்தூக்குவது' என்பது நிறுவைக்கு முன்னும் நேராக இருப்பது, நிறுக்கும் போதும் நேராக இருப்பது, நிறுத்த பின்னும் நேராக இருப்பது என்ற அர்த்தத்தில்தான் இங்கே சொல்லப்பட்டிருக்கிறது.

மேலே கூறிய இந்த அடிப்படையான இலக்கணத்தை வைத்துக்கொண்டு இனி நம்முடைய தற்கால நடுநிலைக் கொள்கையைக் கவனிப்போம்.

'நடுநிலை'—என்ற வார்த்தை இன்று, கையாலாகாத்தனம் அல்லது சும்மா இருப்பது என்ற ரீதியில்தான் புரிந்து கொள்ளப்படுகிறது.

பட்டப்பகலில் நட்ட நடுத் தெருவில் ஒரு பெண்மணியிடம் கத்தியைக் காட்டி மிரட்டி ஒருவன் அவள் நகையைப் பறிப்பதை, இன்றைய 'நடுநிலை'யாளர் (இன்றைய அர்த்தத்தில்தான்) ஒருவர் பார்க்கிறார் என்று வைத்துக் கொள்ளலாம். அவர் என்ன செய்ய வேண்டும்? மிரட்டித் திருடுவதும், பிறருக்குரியதை அபகரிப்பதும், ஆக்கிரமிப்பதும் தவறு. ஆகவே, அபகரிக்கிறவனையும், ஆக்கிரமிக்கிறவனையும், தவிர்த்து விட்டுப் பறிகொடுக்கும் பெண்ணைச் சார்ந்து நின்று அவளை ஆதரிப்பதே நடுநிலைமை என்று முடிவு செய்வதுதான் நியாயமாக இருக்கும். ஒழுங்காகவும், உரியதாகவும் இருக்கும்.

ஆனால், இன்றைய 'நடுநிலை' அர்த்தத்தின்படி அவர் எப்படி முடிவு செய்வார்? பெண்ணை ஆதரித்தால் திருடனுக்குக் கோபம் வரும், திருடனை ஆதரித்தால் பெண்ணுக்குக் கோபம் வரும். இருவருடைய கோபத்தையும் தவிர்க்க ஒரே வழி—இருவரையுமே கண்டு கொள்ளாமல் நடுவராக இருப்பதுதான் என்னும் முடிவுக்கு அவர் இன்று வரக்கூடும். பெண்ணை ஆதரித்து வீணாக 'அவளுக்கு வேண்டியவர்' என்னும் அவப் பெயரைத் தாங்குவதற்குப் பதில் திருடனையே ஆதரித்து விடலாம் என்றும் அவர் விநோதமான ஒரு முடிவுக்கு வரக்கூடும். இன்றைய அர்த்தத்தில் இவைதான் நடுநிலைக் கொள்கை. ஆனால், ஒரிஜினல் அர்த்தத்தில் இது கடைந்தெடுத்த கையாலாகாத்தனம். நல்லது கெட்டது என்று வரும்போது நல்லதைச் சார்ந்து நிற்பதுதான் நடுநிலை. நல்லதற்கும் தீயதற்கும் நடுவில் நிற்பதோ, தீயதைச் சார்ந்து நிற்பதோ நடுநிலை ஆகாது. நடுநிலை என்ற வார்த்தையின் ஒரிஜினல் அர்த்தத்தில் இன்று கடைப்பிடிக்கப்படும் நடுநிலை முரண்பாடானது, பொருத்தமற்றது, பிரயோஜனமில்லாதது.

இந்தப் பிளாட்பாரத்தில் நமக்கு வேண்டாதவர்கள் இருக்கிறார்கள். அந்தப் பிளாட்பாரம் வெகு தொலைவில் இருக்கிறது, உடனே போக முடியாது. ஆகவே, 'அபாயகர மான லாரிகள், பஸ்கள், பயங்கர வேகத்தில் ஓடினாலும் பரவாயில்லை. நடுரோட்டிலேயே நின்று தொலைக்கலாம்' என்று முடிவெடுப்பதைப் போன்றது இத்தகைய இரண்டுங் கெட்டான் நடுநிலைக் கொள்கை.

'நான் அல்லைன்டு—அல்லைன்டு' என்ற ஆங்கிலத் தொடர்களைக் கூட்டுச் சேராமை—கூட்டுச் சேர்தல், நடு நிலைமையின்மை—நடுநிலை என்று மொழி பெயர்ப்பதே தர்க்க ரீதியாகத் தவறு. கூட்டுச் சேர்வதற்கும், கூட்டுச் சேராமைக்கும்—நடுநிலைமைக்கும் தொடர்பே இல்லை. நடு நிலை என்பது முற்றிலும் இவற்றிலிருந்து வேறானது.

ஒரு பக்கத்துத் தராசு இன்னொரு பக்கத்துத் தராசோடு இணைந்து கூட்டுச் சேர்ந்தால்தான் நிறுவையில் நடுநிலையே கிடைக்கும். நல்லவன் ஒருவன் பிற நல்லவர்களோடு கூட்டுச் சேருவதும்—நல்லவர்கள் அல்லாதவர்களோடு கூட்டுச் சேராமையும்கூட நடுநிலைமைதான். 'நடுநிலை நாடுகள்' என்ற மொழிபெயர்ப்பு ஒரு கண்ணோட்டத்தில் சரியில்லை. கூர்ந்து கவனித்தால் உலகில் எதுவுமே நடுநிலை நாடாக இராது. இருக்க முடியாது. கண்டிக்க வேண்டியதைக் கண்டு கொள்ளாமல் விட்டு விடுவதும், பாராட்ட வேண்டிய தைப் பாராதது போலக் கண்ணை மூடிக்கொள்வதும் நடுநிலை அல்ல. தந்திரம் மட்டுமே. தந்திரக்காரர்களை யாருமே நம்ப மாட்டார்கள். ஆனால், அவர்களுக்குப் பயப்படுவார்கள்.

'கிரடிபிலிடி' அல்லது பிறர் நம்பும் தன்மை வேண்டுமா அல்லது பிறர் நம்மைக் கண்டு தற்காலிகமாக மிரண்டு பயப்படும் தன்மை வேண்டுமா என்பதுதான் இன்று நம்முன்னுள்ள கேள்வி. நாட்டின் முன்னுள்ள பெரிய கேள்வி.

அதிதீவிர விருப்பு வெறுப்புக்களை உடைய பத்திரிகை கள் தங்களை 'நடுநிலைப் பத்திரிகைகள்' என்று கூறிக் கொள்வதும், பல விஷயங்களில் தீவிர விருப்பு வெறுப்புள்ள

நாடுகள் தங்களை நடுநிலை நாடுகள் என்று கூறிக்கொள்வதும், தீவிர வெறுப்பு விருப்பு உள்ள, கையாலாகாதவர்கள் தங்களை நடுநிலையாளர்கள் என்று தாங்களே வர்ணித்துக் கொள்வதும் இன்று ஃபாஷனுகி வருகின்றன. நடு நிலைக்கும், கையாலாகாத்தனத்துக்கும் ஒரு நூலிழைதான் வித்தியாசம் என்ருலும், ஒரு நல்ல தராசில் நூலிழை வித்தியாசம்கூடக் குறைபாடுதான், தவறுதான்.

திருடனுக்கும், திருட்டுக்கு ஆளாகும் அபலைப் பெண்ணுக்கும் நடுவில், இருவரையுமே 'சமமாகப்' பாவிக்கும் கையாலாகாத மேதைகள் தான் இன்று நாட்டில் அதிகம் என்பது என் கருத்து. தங்களை நடுநிலையாளராக வர்ணித்துக் கொள்பவர்களும் அவர்களே.

சில கையாலாகாத்தனங்களைக்கூடச் சாமர்த்தியங்கள் போலக் காட்டிவிட முடிந்த அளவுக்குப் பாமர மக்கள் நிறைந்த நாடு இது. ஒரு தராசுக்கு இரட்டை அளவுகள் உள்ள வர்த்தகம் சரியில்லையானுல், ஒரு கொள்கைக்கு இரட்டை அளவுகோல்கள் உள்ள ஆட்சிக்கும் அதே நியாயம் பொருந்தாதா என்ன?

'நடுநிலை' என்ற தமிழ்ப் பதம் இன்று உபயோகிக்கப் படும் அர்த்தத்தில் நிறைய 'டெப்ரஸியேஷன்' போட்டுக் கழித்துப் பார்க்கத் தெரிந்தாலொழிய நாம் ஏமாந்து போய் விடுவோம். இந்திய ரூபாயின் மதிப்பு ஆண்டுக்கு ஆண்டு குறைவதுபோல் தியாகம், நேர்மை, நடுநிலை, ஒழுக்கம், நம்பிக்கை, யோக்கியதை ஆகிய பதங்களின் மதிப்பும் ஆண்டுக்கு ஆண்டு குறைந்து வருவதும் நமக்குப் புரிய வேண்டும்.

தவணை முறையில் நம்பிக்கை, தவணை முறையில் தியாகம், தவணை முறையில் நடுநிலை, தவணை முறையில் ஒழுக்கம், தவணை முறையில் யோக்கியதை, தவணை முறையில் விசுவாசம் என்று எல்லாமே தவணை முறையில் வந்து விட்ட சுலபமான வர்த்தக நாட்களில் நாம் வாழ்கிருேம் என்பதை நினைவுபடுத்திக்கொண்டு, மனத்தைச் சமாதானம்படுத்திக் கொள்ள வேண்டியதுதான் என்று சில சமாதானப் பிரியர்

கள் இதற்கு வியாக்கியானம் சொல்ல முன் வரலாம். சில சமாதானங்களும் 'நடுநிலை'யோடு (இன்றைய அர்த்தத்தில்) சொல்லப்பட முடியும் என்பதையே இது காட்டுகிறது.

என்னைப் பொறுத்தவரை, 'நிறுப்பதற்கு முன்பே கோணலாயிருக்கும் தராசுகளால், நிறுக்கும்போது நடுநிலையாக நிறுக்க முடியாது என்பது உறுதி. நமது தராசு பல விஷயங்களில், பல சமயங்களில் நிறுப்பதற்கு முன்பே கோணல் என்பது, நிறுத்து முடிந்த பின்பே நமக்குத் தெரிய வருகிறது.



# 16. மூளைச் சோம்பல்

உழைக்காமல் முடங்கியிருப்பது ஒன்று மட்டும்தான் சோம்பல் என்று பலர் நினைக்கிறார்கள். உழைப்பதற்குச் சோம்பி ஒடுங்கியிருப்பதைவிட அபாயகரமான சோம்பல் வேறு ஒன்று இருக்கிறது. முதல் வகைச் சோம்பலைவிட இந்த இரண்டாம் வகைச் சோம்பலையே இன்று நாட்டில் நம்மைச் சுற்றி அதிகமாகக் காண முடிகிறது. அதிகமாக உணர முடிகிறது. அதிகமாக அறிய முடிகிறது.

சிரமப்பட்டு உழைக்கவும், செயலாற்றவும் சோம்புவதைவிட, உழைப்பதைப் பற்றியும், அதற்குத் திட்டமிடுவதைப் பற்றியும் நினைப்பதற்கே சோம்பல் படும் நிலைமை மோசமானது. உடலின் இயங்காமையைவிட மூளையின் இயங்காமை கெடுதல்.

உடற்சோம்பலைவிட மூளைச் சோம்பல் பயங்கரமானது. உடற்சோம்பல் சரீரத்தின் மேற்பாகத்தில் தெரியும் புண்ணைப் போன்றது என்றால், மூளைச் சோம்பல் வெளியே தெரியாத உட்பகுதியில் வரும் புற்றுநோயைப் போன்றது ஆகும்.

'ஒருவனுக்கு மூளையே இல்லை' என்ற குற்றச்சாட்டு வேறு; மூளையிருந்தும் அவன் சோம்பியிருப்பது வேறு. மூளையில்லாதவர்களைக்கூட மன்னிக்கலாம். மூளையிருந்தும் அதைப் பயன்படுத்தாமல் சோம்பியிருப்பவர்களை மன்னிக்கவே முடியாது; மூளைச் சோம்பலை—விரக்தி, வக்ரம் ஆகிய வேறு பெயர்களாலும் சிலர் அழைக்கிறார்கள். 'அறியாமை தவறில்லை; ஆனால் அறிய மனமில்லாமைதான் தவறு' என்று ஒரு வாக்கியத்தை அடிக்கடி கேள்விப்பட்டிருக்கிறோம். இந்த 'அறிய மனமில்லாமை'யைத்தான் 'மூளைச் சோம்பல்' என்று இங்கே நான் குறிப்பிடுகிறேன். சிரமமான, அருமையான, கடினமான எதையும் பற்றி நினைப்பதையோ, திட்டமிடு

வதையோ, சிந்திப்பதையோ தள்ளிப் போட்டுவிட்டுச் சும்மா இருந்து விடுகிற மனப்பான்மை நம்மிடையே அதிகமாகி வருகிறது. நாளுக்கு நாள் இந்த நோய் பீடிப்பவர்களின் தொகை கூடி வருகிறது.

மூளைச் சோம்பலின் முதல் அறிகுறி (ஸிம்ப்டம்) எல்லாவற்றிலும் விரக்தியும் சலிப்பும் அடைதல். நாம் இந்த அறிகுறியைப் பலரிடம் பல சமயங்களில் எப்படி எப்படி எப்போது எப்போது காண்கிறோம் என்பதைப் பார்க்கலாமா?

ஒரு காலனியில் வசிக்கும் பலருள் நாலைந்து பேர் துணிந்து ஒரு 'கன்ஸ்யூமர் மூவ்மெண்ட்' தொடங்குகிறார்கள் என்று வைத்துக் கொள்வோம். அது சம்பந்தமாக அந்த நாலைந்து பேர் அதே காலனியில் வசிக்கும் மற்றொருவரிடம் போய் விவரிக்கும்போது, அந்த மற்றொருவர், ''இப்படி ஆயிரம் பேர் ஆயிரம் மூவ்மெண்ட் தொடங்கியாச்சு சார்! எதுவுமே உருப்படலே! இது மட்டுமா உருப்பட்டுடப் போவுது?பேசாமே போயி அவங்கவங்க சொந்த வேலையைப் பாருங்க!...'' என்று நம்பிக்கையிழந்து சலித்துக் கொள்கிறார்.

'ஒரு விஷயம் உருப்படுமா?' என்று முயன்று பார்க்கவும், நினைக்கவும், திட்டமிடவுமே இவருக்குச் சோம்பல். ஒன்றை முயன்று பார்ப்பதற்கு முன்பே அதில் தோற்று விடத் தயாராயிருக்கிறார் இவர். இவருடையதைப் போன்ற மூளைச் சோம்பல், தொத்து நோய் போல எங்கும் பரவுகிறது. ஒரு வெற்றியை மட்டுமல்ல, தோல்வியைக்கூட முயன்று பார்த்த பின்புதான் ஏற்க வேண்டுமே ஒழிய முயற்சி செய்யாமலே தோற்பது அவமானகரமானது. இன்று எல்லாத் துறைகளிலும் இப்படி அதற்கான முயற்சியைச் செய்யாமலே தோல்வியை ஏற்றுக்கொண்டு விடத் தயாராயிருக்கிறார்கள். ஐம்பது அறுபது வயதுக்கு மேற்பட்டவர்கள் பலரிடம் இந்த மூளைச் சோம்பல் ஒரு குறிப்பிட்ட விகிதாசாரத்தில் என்றும் இருந்திருக்கிறது.

ஆனால், இன்று இளம் தலைமுறையினரிடமும் இது தென்

படுவதைக் காண முடிகிறது. 'ஸினிக்'காக இருப்பது எல்லா வயதினருக்கும் உரியதாகியிருக்கிறது இப்போது.

ஒன்றைத் தொடங்காமலே, அதைத் தொடங்குவது பற்றிய நினைப்பிலேயே தோற்றுப்போவது மிகவும் கேவலம். தொடங்காமலேயே தோற்றுவிடும் போர்கள் சரித்திரமாவதில்லை. ஒன்றைத் தொடங்கு முன்பே அதில் தோற்பதும்தற் கொலையும் ஒன்றுதான் என்று துணிந்து சொல்லலாம்.

மூளைச் சோம்பலின் காரணங்களில் முதன்மையானது, நம்பிக்கையின்மை அல்லது நம்பிக்கை வறட்சி. 'நம்பினோர் கெடுவதில்லை' என்ற மகாகவி பாரதியின் வாக்கை இந்த இடத்தில் இந்த அர்த்தத்தில் நினைத்துப் பாருங்கள்.

தேசப் படத்தில் எந்த மூலையில் இருக்கிறது என்று கண்டுபிடிக்க முடியாத, மேற்குக் கடற்கரைக் கிராமம் ஒன்றிலிருந்து புறப்படுகிற குறைந்த படிப்புள்ள ஒரு மலையாளி, இந்தியாவின் எந்த மூலையில் இருக்கும் எந்தக் கிராமத்திலும் ஒரு டீக் கடையைத் தொடங்கி, வெற்றி கரமாக அதையும் தன்னையும் வளர்த்துக் கொள்ள முடிகிறது. இதற்கு என்ன காரணம்? ஒரு முயற்சியைத் தொடங்குவதற்கு முன் அதைப் பற்றிய நினைப்பிலேயே அவன் தோற்றுப் போவது கிடையாது. நம்பிக்கையையும், முயற்சியையும் காயடித்து விடுகிற படிப்பால் தான் நாட்டில் மூளைச் சோம்பல் பெருகுகிறது.

1976-ல் நான் 'குவைத்'தில் ஒரு வாரம் தங்கியிருந்த போது பலருக்குச் சாப்பாடு போடும் ஒரு 'காக்கா'வைச் சந்தித்தேன். கள்ளிக்கோட்டைக்குப் பக்கத்திலுள்ள ஒரு சின்னக் கிராமத்திலிருந்து புறப்பட்டுவந்த அந்தச்சிறிய மனிதனின்பெரிய நம்பிக்கை என்னை மலைக்கச் செய்தது. நம்பிக்கையும், முயற்சியும் இல்லாமல் டபிள் பி. எச். டி. வாங்கியவனைவிட, நம்பிக்கையோடும் முயற்சியோடும் தொலைதூரத்தில் போய் வெற்றியடைகிற, இந்தக் குறைந்த படிப்புள்ள மலையாளியை நான் அதிகம் மதிக்கிறேன். காரணம், மூளைச் சோம்பல் என்பது என்னவென்றே இவனுக்குத் தெரியவில்லை—தெரியாது; தெரிந்து கொள்ளவும் நேராது.

நம்மைச் சுற்றியுள்ள பலரிடம் தன்னம்பிக்கைப் பற்றுக் குறை பயங்கரமாயிருக்கிறது. நம்மிடமிருக்கும் பஞ்சங்களில் எல்லாம் தலைசிறந்தது நம்பிக்கைப் பஞ்சமே. நம்பிக்கைப் பஞ்சம் எங்கே நிரம்பியிருக்கிறதோ அங்கே மூளைச் சோம்பலுக்குக் கொண்டாட்டம்தான்.

சில சமயங்களில், தெருவில் கடலை கூறு கட்டி விற்கிற ஓர் ஆயாவிற்கு இருக்கிற தன்னம்பிக்கைகூடக் கோடிக் கணக்கில் முதலீடு செய்து கம்பெனி நடத்துகிற ஒரு தொழிலதிபருக்கு இல்லாததைக் காண்கிறேன். பரிதாபமாக இருக்கிறது. பட்டமரம் தளிர்க்காது. அவநம்பிக்கையிலிருந்து வெற்றி கிடைக்காது. கொசு ஒழிப்பு, காலரா ஒழிப்பு, மலேரியா ஒழிப்பு ஆகியவற்றுக்குப் பாடுபடுவதை விட அவசரமாக, அவநம்பிக்கை ஒழிப்புக்குப் பாடுபட்டாக வேண்டும்.

எதிலும் சலிப்பு, விரக்தி, தோல்வி மனப்பான்மை இவை வளர்வது மோசமானது. 'இன்றைய கல்விமுறை, இன்றைய அரசியல், இன்றைய வர்த்தகம் எல்லாவற்றின் சூழ்நிலையும் நம்பிக்கை வளர்வதற்குச் சாதகமாக இல்லையே சார்?' என்று பலர் என்னைப் பதிலுக்குக் கேட்கலாம்.

நம்பிக்கை வளர்வதற்குரிய சூழ்நிலையில்தான் உங்களுக்கு நம்பிக்கை இருக்கும் என்றால் அதில் ஒன்றும் பெருமையில்லை. அவநம்பிக்கை வளர்வதற்குரிய சூழ்நிலையிலும் நீங்கள் நம்பிக்கையோடு முனைந்து நிற்பதுதான் ஆண்மை. சோதனை வரும்போது தைரியமாக எதிர் கொண்டு ஏற்று வெற்றி பெறுவது தான் வீரமாக இருக்குமே ஒழிய எந்தச் சோதனையும் வராததில் வென்றதாகப் பிரகடனப்படுத்திக் கொள்வது வீரமாக இராது; விவேகமாகவும் இராது.

முதலில் நாற்றங்காலிலேயே நோய் பிடித்துக் கெட்டுப் போகிற பயிர், வயல்களில் நடப்பட்ட பின் நல்ல விளைவைத் தர முடியாது. இன்றைய கல்விக் கூடங்களான பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழகங்கள் ஆகிய எல்லாவற்றிலும் கற்பவர் கற்பிப்பவர் ஆகிய இரு சாராரிடமும் நம்பிக்கை

வறட்சியும் மூளைச் சோம்பலுமே கணிசமாக இருக்கின்றன. இது நாட்டின் எதிர் காலத்துக்கு நல்லதில்லை.

இந்த நம்பிக்கை வறட்சிக்குஆட்சிகளும் அரசாங்கங்களும் கூட ஓரளவுக்குக் காரணமாக இருக்கலாம். அவை தவிர்க்கப் பட வேண்டும். தடுக்கப்பட வேண்டும்.

முயன்று அடைய வேண்டியதையும், கஷ்டப்பட்டுப் பெற வேண்டியதையும், பாடுபட்டு உழைத்து எய்த வேண்டியதையும் நினைப்பிலிருந்தே ஒதுக்கி வைத்து விடும் மூளைக் கோழைத்தனம் முதலில் போக வேண்டும்.

படித்தவர்களிடம்தான் இந்த மூளைக் கோழைத்தனம் அதிகமாக இருப்பதைக் காண்கிறேன். ரிக்ஷா இழுப்பவர், நிலத்தை உழுபவர், தெருவில் வரும் காய்கறிக் கூடைக்காரி இவர்களிடம் பேசினல் பதிலுக்கு நம்பிக்கையோடு பேசுகிறார்கள். படித்தவர்களிடம் எதைப்பற்றிப் பேசினலும் உடனே அவநம்பிக்கையோடு பதில் சொல்கிறார்கள். சந்தேகத்தோடு பதில் சொல்கிறார்கள். பயந்து பயந்து பதில் சொல்கிறார்கள். அநாவசியமான பயம், அநாவசியமான அவநம்பிக்கை, அநாவசியமான சந்தேகம் எல்லாம் படித்தவர்களுக்கே சொந்தமாக இருக்கிறது. இது சரியா அது சரியா என்ற சந்தேகமும் குழப்பமும் கூடப் படித்தவர்களுக்குத்தான் அதிகமாகவருகிறது. பெரும்பாலான படிக்காதவர்களுக்கு எது சரியோ அது மட்டுமே கண்ணில் தெரிகிறது. சரியில்லாதது எதுவும் என்றும் தெரிவதே இல்லை.

நம்பிக்கையுண்டாக்காத கல்வியால் பயனில்லை. கல்வியை விட நம்பிக்கை பெரியது. நம்பிக்கைதான் மூளைச் சோம்பலை ஒழிக்கும். வெறும் ஏட்டுக் கல்வி மூளைச் சோம்பலைத்தான் பெருக்குகிறது என்பதற்கு நிதரிசனமான பல உதாரணங்கள் இருக்கின்றன. நம்மைச் சுற்றிலுமே இருக்கின்றன.

அரசாங்க நிர்வாகத்தில் இருக்கும் பலர் காரியங்களையும் முடிவுகளையும் தட்டிக் கழிப்பதற்கும், தள்ளிப்போடுவதற்கும் கூட இந்த மூளைச் சோம்பல்தான் காரணம் என்று தோன்றுகிறது.

நாட்டில் எதை எதையோ ஒழிக்கத் திட்டம் தீட்டிப் பணம் செலவழிக்கிறோம். மூளைச் சோம்பலை ஒழிக்க ஒரு திட்டம் தீட்டினால்கூட நல்லது. ஆனால், அந்தத் திட்டமே மூளைச் சோம்பலுக்குப் பலியாகி விடாமல் முதலில்பார்த்துக் கொள்ள வேண்டியது அவசியம்.

அறுபது கோடி மக்களில் ஒரு சிலர் ஸினிக்காக இருப்பதை மன்னிக்கலாம். ஆனால், அறுபது கோடி மக்களில் ஒரு சிலர் மட்டும்தான் 'ஸினிக்' அல்லாதவர்கள் என்கிற நிலைமையை, மன்னிக்கவும் பொறுத்துக் கொள்ளவும் முடியாது. அந்த நிலைமை ஏற்படாமல் இருக்க இப்போதே பாடுபட வேண்டும். கூட்டிக் கழித்துப் பார்த்தால், நம்பிக்கையும் விடாமுயற்சியுமே ஒரு நாட்டின் வளமாக மீதமிருக்கும். அந்த இரண்டின் மேலுமே படரும் நோய் தான் மூளைச் சோம்பல். முதலில் நாட்டிலிருந்தே அதை ஒழிக்க முயல்வதுதான் புத்திசாலித்தனம். ★

# 17. மலட்டுக் கலைகள்

சமீப காலமாக மக்களை மகிழ்வூட்டும் அல்லது, சமூகத்தைச் செம்மைப் படுத்துவதாகச் சொல்லிக் கொள்ளும் நமது கலைகள், இலக்கியம் முதலிய சாதனங்களில் ஒரு நுணுக்கமான கோளாறு தோன்றி இருப்பதைக் கவனிக்கலாம். நாளாக நாளாக இக்கோளாறு அதிகமாகி வருகிறது. குறி தவறுதல், இலக்கின்மை ஆகிய கோளாறு களைத்தான் சொல்கிறேன். 'பாவம் செய்பவன் சீரழிந்து போவான்' என்பதை ஒரு கதை மூலமோ, நாடகம் மூலமோ சினிமா மூலமோ சித்திரித்து மக்களுக்குக் காட்ட முயன்ருல், 'பாவம் செய்பவன்-பாவம் செய்தல்-பாவம் செய்யலாம்' என்பது வரைதான் மக்கள் மனத்தில் போய்ப் பதிகிறது. 'சீரழிந்து போவான்' என்ற மிக முக்கியமான-தவிர்க்க முடியாத பிற்பகுதி உண்மை யார் மனத்திலும் பதிய மறுக்கிறது. அல்லது, போய்ச் சேர்வதில்லை. இது இந்தக் காலத்தி லுள்ள கோளாரு அல்லது இக்காலக் கலைகளின் மலட்டுத் தனமா?

பல ஆயிரம் ஆண்டுகளாக இராமாயணமும், பாரதமும் உண்டாக்கிய தார்மீக உணர்ச்சிகளில் அரைக்கால் பங்குகூட இன்று உண்டாகவில்லை. காரணம் என்னவாக இருக்க முடியும்?

"இராமனுகவும். தருமனுகவும் நடந்து கொள்ள வேண்டும். இராவணனுகவும், சகுனியாகவும் நடந்து கொள்ளக் கூடாது" என்று தலைமுறை தலைமுறையாக உண்டாகிவிட்ட சமுதாய நல்லெண்ணம்கூட இன்று மெல்ல மெல்ல மாறி வருகிறது.

அதே இராமாயண-பாரத மையக் கருத்துள்ள இன்றைய கதைகளோ-"இராமனுக நடந்து கொள்வது சிரமம். அதனுல் இராவணனுகவே நடந்து கொள்வோம், தருமனுக

நடப்பது துன்பம். அதனால் சகுனியாகவே நடந்து கொள்வோம்'' என்று எண்ண வைப்பதுபோல், ஆழமின்றி அமைந்து விடுகின்றன. எந்தப் பிரச்சார சாதனமும் நே எதிராகவே பயனளிக்கிறது இன்று. அதாவது 'Counter Productive' ஆக இருக்கிறது விளைவு.

நடந்த ஒரு சம்பவத்தால் இதை விளக்கினால் ஒரு வேளை உங்களுக்கு நன்றாகப் புரியலாம்.

ஒரு கிராமத்தில் இரண்டாவது ஆட்டம் சினிமாப் பார்த்துவிட்டுத் திரும்பிய இரண்டு இளைஞர்கள், தங்களைப் போலவே சினிமா பார்த்து விட்டுத் தனியே திரும்பிக் கொண்டிருந்த ஒரு பெண்ணை வழி மறித்துக் கெடுத்து விட்டார்கள் என்று பத்திரிகையில் படித்தேன். அந்த இளைஞர்கள் பார்த்த சினிமாவிலும் ஒரு 'கற்பழித்தல் காட்சி' வந்திருக்கலாம். அதற்காகக் கற்பழித்தலைச் செய்தவர்கள் சட்டப்படி தண்டிக்கப்படுவது போலவும்கூட ஒரு காட்சி படத்தின் கடைசியில் வந்திருக்கும்.

ஆனால், படம் முடிந்து வெளியே வரும்போது அந்த இரு இளைஞர்கள் மனத்திலும், ''எந்தப் பெண்ணிடமும் அத்து மீறி நடந்து கொண்டால் தண்டிக்கப்படுவோம்'' என்ற உணர்வு இருக்கவில்லை.

''சந்தர்ப்பம் கிடைத்தால் எந்தப் பெண்ணிடமும் அத்துமீறி நடக்கலாம்'' என்ற உணர்வே மீதூர்ந்து இருந்திருக்கிறது. இதுதான் இன்றைய கலையிலுள்ள மிகப் பெரிய கோளாறு.

இன்று நமது கலைகள், கதைகள் எல்லாம் திருந்துவதற்கு உதவுவதில்லை. மேலும் மேலும் தவறு செய்வதற்கே உதவுகின்றன. தவறு செய்வதைக் கண்டிப்பது போல் நியாயப் படுத்தவே உதவுகின்றன. தவறுவதோ தவற்றுக்கு ஆளாக்கப்படுவதோ, அத்தனை பெரிய பாவம் ஒன்றுமில்லை என்பதுபோல், உறுதியை நீர்த்துப் போகச் செய்யும் மெத்தன நிலையே வளர்கிறது.

முன்பு, 'அறம் செய விரும்பு' என்பது போல் நேரடியாக உபதேசம் செய்த முறை இன்று பத்தாம் பசலித்

தனமானது என்று சிலர் கூறலாம். ஆனால், இன்றுள்ள முறைகளை விட அதுவே எத்தனையோ மடங்கு தேவலை என்று தோன்றுகிறது. அது 'ஸ்டிரெயிட்டாக' இருப்பது அதன் குறையா என்ன?

இன்றைய கல்லூரிக் காதலைச் சித்திரிக்கும் ஒரு 'இளமை + இனிமை + இன்பம்' பாணி திரைப் படத்தில் கல்லூரி செல்லும் இளம் கதாநாயகியைக் கதாநாயகன் சக மாணவர்களுடன் சைக்கிளில் சென்று வழிமறித்துக் காதல் பாட்டுப் பாடுவதாக வருகிறது. கதை முடிவில் அவர்கள் திருமணம் செய்து கொள்வதாகவும் வரலாம்.

ஆனால், அசல் வாழ்வில் அதே காதல் பாடலைக் கல்லூரிக்குச் செல்லாத திருமணமான இளம் பெண் ஒருத்தி கறிகாய் கடைக்குச் சென்று விட்டுத் திரும்பும்போது, முச்சந்தியில் நிற்கிற சோம்பேறிகள் கண்ணடித்து ஜாடை செய்து அவளை நோக்கிப் பாடுகிறார்கள். இது நிஜ வாழ்வில் நடக்கிறது. ஒரு கலையின் அல்லது, கதையின் விளைவு நிஜ வாழ்வில் எவ்வளவு மோசமான பிரதிபலிப்புக்களையும், எதிர் விளைவுகளையும் உண்டாக்குகிறது பார்த்தீர்களா?

மக்களுக்கு உருப்படியான பயன் தரத்தக்க எதையும் கருக் கொள்ளவோ, பிரசவிக்கவோ முடியாமல் வெறும் அரட்டைக்கும், மேலோட்டமான மகிழ்ச்சிக்கும் மட்டுமே இடமாக நிற்கும் மலட்டுக் கலைகளே இன்று வளர்கின்றன எழுத்து முதலிய பல கலைகளுக்கும் இது பொருந்தும்.

பத்திரிகைகளில் 'புதிய அலை' என்ற பெயரில் வரும் பெரும்பாலான அரை வேக்காட்டுக் கதைகள் சமூகத் துக்கு எந்தச் சிறிய பயனையும் தருவதில்லை. மாறாக நேரெதிரான விளைவுகளைத் தரத் தவறுவதில்லை.

இன்றைய பல கதைகள், சினிமாக்கள், மேடை முதலியவற்றின் மூலம்அவைதங்கள் முடிவாய் மக்களுக்குமுழுதாகத் தெரிவிப்பது எதுவுமில்லை. எல்லாமே பாதிக் கிணறு தாண்டும் வேலையாகத்தான் இருக்கின்றன. பாதிக் கிணறு தாண்டுவது பயனற்றது மட்டுமில்லை அபாயகரமானதுமாகும்.

விபச்சாரம் செய்து குடும்பத்துக்குச் சம்பாதித்துப் போடும் ஒரு பெண்ணின் கதைக்கு 'அரங்கேற்றம்' என்று பெயர் வைத்தாலும் வைத்தார்கள்; பல அலுவலகங்கள், பொது இடங்களில் வேலைக்குப் போகும் அழகான இளம் பெண்களை வம்புக்கார ஆண்கள் சிலர், 'அதோ ஒரு அரங்கேற்றம் போகுது'-'இது ஆபீஸ் மானேஜருக்கு அரங்கேற்றம்' என்றெல்லாம் பேச ஆரம்பித்து விட்டதாகப் பல இடங்களில் காதில் விழுந்தது. 'அரங்கேற்றம்' என்ற வார்த்தையே ஒரு மோசமான பதச் சேர்க்கை ஆகப் பயன் படுத்தப்பட்டு விட்டது.

கதைகளில் வரும் படிப்பினைகள் மக்களிடம் அறவே போய்ச் சேராமல், அந்நிகழ்ச்சிக்கு முரண்பாடாகக் கதையில் வரும் எதிர்மறை அம்சங்களே போய்ச் சேருகின்றன என்பது எவ்வளவு கேவலமான விளைவு?

செய்தி எதுவுமே கொண்டு வராதவனைச் செய்தி தருபவன் என்பதுபோல், இலக்கு எதுவுமே இல்லாததைத்தான் இலக்கியம் என்று சொல்லிக்கொண்டிருக்கிறோமா நாம்? ஆட்களைக் கடத்தி, ஒளித்து வைத்துக்கொண்டு பணயத் தொகை கேட்கும் 'கிரைம் திரில்லர்' வகையறாச் செய்திகளையும், படங்களையும், தழுவல் கதைகளையும் படித்துப் படித்து, அவ்வாறு செய்வது குற்றம் என்று உணர்வதற்குப் பதில் வேலையில்லாத படித்த இளைஞர்களில் சிலர் நம் நாட்டிலும் அப்படி மிரட்டல்களையே செய்யத் தொடங்கிவிட்டார்கள் என்பதை அறியும்போது என்ன உணர்கிறோம்? அதிக தூரம் போவானேன்? நம் சென்னையிலேயே பள்ளிக்குப் போகும் சிறுவனைக் கடத்தி ஒளித்து வைத்துவிட்டு, "இரவுபத்து மணிக்கு மவுண்ட்ரோடுபோஸ்டாபீஸ் முகப்பிலுள்ள பப்ளிக் டெலிஃபோன் பூத் அருகே இத்தனை ஆயிரம் ரூபாய் ரொக்கத்துடன் வருக! போலீஸில் புகார் செய்ய முயன்றால் பையனை உயிரோடு பார்க்க முடியாது" என்று பெற்றோரை மிரட்டிய சம்பவம் இங்கே போன வருஷம் நடக்கவில்லையா?

'ஹைவே 303' போன்ற பாங்க் கொள்ளை சம்பந்தமான படங்கள் வந்தபின் அதே பாணியில் எத்தனை பாங்க் கொள்ளைகள் இந்தியாவில் நடந்துவிட்டன?

பொதுவாக மேல் நாடுகளில் காமிக்ஸ், ஜேம்ஸ்பாண்ட், கிரைம் திரில்லர்ஸ், துப்பறியும் கதைகள் எல்லாம் சமூகத்தையும், மனிதர்களையும், 'நீங்கள் எந்தெந்த வகையில் எதிரிகளையும், சூழ்ச்சிகளையும் சந்திக்க நேரிடலாம்' என்று உணர்த்தி அவர்களை அதற்கேற்ப விழிப்புடன் இருக்கச் செய்யும் முயற்சிகளாகவே வெளி வருகின்றன.

இங்கோ அந்த நோக்கம் நேர்மாறாகத்தான் பயன்படுகிறது. 'நீங்கள் எந்தெந்த வகையிலெல்லாம் தவறுகள் செய்யலாம்' என்பதை விளக்கவே கதைகள், திரைப்படங்கள் போன்ற கலைகள் இங்கே பயன்படுவது போல் தோன்றுகின்றன. 'முயற்சி செய்து உழைத்து முன்னேறினால்தான் நியாயமான வளர்ச்சி வரும்' என்று மக்களை எண்ண வைப்பதைவிட, 'நீ ஓர் ஏழை இளைஞனாயிருந்தால் ஒரு பணக்கார மில் முதலாளி மகளைக் காதலித்து அந்த மில்லின் உரிமையாளராகவே வந்து விடலாம் அல்லது ஏழைப் பெண் (அழகிய)ளாயிருந்தால், பணக்கார மில் முதலாளியின் மகனைக் காதலித்துப் பங்களாவுக்கு எஜமானியாகி விடலாம். முன்னுக்கு வருவதற்குப் பணமுள்ள யுவதி அல்லது இளைஞனைக் காதலிப்பதைத் தவிர வேறு வழி இல்லை' என்பது போன்ற ஒரு ஃபார்முலா இங்கே சராசரியாகத் திரைப்படங்களில் காட்டப்பட்டிருப்பதால், எல்லா இளைஞர்களும் அதையே நம்பியிருப்பது போல் சோம்பேறிகளாக்கப்பட்டிருக்கிறார்களோ என்று கூட நமக்கு ஒரு சந்தேகமே வருகிறது. சிலருக்குக்காதல் ஒருவாய்ப்பாக நேரலாம். ஆனால், சகலருக்கும் அதுவே நம்பிக்கையாகி விடாது.

ஒரு கதாநாயக இளைஞன் சோளக் கொல்லையைக் கூடக் காவல் காக்கத் தெரியாமல் வயல் வரப்புக்களில் பாட்டுப் பாடிக் கோட்டை விடுகிறவனாக 'இண்டர்வெல்' வரை சித்தரிக்கப்பட்டு இடைவேளை முடிந்ததும், திடீரென்று

பெரிய பெரிய புத்தகங்களை எல்லாம் எழுதிப் பட்டினத்துக்கு வந்து பெரிய நூல் ஆசிரியனாகி மாறி கார், பங்களா எல்லாம் வாங்கிவிடுவதாக வருகிறது. நமது கதைகளில் சித்திரிக்கப் படும் ஏழைமையும் நம்பும்படியானதாக இல்லை. திடீர் வளர்ச்சியும், பணவரவும்கூட நம்பும்படியானதாக இல்லை.

மிகைப்படுத்தப்பட்ட வறுமை, மிகைப்படுத்தப்பட்ட வளம் இரண்டுமே நமது கலைகளின் புதிய சாபக்கேடுகள். மிகைப்படுத்தப்பட்ட வறுமையைச் சிலபேர் 'ரியலிஸம்' என்று கொண்டாடத் தயாராக இருக்கிறார்கள். வறுமையே ஆனாலும் யதார்த்தமில்லாத, நம்ப முடியாத வறுமைச் சித்திரிப்பும் ஒரு மோசடியே. அதேபோல நம்பமுடியாத செல்வச் செழிப்பைச் சித்திரிப்பதும் அதிகமாக இருக்கிறது. இளைஞர்கள் சொப்பன லோகக் கனவுகளில் சஞ்சரிக்க ஒரு போதை மருந்துபோல இது பயன்படுகிறது.

ஒரு படத்தில் பத்து ஸீன்களில் சவிஸ்தாரமாக ஒருவன் மது அருந்துவதைக் காட்டிவிட்டுப் படம் முடியும்போது ஒரே ஒரு காட்சியில் ஒரு டாக்டர் வந்து 'லீவர் கெட்டுவிடும் ஜாக்கிரதை' என லேசாக எச்சரிப்பதுபோல் காட்டினால் இன்று 10 ஸீன்களில் பார்த்த எப்படிக் குடிப்பது என்பது மட்டுமே படம் பார்ப்பவர்களின் மனத்தில் நிற்கிறது. கடைசி ஸீனில் டாக்டர் கூறும் ஒரு வாக்கியம் நிற்பதில்லை. மெஸேஜ் இல்லாத கதை, மெஸேஜ் இல்லாத நாடகம், மெஸேஜ் இல்லாத திரைப் படம், மெஸேஜ் இல்லாத காட்டுக் கூப்பாட்டு சங்கீதம் என்று நம்முடைய கலைகளில் வரவர ஒரு மலட்டுத் தன்மை பெருகி வருகிறது.

தீய உணர்வுகளையே கிளறிவிடும் கலைகளால் ஒரு தலைமுறையே பாழாகிவிடுமோ என்று அஞ்ச வேண்டியிருக்கிறது. அச்சம் இயலாமையால் அல்ல; கவலையால்தான்.

எதிலும் குறி தவறுதல், இலக்கின்மை ஆகிய இரண்டும் தான் கலைகள் மலடு தட்டுவதற்கு முக்கியமான காரணம். குறி வைத்து எய்தால்தான் நாம் செலுத்துவது எதுவோ

அது தன் இலக்கிலே போய்த் தைக்கும். குறி வைத்தலும் இல்லாமல், இலக்கையும் அறியாமல் எதிர் பார்க்கும் நலன் களுக்கு நேர்மாறான விளைவுகளைத் தரும் வைட்டமின் சத்தில் லாத சரக்குகளை எவ்வளவு நாள்தான் பொறுத்துக்கொண் டிருக்கப் போகிறோமோ, தெரியவில்லை? 

## பல்கலைக் கழகங்கள், பதவிகள், பட்டங்கள்

பல்கலைக் கழக உயர் பட்டப்படிப்பை முடித்து, முதல் வகுப்பில் சிறப்பாகத் தேறி வேலைக்கு அலைந்து கொண்டிருக்கும் நண்பர் ஒருவரிடமிருந்து சமீபத்தில் எனக்கு ஒருகடிதம் வந்திருந்தது. அதில் அவர், "**I have spent more than sixteen years to learn, that I have learnt nothing**" (நான் எதையும் தெரிந்து கொள்ளவில்லை என்பதைத் தெரிந்து கொள்வதற்கே பதினாறு வருஷங்களுக்குமேல் ஆகி விட்டது)—என்று வருத்தத்தோடும், விரக்தியோடும் குறிப்பிட்டிருந்தார்.

பெரும்பாலான இந்தியப் பல்கலைக் கழகங்களின் கல்வித் தரத்தைப் பொறுத்தவரை, இந்த வாக்கியம் மிக மிகப் பொருத்தமானதாயிருக்கும். சில பல்கலைக் கழகங்களோ கல்வியை வளர்க்காததுடன், வேறு வகைத் தகராறுகளையும் பிரச்னைகளையும் தாராளமாகவே வளர்க்கின்றன. அம்மாதிரி பல்கலைக் கழகங்களில் வளராத அம்சம் என ஏதாவது இருக்குமானால் அது, பரிதாபத்துக்குரிய கல்வியே.

சுதந்திரத்திற்கு முந்திய இந்தியாவில், சுமார் பத்துக்கும் இருபதுக்கும் இடைப்பட்ட எண்ணிக்கையில் தான் பல்கலைக்கழகங்கள் இருந்தன. ஏறக்குறையப்பத்தொன்பது சர்வகலாசாலைகள் என்பதாக நினைவு. இதனால்தானோ என்னவோ அன்று பிரச்னைகளும், சர்ச்சைகளும், கலகங்களும் குறைவாயிருந்தன. இப்படி ஆராய்வது தர்க்க ரீதியாகச் சரியில்லை என்றாலும், வேடிக்கையாகவாவது இப்படியும் நினைக்கத் தோன்றுகிறது அல்லவா?

30 வருடங்கள் கழித்து இன்று சுமார், நூற்றுக்கும் இருநூறுக்கும் இடைப்பட்ட எண்ணிக்கையில் பல்வேறு வகை யூனிவர்ஸிட்டிகள் இந்தியாவில் இருக்கின்றன. ஏறக்

குறைய நூற்று இருபத்தைந்து சர்வகலா சாலைகள் என்பதாக நினைவு. இவை அறிவையும்—அறியாமையையும், கல்வியையும்—கல்லாமையையும், திறமையையும்—திறமையின்மையையும் சேர்த்தே வளர்த்திருக்கின்றன என்று சொல்வதுதான் மிகவும் பொருத்தமானதாக இருக்கும். இதைப் பூசி மெழுக வேண்டிய அவசியமில்லை.

இங்கே மாதிரிக்கு ஒரு சம்பவத்தை எடுத்துக் காட்ட விரும்புகிறேன். இந்தியப் பல்கலைக் கழகம் ஒன்றில், சமீபத்து ஆண்டுகளில் மருத்துவப் பட்டப் படிப்பு முடித்து வாங்கிய எம். பி. பி. எஸ். டிகிரியுடன் ஒரு மாணவர் மேற்படிப்புக்காகவும், ஆராய்ச்சிக்காகவும் அமெரிக்கா சென்றார். அமெரிக்காவில் இந்த எம்.பி.பி.எஸ். மேற்படிப்புக்காகவும், ஆராய்ச்சிக்காகவும் இவர் சேர்ந்த நிறுவனத்தில் இவரையும், இவரைப் போன்ற வெளிநாட்டு மாணவர்களையும் கவனித்து வந்த பேராசிரியர் ஒருவர், இவருக்கு மருத்துவத் துறையில் ஆரம்ப அறிவு (**elementary knowledge**)கூட இல்லாததைக் கண்டு அதிர்ச்சியடைந்து, நிறுவனத்தில் தனக்கு மேற்பட்ட இயக்குநரிடம் புகார் செய்தார். இயக்குநர் உடனே, இந்த எம். பி. பி. எஸ் டிகிரியில் கையெழுத்திட்டிருந்த, இந்தியாவைச் சேர்ந்த அந்தக் குறிப்பிட்ட யூனிவர்ஸிடி வைஸ்-சான்ஸலருக்குக் கோபமாகக்கடிதம் எழுதினார்:

''இவருக்கு உண்மையிலேயே உங்கள் யூனிவர்ஸிடி எம். பி. பி. எஸ். டிகிரி வழங்கியிருக்கிறதா இல்லையா என்பதை இக்கடிதம் கண்டதும் உடனே தெளிவு படுத்துங்கள். **Iam afraid to say...that he is thoroughly ignorant of the subject.''**

கடிதம் கிடைத்ததும் இந்தியாவில் அந்தப் பாவத்தைச் செய்த சர்வ கலாசாலையின் துணைவேந்தர் 'கர்மமே!' என்று தலையிலடித்துக் கொண்டு பதில் எழுத நேர்ந்தது :

'நீங்கள் குறிப்பிட்ட மாணவர் எங்கள் சர்வ கலாசாலையில் உண்மையிலேயே படித்துப் பட்டம் பெற்றவர்தான்'—

இதற்குமேல் எதையும் கடிதத்தில் அவரால் எழுத முடியவில்லை என்றாலும் நண்பர்களிடம் தனிப்பட்ட முறையில் சொல்லி அங்கலாய்த்து வருத்தப்பட முடிந்தது அவரால்.

''அந்தப் பையனைவிடப் பிரமாதமான மார்க் திறமை எல்லாம் இருந்த 'ப்ரில்லியண்ட்' ஸ்டூடண்ட்ஸ் பல பேருக்கு மெடிகல் காலேஜ் அட்மிஷன் கிடைக்கலே. ஆனால், அவனுக்கு அட்மிஷன் கிடைக்கிறதிலேருந்து அவன் எம். பி. பி. எஸ். டிகிரி வாங்கிக் கொண்டு அமெரிக்கா போகிறவரை ஒரு பெரிய அரசியல்வாதியின் செல்வாக்கு அவனுக்குப் பின்னால் தனிப்பெரும் பக்கபலமாக நின்றது. நான் யாரையும் விரோதித்துக் கொள்ள விரும்பவில்லை. எனக்கு இன்னொரு 'டேர்ம்' வைஸ் சான்ஸலரா இருக்கணும்'' என்று நெருங்கிய நண்பர்களிடம் மட்டும் அந்த வி.ஸி. விவரத்தை ஆற்றாமையோடு சொல்லிக் கொண்டிருந்தார்.

துணைவேந்தர் பதவி என்பது, ஏறக்குறைய பல இந்திய மாநிலங்களில் அரசியல் கண்ணோட்டத்துடன் கூடிய நியமனமாகவே இருப்பதால் (**Political appointment**) பல துணைவேந்தர்கள் இப்படி 'அறிவு, கல்வி இவற்றை விரோதித்துக் கொண்டாலும் பரவாயில்லை. ஆட்சியிலிருப்பவர்களையும், அரசியல் செல்வாக்குள்ளவர்களையும் விரோதித்துக் கொள்ளக் கூடாது'—என்ற திட்டவட்டமான மனப்பான்மையுடன் செயல்படுவது வழக்கமாகிவிட்டது.

ஒரு பல்கலைக் கழகத்தில், ஒரு முக்கியமான துறையில் ஒரு பேராசிரியர் பதவிக்கு நியமனம் செய்ய வேண்டியிருந்தது. ''முதல் வகுப்புத் தேர்ச்சியும், பத்து வருஷத்துக்குக் குறையாமல் **P. G. (Post Graduate)** டீச்சிங் முன்னனுபவமும், திறமையும் பி. எச். டி. யும் உள்ளவர்கள் மட்டும் விண்ணப்பிக்கவும்'—என்று முறையாகப் பத்திரிகைகளில் விளம்பரம் செய்யப்பட்டது. விண்ணப்பங்கள் கோரப்பட்டன.

பல கல்லூரிகளில் புரொபஸர்களாகவும், துணை உதவிப் புரொபஸர்களாகவும், இருந்த பி. எச். டி. களும் அநுபவஸ்தர்களுமாகச் சுமார் அறுபது பேர் விண்ணப்பித்திருந்தார்கள். நிபுணர்கள் குழு (Experts team) வுக்கு முன் இண்டர்வியூ நடந்தது. வந்திருந்த அறுபது பேரும் விளம்பரத்தில் கோரிய தகுதி முழுமையும் பெற்றிருந்தனர்.

வந்திருந்த 60 பேராசிரியர்கள் 50 நிமிஷத்துக்குள் இண்டர்வியூ செய்யப் பட்டார்கள். திறமையையோ, தகுதியையோ அறிய முடிந்த எந்தக் கேள்வியும் அவர்களிடம் கேட்கப் படவில்லை. **"What is your name? When did you take your M. A. degree? How old are you?"**—என்பன போன்ற கான்வெண்ட் ஸ்கூல் குழந்தைகள் கற்கும் கிளிப்பிள்ளைக் கேள்விகளே அனைவரிடமும் கேட்கப்பட்டன.

**"We will let you know the result"** என்ற, யாருமே கேட்காத கேள்விக்குச் சொல்லப்பட்ட பதிலுடன் 60 பேரும் 50 நிமிஷத்தில் பேட்டி காணப்பட்டபின், இண்டர்வியூவுக்கு முந்திய தினமே வெளி வந்த சர்வ கலாசாலைப் பரீட்சை ரிஸல்ட்டில் 'ஹைஸெகண்ட்' கிளாஸில் அப்போது தான் பாஸ் செய்திருந்த ஒருவருக்கு—அவருக்கு இருக்கும் அரசியல் செல்வாக்கு நிறைந்த சிபாரிசு கருதி, அந்தப் பதவி தரப்பட்டது. இதற்கு ஏன் இத்தனை எக்ஸ்பர்ட்கள் கூடி இண்டர்வியூ செய்ய வேண்டும்? எதற்காகப் பத்திரிகைகளில் எல்லாம் ஜம்பமாகவும், ஜபர்தஸ்தோடும் தண்டச் செலவு பண்ணி விளம்பரம் செய்யவேண்டும்? இது மாதிரி 'எக்ஸ்பர்ட்டுகள்' இருக்கிற வரை இந்த நாடும் இதன் பல்கலைக் கழகங்களும், படிப்பும், பட்டங்களும் எப்படி உருப்படும்?

இன்னொரு தென்னிந்தியப் பல்கலைக் கழகத்தில் துணை வேந்தராக இருந்த ஒருவர் வெறும் எம். ஏ. மட்டும் தான். அவருக்குக் கீழே வேலை பார்த்த பலர் பி. எச். டி.க்கள். அவருடைய வி. ஸி. பதவிக்காலம் முடிந்ததும் அரசியல் செல்வாக்கால் நாட்டின் எல்லா வி. ஸி.க்களையுமே கட்டி

மேய்க்கவும், ஆட்டிப் படைக்கவும் முடிந்த பெரிய பதவி யான U. G. C. **(University Grants Commission)** சேர்மனாகத் தாம் வர வாய்ப்பு இருந்தது போல் அவருக்கே தோன்றியது. அவருடைய வி. ஸி. பதவி முடிய இன்னும் இரண்டு மாதங்கள் தான் இருந்தன. அப்போது அவருக்கு வேண்டியவர் ஒருவர், ''நீங்க யூ. ஜி. ஸி. சேர்மனாக வருவது சுலபம்தான். ஆனால், ஒரே ஒரு குறையைச் சுட்டிக் காட்டி உங்களைச் சேர்மன் ஆக முடியாமல் பண்ணினாலும் பண்ணி விடுவார்கள். நீங்க வெறும் எம். ஏ. தான். உங்களுக்கு பி. எச். டி. இல்லை'' என்று ஆதங்கப்பட்டுச் சொன்னார். அவ்வளவுதான். மேற்படி துணைவேந்தர் தாம் வி. ஸி-யாக இருந்த அதே சர்வகலாசாலையில், தாம் ஒய்வு பெற மீதமிருந்த இரண்டே இரண்டு மாதங்களுக்குள் பி. எச். டி. பெற்று விட்டுத்தான் மறு வேலை பார்ப்பது என்று தீவிர மாகச் செயலில் இறங்கினார்.

அவசர அவசரமாக உடனே அவர் வி. ஸீ. யாக வேலை பார்க்கும் அதே சர்வகலாசாலை சிண்டிகேட்டுக்குத் தம்மை பி. எச். டி. க்கு ரிஜிஸ்டர் செய்து கொள்ளுமாறு அப்ளி கேஷன் போட்டார். சிண்டிகேட்டின் அடுத்த கூட்டத்தின் 'அஜெண்டா' வில் பி. எச். டி. ரிஜிஸ்ட்ரேஷன் அயிட்டம் வரும்போது மட்டும் (எல்லா ஏற்பாடுகளையும் தமக்குச் சாதகமாகச் செய்து விட்ட பின்) ஒரு நிமிஷம் வெளியே வராண்டாவில் போய் நின்று கொண்டு, மற்றவர்கள் தம் அப்ளிகேஷனை ஒருமனமாக ஏற்கச் செய்த பின், மறுபடி உள்ளே வந்தமர்ந்தார்.

பதிவு செய்யும் பி. எச். டி. க்கு யாராவது ஒரு பேராசிரியர் (ஏற்கெனவே பி. எச். டி. பெற்றவர்) வழி காட்டி ஆக **(Research guide)** இருக்கவேண்டும். மற்ற பி. எச். டி. க்கள் எல்லாம் தமக்குக் கீழே **(Subordinates)** பணி புரிபவர்களாக இருந்ததனால் அவர்களில் யாரையும் வழி காட்டியாகக் கொள்ள வி. ஸி. க்கு விருப்பமில்லை. அதனால், உடனே தமது மாநில உயர்நீதிமன்ற நீதிபதி ஒருவருக்கு அவசர அவசரமாகக் கௌரவ டாக்டர் பட்டம் வழங்கச்

செய்து வழக்கமில்லாத வழக்கமாக அவரைத்தமது 'Guide' ஆக ஏற்றார். பொதுவாக, கௌரவ டாக்டர் பட்டம் பெறுகிறவர்கள் பிறருக்கு வழிகாட்ட முடியாது. 'இங்கே அது மீறப்பட்டது. அடுத்த இரண்டு வாரங்களுக்குள் வி. ஸி. ரிஜிஸ்தர் செய்திருந்த தீஸிஸை (Thesis), அவருக்காகச் சர்வகலா சாலையின் டிபார்ட்மெண்டே அவர் பெயரில் வேகமாக எழுதித் தயாரித்தது. நீதிபதியைத் தவிர நம்பகமான வேறு இரண்டு ரெஃபரிகள் (Rcferees) நியமிக்கப்பட்டு ஸப்மிட் செய்த மறுநாளே மூன்று பேருமாக ஒத்த கருத்துடன் (Unanimous) அந்த ஆராய்ச்சியைச் செய்தவருக்குப் பி. எச். டி. வழங்கலாம் எனச் சிபாரிசு செய்து, சிண்டிகேட்டும் உடனே அதை ஏற்றுக்கொண்டு விட்டது.

ஆராய்ச்சிக்கு ரிஜிஸ்தர் செய்த நாளிலிருந்து மூன்று வருஷங்களுக்குக் குறையாமல் ஆராய்ச்சி செய்த பின்பே தீஸிஸ் 'ஸப்மிட்' செய்யலாமென்பது பொதுவான வழக்கம். 'ஸ்பெஷல் கேஸ்' என்ற வகையில் சுலபமாக மீறப்பட்டு, ரிஜிஸ்டர் செய்து முடித்த ஒரு மாதத்துக்குள்ளேயே பி. எச். டி. அந்த வி. ஸி. க்காகத் தயாராகி விட்டது. வி. ஸி. அடுத்த மாதம் ரிட்டையராகப் போகிறார் என்றால் இந்த மாதமே பி. எச். டி. ரெடி.

நல்லவேளையாக இந்த அநியாயத்தைக் கண்டு மனங்குமுறிய சிலர். துணிந்து சான்ஸலர் (கவர்னர்) வரை எழுதி, கவர்னர் அந்த வி. ஸி. மீது விசாரணைக் கமிஷன் போடலாமா என்ற நிலை வந்த போது, கனம் வி. ஸி. காதும் காதும் வைத்தாற்போல் தமது பி. எச். டி. ரிஜிஸ்டரேஷனை வாபஸ் வாங்கிக்கொண்டு, 'கௌரவமாக' விலகிக் கொண்டார். இது கட்டுக்கதைஇல்லை. நம்நாட்டில் நடந்த கேலிக் கூத்துத்தான். இடம், பெயர் தான் இங்கு எழுதவில்லையே தவிர அனைத்தும் உண்மை.

பலரிடம் நான் கேள்விப்படுவது நிஜமாயிருக்கும் பட்சத்தில் (பொய்யாயிருக்குமென்றும் தோன்றவில்லை), சுதந்திர இந்தியாவில் சில குறிப்பிட்ட பல்கலைக் கழகங்களில்

பி. எச். டி. ரிஜிஸ்திரேஷனுக்காக யூனிவர்ஸிடியில் நேரடியாகக் கட்டி ரசீது வாங்க முடிந்த தொகையைத் தவிர, ஆராய்ச்சிக்குரிய துறைகளின் தலைவர்களுக்கு வேறு 'ரேட்' தனியாக இருக்கிறதாம். 'குருதட்சிணை' போய்ச் சேர்ந்தாலொழியக் காரியம் நடக்காதாம். ''உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும் கற்றல் நன்றே'' என்ற கூற்றை மெய்ப்பிக்கிறார்களாம். உறு பொருளாவது பெருந்தொகை.

''மூன்று ரெஃபரிகளையும் நானே கவனித்துக் கொள்கிறேன். ஐயாயிரம் ரூபாய் ரொக்கத்தோடு வா. பி. எச். டி. நிச்சயம்'' என்று தெளிவாக வழிகாட்டும் '**Guide**'கள் இருப்பதாகச் சொல்கிறார்கள். சில சமயம் ரேட் ஆறாயிரம், ஒன்பதாயிரம் வரை கூட ஏறிவிடுகிறதாம். நாளைய நிலவரம் இன்னும் மேலே போகலாம் என்கிறார்கள்.

சில பல்கலைக் கழகங்களில் விடைத்தாள்களில் (**answer sheets**)எவ்வளவு பக்கம் எவ்வளவு அடிஷனல் ஷீட்ஸ் என்று, பரீட்சை எழுதியவர் எழுதிய பின் மொத்தப் பக்க எண்ணிக்கையைக்குறிப்பிட மறந்து விட்டால் அப்படி ஒன்றும் குறிப்பிடாத மாணவர்களின் அடிஷனல் ஷீட்ஸை, விடை அளவோடு முடிகிற ஒரு பக்கத்துக்கு மேல் மொத்தமாக அப்படியே கிழித்தெறிந்து விடுகிற 'ஸாடிஸ்ட்'—கள் கூட (**sadists**) உண்டாம். பல யூனிவர்ஸிடிகளில் இது நடக்கிறதென்கிறார்கள்.

சில சமயம் ஆராய்ச்சி செய்பவர்கள் பெண்களாக இருந்தால்—மாலை 6 மணிக்கு இரவு ஏழு மணிக்கு—என்று நேரங்கெட்ட நேரத்தில், யூனிவர்ஸிடி அறைகள் மற்ற ஊழியர்கள் எல்லாம் வெளியேறித் தனியாக, (ஹோ என்றிருக்கும்) வேளை கெட்ட வேளையில் தம் அறைக்கு வந்து விவரங்களைக் கேட்டுக் கொள்ளச் சொல்லும் 'கய்டுகள்' கூட உண்டாம். இதற்குப் பயந்தே சிலர் தங்கள் குழந்தைகளை, ''நீ பி. எச். டி. பண்ணியது போதும்''

என்று கருராகப் படிப்பையே நிறுத்தி விட்டார்கள் என்று கூறப்படுகிறது.

மத்தியப் பிரதேசத்தில், ஒரு யூனிவர்ஸிடி லைப்ரரியில் அது தொடங்கும் போது வாங்கிய ஆறுயிரம் புத்தகங்கள் மட்டுமே இருக்கிறதாம். ஆனுல், அதே லைப்ரரியில் (ஒரு நல்ல ஹைஸ் கூல் லைப்ரரியில் கூட ஐம்பதினுயிரம் புத்தகங்கள் இருக்க வேண்டும்) படித்து ஆராய்ச்சி செய்து சுமார் 60 பேருக்கு மேல் பி. எச். டி. வாங்கியிருக்கிருர்களாம். ஓர் அரசியல் கட்சி ஆள வந்தால் நினைத்த இடத்தில் வசதிகளின்றியே கூட ஒரு யூனிவர் ஸிடியை உண்டாக்கி விடுகிறது. புதிதாக ஒருவரை வி. ஸி. ஆக்கலாமே!

இந்த நிலையில் சர்வகலாசாலைகளின் சுயேச்சை. சுய நிர்ணய உரிமை (**Autonomous status body**) இவை பற்றி இங்கு நிறையவே பேசப்படுகிறது. ''ஓர் அரசியல்வாதி நான் இதுவரை இத்தனை புத்தகங்கள் எழுதியும் எனக்கு டாக்டர் பட்டம் இல்லையா?'' என்று பொது மேடைகளிலேயே கேட்டதும், உடன் கலந்து கொண்டு பேசும் மந்திரி, ''இவருக்கு டாக்டர் பட்டம் தரத் துணியாத யூனிவர்ஸிடிகள் யூனிவர்ஸிடிகளே அல்ல''-எனச் சாடுகிருர். இது நிர்ப்பந்தம் இல்லாமல் வேறென்ன?

பெரும்பாலும் கோழைகளான வி. ஸி. க்களும், பயந்த பேராசிரியர்களும், பல தொழில்களில் முதலீடு செய்துள்ள சிண்டிகேட் உறுப்பினர்களும் நிறைந்த நமது பல்கலைக் கழகங்களில், 'சுய நிர்ணய உரிமை' என்பது ஒரு பாவனை மட்டுமே; நடைமுறையில் அது செல்லாது. பெருந்தலைவர் காமராஜ் அவர்கள் அ. இ. கா. க. தலைவராயிருந்த போது வட இந்திய யூனிவர்ஸிடி ஒன்று திடீரென்று அவருக்கு டி. லிட். தருகிறேன் என்று முன் வந்தது. அவருக்கோ அதைக் கேட்டு ஒரே எரிச்சல்! ''என்னுலே உனக்கு என்ன காரியம் ஆகணும்னேன்? ஸ்டிரெயிட்டா அதைக் கேட்டுப் பண்ணிக்கிட்டுப் போய்த் தொலை! இந்த டாக்டர், லீக்டர்

வம்பெல்லாம் வேணும்னேன்'' என்று துணிந்து அதை எள்ளி நகையாடி அவர் மறுத்தார். குருச்ஷேவ் கூட அப்படி ஒரு முறை மறுத்ததாகச் சொல்லுவார்கள். கேட்க ஆறுதலாக இருக்கும் மிகச் சில உதாரணங்களில் இவை அடங்கும். ஆனால், இத்தகைய நெஞ்சுரமுள்ளவர்கள் வர வரக் குறைந்து கொண்டே வருகிறார்கள் என்பது தான் நமக்குக் கவலையளிக்கிறது. எச்சரிக்கையாகவும் இருக்கிறது. ஆனால், கவலையும் எச்சரிக்கையுமே தளர்ச்சியாகி விடுவதில்லை.

★

# 19. கள்ள மார்க்கெட்டில் கல்வி

இந்தியாவின் முழுப் பெரிய நகரங்களிலும், முக்கால் பெரிய நகரங்களிலும், பாதி நகரங்களிலும் மிகவும் புதிய புதியகள்ள மார்க்கெட் வியாபாரம் ஒன்று ஆரம்பமாகி இருக்கிறது. நகரமா, கிராமமா என்று இன்னும் தீர்மானிக்க முடியாதபடி இரண்டுங்கெட்டானாக இருக்கும் சில ஊர்களுக்கும்கூட இந்தக் கறுப்புச் சந்தைக் கல்வி வியாபாரம் பரவி வருகிறது. எல்லா ஊர்களிலுமே, 'ஆங்கில மீடியம்' என்ற கவர்ச்சியில் இந்தக் கள்ள மார்க்கெட் கல்வி விற்பனை அமோகமாக நடைபெற்று வருகிறது. சட்டமோ, அரசாங்கமோ இதை ஒன்றும் செய்ய முடியவில்லை.

நர்ஸரி பள்ளிகள், இங்கிலீஷ் மீடியம் பள்ளிகள் என்கிற பெயரில் தனிப்பட்டவர்களால் குழந்தைகளுக்கு நடத்தப் படும் பள்ளிக்கூடங்களைத்தான் சொல்கிறேன். இந்த மாதிரிப் பள்ளிக்கூடங்களில் இரண்டு வகையான ஏமாற்றங்கள் நிச்சயமாகக் கண்ணில் படுகின்றன.

1. படிக்கிற குழந்தைகளின் பெற்றோர்களிடமிருந்து அதிக பட்சமாகச் சம்பளம், கட்டணம் தவிர பல வகைகளிலும் பணத்தைக் கறப்பது.

2. வேலை பார்க்கிற ஆசிரியர்களுக்குச் சம்பளம் என்ற பெயரில் எவ்வளவு குறைவாகக் கொடுக்க முடியுமோ அவ்வளவு குறைவாகக் கொடுப்பது. குறைந்த சம்பளத்தைக் கொடுத்துவிட்டு அதிகத் தொகைக்குக் கையெழுத்து வாங்கிக் கொள்வது. யாராவது எதிர்த்தால், அப்படி எதிர்ப்பவர்களை உடனே சீட்டுக் கிழித்து வீட்டுக்கு அனுப்புவது. இதில் தர்மம், நியாயம், தாட்சண்யம் எதுவும் இல்லை.

வேறு வகை பிளாக் மார்க்கெட் வியாபாரங்களை விடக் குறைந்த முதலீட்டுடன் அதிக லாபம் சம்பாதிக்க முடிந்த

புது வகை பிளாக் மார்க்கெட் வியாபாரமாக-'கல்வி' என்ற ஒரு புனிதமான லேபிளையும் ஒட்டிக் கொண்டு, இதை யாரும் எந்த ஊரிலும் செய்துவிட முடிகிறது.

முனிஸிபாலிட்டி, கார்ப்பொரேஷன் ஆரம்பப் பள்ளிகள் தர்ம ஆஸ்பத்திரிகளை விட மட்டமாக இருப்பதால், தனியார் முன் நின்று நடத்தும் இந்தக் கொள்ளை விலைக் கள்ள மார்க்கெட்டில் கல்வியை வாங்க எல்லாத் தரப்புப் பெற்றோர்களும் போட்டி போட்டுக் கொண்டு க்யூவில் போய் நிற்கிறார்கள்.

ஆங்கிலம் விதேசி பாஷை-அந்நிய மொழி, என்றெல்லாம் பேசும் சூப்பர் தேச பக்தர்களும், பிரதேச மொழி அபிமானிகளும் எவ்வளவுதான் கரடியாகக் கத்தினாலும், அடி மட்டத்திலும், மத்திய தர வர்க்கத்துப் பெற்றோர்களிடமும் அந்த மொழியின்மேல் பற்று, மதிப்பு, ஆர்வம், ஆங்கிலம் தெரியாவிட்டால் தங்கள் குழந்தை முன்னுக்கு வர முடியாது என்ற எண்ணம்—இவற்றில் எதுவும் குறைந்து விடவில்லை. சுதந்திரமடைந்து 30 வருஷத்துக்கு மேலாகியும் இதுதான் நிலை.

பெரும்பாலான பெற்றோர்களைப் பற்றிய இந்த 'சைகாலஜி'-இப்படிப்பட்ட பள்ளிக் கூடங்களைத் தொடங்குகிறவர்களுக்கு மிகவும் நன்றாகத் தெரிந்திருக்கிறது. யார் என்ன சொன்னாலும் ஆங்கிலம் இந்நாட்டில் மரியாதைச் சின்னமாகவே எங்கும் இன்னும் கருதப்படுகிறது.

சாதாரணமாகக் குடிசைப் பகுதிகளில் வசிக்கும் தொழிலாளிகள், உழைக்கும் வர்க்கத்தினர், குறைந்த வருவாயுள்ளவர்கள்கூட மற்றச் செலவுகளைக் குறைத்துக் கொண்டாவது தங்கள் குழந்தைகளை இப்படி இங்கிலீஷ் மீடியம் பள்ளிகளில்தான் சேர்க்கிறார்கள். வாயைக் கட்டி, வயிற்றைக் கட்டி மீதப்படுத்திய வருவாயில் பெரும் பகுதியை இப்படிப் பள்ளிகளுக்குக் கொடுத்தும்கூட இந்தப் பெற்றோர்கள் எதிர்பார்க்கும் பலன் அங்கிருந்து கிடைப்பதில்லை.

இங்கிலீஷ் மீடியம் பள்ளியில் சேர்த்த ஆறு மாதத்தில் தங்கள் குழந்தை அம்மா, அப்பா என்று கூப்பிடுவதை

மம்மி, டாடி என்று மாற்றிக் கூப்பிடுவதிலேயே சில பெற்றோர்களுக்கு அல்ப சந்தோஷம் ஏற்பட்டு விடுகிறது! மம்மி, டாடிக்குமேல் பொதுவாக, இம்மாதிரிப் பள்ளிகளில் எதிர் பார்க்கும் அறிவு வளர்ச்சி, இனிய பழகும் முறைகள் இவற்றில் எதுவுமே தங்கள் குழந்தைகளுக்கு வராததைக் கண்டு நாளடைவில் பல பெற்றோர்கள் பெருத்த ஏமாற்ற மடைகின்றனர்.

இவ்வாறு பெற்றோர்களின் ஏமாற்றம் வளர்ந்து கொண்டிருக்கிற சமயத்திலேயே கல்வி வர்த்தகத்தைத் தொடங்கியவர், அந்த வட்டாரத்தில் இரண்டு, மூன்று வீடுகள் தமது வியாபார ஸ்தலமான பள்ளிக்கூடத்துக்குச் சொந்தக் கட்டிடம், இரண்டு வேன், ஒரு கார் எல்லாம் வாங்கி விட முடிகிறது.

முதலில் தொடங்கும்போது ஒரு சிறிய வீட்டை வாடகைக்குப் பேசிக் கொண்டு, 'எவர் பிரைட் நர்ஸரி ஸ்கூல்' என்றோ, 'ப்ளூ ஸ்கை சில்ரன் ஹவுஸ்' என்றோ போர்டு மாட்டுகிறார்கள். 'இங்கிலீஷ் மீடியம் நர்ஸரி, எல். கே. ஜி., யூ. கே. ஜி. வகுப்புக்கள்' என்று விளம்பரம் செய்கிறார்கள். காம்பவுண்டில் இரண்டு மூன்று கூரை ஷெட்டும் போட்டுக் கொள்கிறார்கள்.

கிடைக்கிற ஐம்பது, அறுபது குழந்தைகளையும், அந்த வீட்டிற்குள் பட்டி தொட்டிகளில் மாடு அடைக்கும் பவுண்டில் அடைக்கிற மாதிரி அடைத்துப் போடுகிறார்கள். நர்ஸரி, எல். கே ஜி., யூ. கே. ஜி. மூன்றையும் ஒரே கூடத்தில் மூன்று மூங்கில் தட்டிகளை வைத்து மூன்று தனி வகுப்புகளாகப் பிரித்து விடுகிறார்கள்.

அட்மிஷனின்போதே ரசீது தராமலும், தந்தும் அட்மிஷன் ஃபீஸ், ஹெல்த், ஸ்போர்ட்ஸ் என்று என்னென்னமோ பில் போட்டுக் கிட்டத்தட்ட நூறு ரூபாய்க்குக் குறையாமல் வாங்கிக் கொண்டு பின் ஸ்கூல் பில்டிங் டொனேஷன் (அநேகமாகக் கம்பல்ஸரி) என்று ரூ. 50 அல்லது இருநூறு என்று தனியாகவும் வசூலித்து விடுகிறார்கள். தொடக்கமே இருநூறு, முன்னூறு ரூபாயோடு

தொடங்கும். மாதச் சம்பளம் ரூ. 20 முதல் 30 அல்லது 40 வரை இருக்கும். முதல் ப்ராக்ரஸ் ரிப்போர்ட் வரும் போதே, ''உங்கள் குழந்தை ரொம்ப வீக். இங்கேயே ஸ்கூல் முடிந்ததும் மாலை 4 மணிக்கு மேல் அதிகப்படியாக ஒரு மணி நேரம் ஸ்பெஷல் கோச்சிங் செய்கிறோம். அதற்கு டியூஷன் ஃபீஸ், சம்பளம் தவிரத் தனியாக இன்னொரு 30 ரூபாய் ஆகும்-என்று எழுதி அனுப்புவார்கள். இந்த அதிகப் படி 30 ரூபாய்க்கு ஒரு தனி ட்யூஷன் இராது.

அவர்களே ஸ்கூல் பஸ் வைத்திருப்பார்கள். சிலர் ரிக்ஷா, முதலிய வேறு வித வாகனங்களைக்கூட உபதொழி லாக ஸ்கூலுடன் சேர்த்தே வைத்திருக்கிறார்கள். அதில் உங்கள் பையனை அழைத்துச்சென்று திரும்பக்கொண்டுவந்து விடுவதற்கு மேலும் ஒரு 30 ரூபாய் அல்லது 40 ரூபாய் கேட்பார்கள். அது சைட் பிஸினஸ் அல்லது பை-புரா டெக்ட் விற்பனையாக இருக்கும்.

நடு நடுவே ஸ்கூல் வளர்ச்சி நிதிக்கு நாடகம், நட்சத்திர இரவு, இசை நிகழ்ச்சி என்று 15 முதல் 50 ரூபாய் வரை பெறுமானமுள்ள இரண்டு டிக்கெட்டுகளையாவது நீங்கள் கண்டிப்பாக வாங்கியாக வேண்டும். ஸ்கூலில் டெலிவிஷன் வாங்குவதால், உங்கள் குழந்தை வழியாக வரிவிதிப்பு ரூ. 10 அல்லது 20 வரை தர வேண்டியிருக்கும். ஸ்கூலில் ரேடியோ வாங்கவும் முன்பு இதே மாதிரிப் பணம் தந்திருப் பார்கள். ஆனால், ரேடியோ, டி. வி. எல்லாம் ஸ்கூல் நடத் துகிறவருடைய வீட்டில் இருக்கும். பள்ளி நேரத்தில் டெலி விஷன் நிகழ்ச்சியைக் காட்டிக் குழந்தைகளுக்குச் சொல்லித் தர மருந்துக்குக்கூட டி.வி-யில் புரோகிராம் கிடையாது. இருந்தும் டி. வி. குழந்தைகள் செலவில்தான் வாங்கப்படு கிறது.

இது தவிர யூனிஃபார்ம் துணி, இன்ன கலரில் பூட்ஸு கள், நோட்டுப் புஸ்தகங்கள் எல்லாம் கண்டிப்பாக இந்தக் கடையில்தான் வாங்கியாக வேண்டும் என்று உங்கள் குழந் தைகளிடமே விலாசங்களைக் குறித்துக் கொடுத்து அனுப்பு வார் உங்கள் நர்ஸரி பள்ளியின் ஏகபோக முதலாளி.

பள்ளிக்குரிய அதே கலர் யூனிஃபார்ம் துணி, அதே கலர் ஷு வேறு கடைகளில் மலிவாகக் கிடைக்குமென்றாலும் அதை அங்கெல்லாம் நீங்கள் வாங்கிவிட முடியாது. எந்தக் கடைகளிலிருந்து ஸ்கூல் முதலாளிக்குச் சரியான கமிஷன் கிடைக்குமோ, அங்கேதான் படிக்கிற அத்தனை குழந்தைகளும் வாங்கியாக வேண்டும். தைக்கிற இடத்தைக்கூட அவர்கள் சொல்கிறபடிதான் நீங்கள் தேடிப் போக வேண்டும்.

எம்.ஏ., பி.ஏ., பி.இ.டி., எம்.இ.டி. படித்துவிட்டு இம்மாதிரிப் பள்ளிகளில் ஆசிரியர்களாகவும், ஆசிரியைகளாகவும் வேறு வழியின்றி நுழைந்திருப்பவர்களின் நிலைமையைத் தனியே தேடிப் போய் விசாரித்தால், பரிதாபகரமாக இருக்கும். மிரட்டலுடன் அமர்த்தப் பட்டு, மிகக் குறைந்த மாதக் கூலியில் அவர்கள் விரக்தியுடனும், வெறுப்புடனும் அந்த வேலைகளில் ஒட்டிக் கொண்டிருப்பார்கள். இவ்வளவு விலையுயர்ந்த கல்வியைத் தருகிற இடத்தில் பகல் உணவுக்குப் பொட்டலங்களுடனும், டிபன் பாக்ஸுகளுடனும் தங்கள் தங்கள் குழந்தைகளைத் தேடி வரும் அருமைப் பெற்றோர்கள் ஒதுங்கத் தேவையான இட வசதி, குடிக்கக் குடிநீர் வசதி ஒன்றும் இருக்காது. நடுப் பகலில் தெருவோரத்திலும், நடை பாதைகளிலும் பெற்றோர்கள் வெயிலில்-மழையில் காத்திருப்பார்கள். குடி தண்ணீர், கை கழுவத் தண்ணீர் முதல் சகலமும் பெற்றோர்கள் வீட்டிலிருந்து கொண்டு வந்திருப்பார்கள் ஸ்கூலில் அவை கிடைப்பது அரிது.

மணி அடித்ததும் சிறையிலிருந்து விடுதலை செய்யப் படுவதுபோல் விடுபட்டு ஓடி வரும் குழந்தைகளுக்கு, நடை பாதையிலும், தெரு ஓரத்திலும் வைத்தே சாப்பாடு போட்டு மறுபடி அனுப்ப வேண்டியிருக்கும். ஒரு வகுப்பில் 40 முதல் 50 வரை குழந்தைகள் அடைபடுவதால் ஆசிரியருக்குக் குழந்தைகள் மீது தனிப்பட்ட அக்கறை செலுத்த முடியாது. இம்மாதிரி நர்ஸரிப் பள்ளிகளில் ஒவ்வொரு குழந்தையின் மீதும் தனிப்பட்ட அக்கறை வைப்பது மிகவும்

முக்கியம். கார்ப்பொரேஷன் எலிமெண்ட்ரி ஸ்கூலை விட அதிகமாக—இப்படி விலையுயர்ந்த பள்ளிகளில்—நாம் எதிர் பார்ப்பது, விசேஷ கவனிப்புத்தான். ஆனால், இங்கோ வருஷத்துக்கு ஒரு குழந்தைக்கு ஆயிரக்கணக்கில் செலவழித் தும்கூடச் சாதாரண கவனிப்புக் கூடக் கிடைப்பதில்லை.

இங்கே நமது கல்லூரிகளில் எம். ஏ. முதலிய போஸ்ட் கிராஜுவேட் வகுப்புக்களுக்கு ஒரு வருடம் முழுவதும் ஒரு மாணவன் கட்டவேண்டிய கட்டணம் ரூ. 500-க்கு அதிக மாகாது என்றால், சில இங்கிலீஷ் மீடியம் நர்ஸரி பள்ளிகளில் ஒரு குழந்தைக்கு ஃபீஸ், டியூஷன், உடை, போக்குவரத்துச் செலவு, டொனேஷன் எல்லாம்சேர்ந்து வருடம் ரூ. 2500 முதல் ரூ. 3000 வரை ஆகி விடுகிறது. இப்படி ஒப்பு நோக்கினால்தான் இதன் கொடுமை உங்களுக்குப் புரிய முடியும்.

விதி விலக்காக மிகச் சில நல்ல நாணயமான பள்ளிகள் எங்கும் உண்டுதான். ஆனால், வியாபாரம்தான் அதிகம். வெறும் வியாபாரமாகவும் தெரியவில்லை.

இது நிச்சயமான கள்ள மார்க்கெட் வியாபாரமாகவே தான் இருக்கிறது. மெய்யான கல்வியறிவுதான் கள்ள மார்க்கெட்டை ஒழிக்க வழி என்பார்கள். நாமோ கல்வி யறிவையே கள்ள மார்க்கெட்டில் விற்கவும், வாங்கவும் துணிந்து விட்டோம்.

'எழுத்தறிவித்தவன் இறைவன் ஆகும்' என்பதை 'எழுத்தறிவு விற்றவன் குபேரன் ஆவான்' என்று இனி மாற்றலாமா?



## 20. சொல் ஊதாரித்தனம்

'நிறை குடம் தளும்பாது'—என்று தமிழில் ஒரு பழமொழி உண்டு. பழமொழியின் மறுபக்கத்து அர்த்தமாகக் 'குறை குடம் தளும்பும்' என்பதும் தெரிய வருகிறது. முழுமையாக நிரம்பியிருக்கிற குடம் தளும்பி வழிந்து, தன்னிடம் சேர்ந்திருக்கிற நீரைக் கொஞ்சமும் வீணாக்காது. ஆனால் அரைகுறையாகத் தண்ணீரைக் கொண்டிருக்கிற குடமோ, தளும்பி வழிந்து அங்கும் இங்கும் அலைபாய்ந்து கண்டபடி சிந்தி வீணாக்கும்; விரயமாக்கும்.

நமது பிரசங்கங்கள், பொது நிகழ்ச்சிகளுக்குப் போகும் போதெல்லாம் இந்தப் பழமொழி எனக்கு நினைவு வருவதுண்டு. சொற்களை எப்படி எப்படியெல்லாம் நோக்கமும் பயனும் இல்லாமல் ஊதாரித்தனமாகவே செலவழிக்கலாம் என்று தெரிந்து கொள்ள வேறு எங்கும் போக வேண்டாம். நமது கூட்டங்கள் சிலவற்றுக்குப் போனாலே போதுமானது.

'வார்த்தைச் சிக்கனம்'—என்பது என்னவென்றே தெரியாதபடி 'சொல்மாரி' பொழியும் பேச்சாளர்கள் நம்மிடையே ஏராளமாக இருக்கிறார்கள்.

தெரிந்தோ தெரியாமலோ, தமிழ் மேடைப் பேச்சுக்குச் 'சொற்பொழிவு' என்றுதான் பெயர் வைத்திருக்கிறார்கள். 'சொற்களைப் பொழிவது' என்ற அதன் நேரடி அர்த்தம் எவ்வளவு பொருத்தமாக இருக்கிறது பாருங்கள்!

சொற்பெருக்கு, சொல்மாரி, சொற்பொழிவு என்ற பெயர்கள் எல்லாவற்றிலும் அவற்றை ஏற்படுத்தியவர்களுக்கு நல்லெண்ணம் இருக்கலாமோ என்னவோ? ஆனால், இன்று அவற்றைப் பயன்படுத்துகிறவர்களைக் கவனித்தால் கிண்டலான அர்த்தம்தான் நமக்குத் தோன்றுகிறது.

ஒருவரை 'நிறை குடம்' என்று முடிவு செய்வதற்குப் பேச்சிலும், எழுத்திலும், மொழியை உபயோகிக்கிற

எல்லாச் சாதனங்களிலும் சொற் சிக்கனத்தை அவர் எவ்வளவிற்குக் கடைப் பிடிக்கிறார் என்பதை முக்கியமாகக் கவனிக்க வேண்டும்.

பழைய தமிழ் இலக்கணங்களில் நூலாசிரியனுக்கு, எழுதுகிறவனுக்கு, பேசுகிறவனுக்கு எதுஎது ஆகாத குணங்கள் என்று பட்டியல் கொடுத்திருக்கிறார்கள். ஆகாத குணங்களில் முக்கியமானதாக வருவது 'சொற் பல்குதல்' (வார்த்தைப் பெருக்கம்) ஆகும். அதாவது அர்த்தமில்லாத வார்த்தைகளை அடுக்குவது மிகப் பெரிய குற்றம் என்பது பழைய இலக்கணங்களின் கருத்து.

இன்றோ அர்த்தமில்லாத வார்த்தைகளை வைக்கோற் போராகக் குவித்து, அதையே ஒரு திறமையாகக் காட்டி மருட்டுவதுதான் நம்மைச் சுற்றி அதிகமாக இருக்கிறது.

ஆயிரம் ரூபாய் செலவழிக்கப்பட வேண்டிய ஒரு காரியத்தை, அதே நேர்த்தியுடன் அறுநூறு ரூபாயிலேயே சிக்கனமாக முடித்துக் கொண்டு வருகிறவனுடைய திறமையைப் பாராட்டுகிறோமே, அதுபோல நூறு வார்த்தைகளில் சொல்லி விளக்க வேண்டிய ஒன்றை, எழுபது வார்த்தைகளிலேயே கச்சிதமாகச் சொல்லுகிறவனுடைய திறமையையும் பாராட்ட வேண்டும்.

ஆனால், பணச் சிக்கனம் பாராட்டப்படுகிற இந்நாட்டில் சொற் சிக்கனத்தைப் பற்றி யாரும் கவலைப்படுவதில்லை.

'அந்தப் பெண் கிணற்றிலிருந்து பானையில் தண்ணீர் கொண்டு வந்தாள்'—என்ற வாக்கியத்தில் ஒவ்வொரு வார்த்தையும் அர்த்தத்தோடும் அவசியத்தோடும் நிற்கிறன. அநாவசியமான ஒரு சொல்கூட அதில் இல்லை. அதே வாக்கியத்தை, 'வானில் வட்டமிடும் தேன் நிலவு போலும் சிங்கார முகத்தையுடைய அந்தப் பருவச் சிட்டு, கிணற்றுக் கேணியிலிருந்து பானைக் குடத்தில் பளிங்கெனத் தண்ணீரைக் கொண்டு அணங்கென மென்னடை நடந்து வந்தாள்'—என்று எழுதுவதுதான் இப்போது ஃபாஷனாகி வருகிறது. வார்த்தை ஊதாரித்தனத்திற்குச் சரியான உதாரணம் இந்த வாக்கியம்.

ஒரே முகத்தில் விகாரமாக நூறு பாலுண்ணிகளைப் பார்ப்பது போல், ஒரே கையில் முத்து முத்தாகச் சொறி சிரங்கு அப்பியிருப்பதுபோல், கல்லத்தி மரத்தின் கிளை, இலை, தண்டு எல்லாவற்றிலும் விகாரமாகக் காய்கள் காய்த்து மொய்த்திருப்பது போல், தேவையற்ற வார்த்தைப் பெருக்கம் விகாரமாகவும், அருவருப்பூட்டக் கூடிய விதத்திலும் இருக்கிறது.

வார்த்தைகளைப் பற்றிய பிரக்ஞையோடு, அவற்றைத் தேர்ந்தெடுத்து உபயோகிக்க வேண்டும். அவசியமும் அர்த்தமும் பார்த்து உபயோகிக்க வேண்டும். குறைந்த வார்த்தைகளை உபயோகித்து அதிக அர்த்தத்தை அடைய வேண்டும். அதிக வார்த்தைகளை உபயோகித்துக் குறைந்த அர்த்தத்தை அடையக் கூடாது. படாடோபமான வார்த்தைகளை உபயோகிப்பது இப்போது சர்வசாதாரணமான வழக்கமாகி வருகிறது.

அதிக வார்த்தைகளை உபயோகித்தால் குறைந்த உணர்வையும், குறைந்த சிக்கனமான வார்த்தைகளை உபயோகிப்பதால் அதிக உணர்வையும் அடையலாம் என்பது எல்லா மொழிகளிலும் சாத்தியமான நுணுக்கம்.

**'I request you to speak'**—என்பதையே தமிழில், 'நான் உங்களைப் பேசுமாறு வேண்டி விரும்பி மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன்'—என்பது போல் கூறுகிறார்கள். இதில் 'வேண்டி, விரும்பி, மன்றாடி' என்கிற மூன்று வார்த்தைகளும் சேர்ந்து ஒரே அர்த்தத்தைத்தான் தருகின்றன. ஒரே அர்த்தத்தைத் தர மூன்று வார்த்தைகள் எதற்கு? ஒரு முறை குறி வைத்து ஒன்றைச் சுட்டு முடித்தபின், அதே பிராணிக்காக மேலும் வீணே குண்டுகளைச் செலவழிப்பது வேட்டைக்காரனின் பிழையாவது போல், கெட்டிக்கார மொழி அறிஞன் வார்த்தைகளை இலக்குப் பார்த்துத் தவறாத அர்த்தத்தோடு பயன்படுத்த வேண்டும். செத்த பாம்பை அடிப்பதுபோல், ஒரு வார்த்தையால் அர்த்தம் கிடைத்த பின் அதே அர்த்தத்தைத் தருகிற வார்த்தைளையே மேலும் அடுக்கிப் பயன்படுத்துவது கேவலமானது.

'அன்று திருக்குறளுக்கு உரை எழுதிய பரிமேலழகர் பத்தாம் பசலித்தனமானவர். நாம் நவீன காலத்தில் வாழுகிறோம்' என்று புது உரைகள் கூறுகிறோம். ஆனால், அந்தப் பரிமேலழகரிடம் இருந்த வார்த்தைச் சிக்கனம் இன்று நம்மிடம் இல்லையே?

மானம்:- 'தாழாமை—தாழ்வுவரின் வாழாமை-' என்று மானத்துக்குச் சிக்கனமாகவும் கச்சிதமாகவும் உரை எழுதிப் பதசாரம் சொல்லியிருக்கிறார் அவர். இன்று 'மானம்' என்ற தலைப்பில் நம்மூர்க் 'கோடையிடிப்' பேச்சாளர்களில் யாராவது ஒருவரைப் பேசச் சொல்லி மேடையில் நிறுத்தினால், அதைக் கேட்கிறவர்களின் மானமே போய்விடும். 'கோடையிடி' பாணிக்கு ஒரு 'ஸ்பெஸிமன்' பார்க்கலாமா?

'மானத்தை வடவர் தானம் கொடுத்துப் பெறுமளவு நாம் ஈனப் பிறவிகளில்லை என்பதைத் தாய்மேல் ஆணையிட்டுத் தமிழ்மேல் ஆணையிட்டுக் கூற விரும்புகிறேன் சோழன் கண்ட மானம், பாண்டியன் பார்த்த மானம், சேரன் சுவைத்த மானம் நம் இலக்கியங்களின் தனிச் சொத்து. தமிழ் மக்களுக்கே உரியது! (மற்றவர்களுக்கும் இருக்கக் கூடாதா?) தாரணி புகழ்வது, சரித்திரம் பேசுவது இரத்தத்தோடு ஊறிப் போனது. புறநானூறு பேசும் மானம். சிலப்பதிகாரம் செப்பும் மானம்......'—என்று இப்படியே 100 மணி நேரம் பேசினாலும் 'தாழாமை—தாழ்வரின் வாழாமை'—என்று நான்கே நான்கு வார்த்தைகளில் அதற்குக் கிடைத்திற்கும் கச்சிதமான விளக்கம், நூறு மணி நேர விளக்கத்தில் அதற்குக் கிடைக்க முடியாது.

மொழியின் வார்த்தைகளை மந்திரம்போல், நோக்கமும் பயனும் சிக்கனமும் உள்ளதாகப் பயன்படுத்துகிறவனே அறிஞன். ஆனால், அவர்களின் எண்ணிக்கை இன்று மிகவும் குறைவு.

சுடத் தெரியாத கத்துக்குட்டி வேட்டைக்காரனைப் போல் ஆயிரம் துப்பாக்கி ரவைகளை வீணாக்கியும் ஒரு

குருவியைக்கூடச் சுட முடியாமல் பதங்களை வீணுக்குகிற சுபாவம் மொழி அறிஞனுக்கு ஆகாது.

'மந்திரம் போல் வேண்டுமடா சொல் இன்பம்'-என்று பாரதியாரும் 'சொல்லுக சொல்லில் பயனுடைய'-என்று திருவள்ளுவரும் கூறியிருக்கும் சொற் சிக்கனத்தைப் பற்றி நாம் கவலைப்படுவதில்லை.

ஜனகனுடைய சபையில் இராமன் வில்லை ஒடித்ததை இரண்டாயிரம் வார்த்தைகளில் வர்ணித்திருக்கலாம். ஆனால், கம்பன் அதை, 'எடுத்தது கண்டார் இற்றது கேட்டார்'—என்று 'கண்டது கேட்டது' என்னும் 2 அம்சங்களை நான்கே வார்த்தைகளில் விவரித்த சொற் சிக்கனத்தை வைத்தே அவனை மகாகவி என்று புகழலாம்.

சிறு குச்சியால் அடிக்க முடிந்ததைக் கொல்லப் பீரங்கியைத் தேடுவதும், பீரங்கியால் சுட வேண்டியதற்குத் தீபாவளித் துப்பாக்கியே போதுமென்று நினைப்பதும் பேதைமை. எதற்கு, எந்தச் சொல், எப்படிப் பயன்படும் என்கிற வார்த்தைப் பிரக்ஞை மிக மிக முக்கியம்.

நூற்றுக்குத் தொண்ணூற்றென்பது தமிழ்ப் பிரசங்கங்களைக் கேட்கும் போது சக்கை ஆக இருப்பதற்குக் காரணம் சொல் ஊதாரித்தனமே.

அரசியலில் ஓரளவு தங்களுடன் கருத்து ஒற்றுமை உள்ள மக்களை, 'உயிரே! இரத்தமே! சதையே! குடலே! குருதியே'-என்று அழைப்பது போன்ற 'நான் வெஜிடேரியன் லவ்' தான் ஒரு சொற்பொழிவின் முக்கால் பாகமாக இருக்கிறது இங்கே.

'வேறு ஒரு வார்த்தையால் அந்த வார்த்தையை வெல்ல முடியாதபடி சொற்களைத் தேர்ந்தெடுத்துப் பேசுங்கள்'-என்ற திருவள்ளுவரின் அறிவுரையைக் கடைப் பிடித்தால் போதும். தமிழ் மொழியில் சொற் சிக்கனம் தானே வந்துவிடும்.

ஒரு மொழியின் வளர்ச்சி, அல்லது ஆற்றல் அந்த மொழிக்குக் குறைந்த வார்த்தைகளால் அதிக அர்த்தத்

-னைத் தர முடிகிறதா இல்லையா என்பதைப் பொறுத்தே கணிக்கப்படுகிறது.

பணத்தில் ஊதாரித்தனமாக இருப்பவன் திவாலாகி விடுவான். வார்த்தைகளைச் செலவழிப்பதில் சிக்கனமாக இருக்கத் தெரியாதவன் மதிப்பிழந்து போவான். மொழி வளர்ச்சியின் உயர்ந்த பக்குவம் அதன் சொற் சிக்கன வசதிகளைப் பொறுத்தே அதற்கு வந்தடைய முடியும். ★

# 21. நமக்குப் புரிந்த சுதந்திரம்

'எங்கே நம்மை அடக்கியாள விரும்புகிறார்களோ அங்கே நாம் சுதந்திரமாக இருக்க முயல வேண்டும். எங்கே நம்மைச் சுதந்திரமாக விட்டு விடுகிறார்களோ அங்கே நாம் மிகவும் அடக்கமாகவும், கட்டுப்பாடாகவும் நடந்து கொள்ள வேண்டும்' என்பது சுதந்திரத்தைப் பற்றிய என் கொள்கை-அதாவது நான் அதைப் புரிந்துகொண்ட விதம்.

'சுதந்திரம்' என்பதைப் பெரும்பாலான இந்தியர்கள் எப்படிப் புரிந்து ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள் என்று ஊடுருவிப் பார்த்தால் மிகவும் வேடிக்கையாயிருக்கும். சில இடங்களில் அதிர்ச்சியாகவும் கூட இருக்கும்.

எதிலும் பற்றின்றி, எதைப்பற்றியும் பொறுப்புணர்ச்சி இன்றி விட்டேற்றியாக இருப்பது வேறு. சுதந்திரமாக இருப்பது வேறு. தான்தோன்றித்தனமாக நடந்து கொள்வதும் சுதந்திரமாக இருப்பதுவும் ஒன்றல்ல. அசல் சுதந்திரம் பொறுப்பு உணர்ச்சியுடன் அனுபவிப்பது. தான்தோன்றித்தனமானது பொறுப்புணர்ச்சியின்மை.

தான்தோன்றித்தனமாக நடந்து கொள்வதையே சுதந்திரம் என்று புரிந்து கொண்டவர்கள்தான் நம் நாட்டில் அதிகம். சுதந்திரமாக வாழ்வது என்றால் எந்தப் பொறுப்பு உணர்ச்சியும், சுமையும் இல்லாமல் இஷ்டம்போல் இருப்பது என்ற சுலபமான விளக்கம் ஒன்று அடிக்கடி பலரால் தரப் படுகிறது. இப்படி நிறையப் பேசவும் எழுதவும்பட்டு, இதுவே இங்கு ஒரு வெகுஜன சித்தாந்தமாகவும் உருப் பெற்றிருப்பதுபோல் தெரிகிறது.

உண்மையில் அடிமையாக இருப்பவனைவிடச் சுதந்திரமாக இருக்க விரும்புகிறவனுக்குத்தான் பொறுப்புக்களும்,

சுமைகளும் அதிகம். ஒரு வகையில் அடிமைக்குப் பொறுப்புக்களே இல்லை. சுதந்திரமாக இருப்பவனுக்கோ அந்தச் சுதந்திரத்தையும், தன்னையும் சேர்த்துக் காப்பாற்றிக் கொள்வதற்கே பல பொறுப்புக்கள் இருந்தாக வேண்டும். இல்லாவிடில் சுதந்திரம் நீடிக்காது.

குடும்பம், வரவு-செலவு எல்லாம் தந்தையின் கையில் இருக்கிற வரை ஒரு மகனுக்குக் கவலையும் பொறுப்பும் குறைவு. ஆனால், அவை அந்த மகனின் கைக்கே வந்த பின் வரவு-செலவு மட்டுமே கை மாறவில்லை. பொறுப்பும் கவலையும் கூடக் கைமாறுகின்றன என்றுதான் கொள்ள வேண்டும்.

ஆனல், நம் நாட்டில் இப்படிக் கொள்ளவில்லை. சுதந்திரத்தை அதிகப் பொறுப்பு என்பதாகப் புரிந்து கொள்ளாமல் அதிகப் பொறுப்பின்மை என்பதாகவே பெரும்பாலும் நாம் புரிந்து கொண்டிருக்கிறோம். இந்த அர்த்த பேதம் அல்லது அனர்த்தம் சுதேசித் தன்மை கொண்டதே.

உழைப்பு அதிகம் தேவைப்படுகின்ற காலத்தில் உழைக்காமலிருக்கச் சுதந்திரம், படிக்க வந்த கல்லூரி, பள்ளிகளில் படிக்காமலிருக்கச் சுதந்திரம், விசுவாசமாயிருக்க வேண்டிய எல்லா இடங்களிலும் விசுவாசமாயில்லாமல் இருக்கச் சுதந்திரம் என்று, சுதந்திரம் என்ற வார்த்தை இப்போது கொச்சைப் படுத்தப்படுகிற இடங்களை ஒவ்வொன்றாகப் பார்த்தீர்களானால் இது உங்களுக்கு மிகவும் சுலபமாகவே புரியும்.

'அடிமைத்தனத்திலிருந்து விடுபடப் போராடிச் சுதந்திரம் அடைந்தோம். அதற்குப் பின் என்ன செய்வது, எப்படி முன்னேறுவது என்றெல்லாம் புரியாத காரணத்தால் 'சுதந்திரத்திற்கே' அடிமையாகிப் பேசாமல் இருந்து விட்டோம்'—என்று என் நண்பர் ஒருவர் அடிக்கடி சொல்லுவார். அது ஓரளவு உண்மையாகவே படுகிறது.

நாம் புரிந்து கொண்ட சுதந்திரத்திற்கு-அதாவது தான் தோன்றித்தனத்திற்கு-நாமே அடிமையாகி விட்டோமோ என்றுதான் தோன்றுகிறது. சுதந்திரத்தின் பரிபூரண

உபாசகன் என்பவன் சொல், செயல், சிந்தனை, எதனுலும் எந்த விநாடியிலும் பிறரை அடிமைப்படுத்த முயலக் கூடாது. பிறரை வார்த்தையாலோ செயலாலோ, சிந்தனை யாலோ அடிமைப்படுத்த முயலாமலிருந்து வருவது என்பது, தான் சுதந்திரமாயிருப்பதிலும் ஒரு சுதந்திரவாதி யின் முக்கியக் கடமையாகும்.

பிறர் மீது வலிந்து திணிக்கும் நிர்ப்பந்தங்கள் எல்லாமே அடிமைத்தனம்தான். நம்மை யாருமே நிர்ப்பந்தப்படுத்தக் கூடாது என்று நினைக்கிற நாம், பிறரை நிர்ப்பந்தப்படுத்த முயலும்போது சௌகரியமாக அதை மறந்து விடுகிறோம்.

இந்நாட்டு அரசியல், மதம், இலக்கியம், சமூகம், கல்வி எதிலும் நிர்ப்பந்தங்களற்ற சூழ்நிலையோ, சுதந்திரத் தென்றலோ கண்ணுக்கெட்டிய தூரம் வரை தென்பட வில்லை. மூன்று மாமாங்க காலமாக இதுதான் நிலையா?

எந்த மத ஆசார அனுஷ்டானங்களையும் கடைப்பிடிக்கா மல் இருக்க ஒருவனுக்குச் சுதந்திரம் உண்டு. அவன் தாராளமாக நாஸ்திகனுக இருக்க முடியும்.

ஆனுல், ஏதாவதொரு மத ஆசார அனுஷ்டானத்தை நம்பிக் கடைப்பிடிப்பவனைக் கிண்டல் செய்து பயமுறுத்தும் உரிமையும் தனக்கு இருப்பதாக ஒரு நாஸ்திகன் நினைத் தாலோ, செயல்பட்டாலோ, பேசினுலோ நிர்ப்பந்தம் பிறந்து விடத்தான் செய்யும். இந்த நிர்ப்பந்தமே அடிமை நிலைமையின் முளை.

'நான் நினைத்தபடி நினைத்த விதத்தில் சுதந்திரமாக இருப்பேன். அதே சமயத்தில் எனக்கு வேண்டாத இன்னெருவனை அப்படி இருக்க விடமாட்டேன்'—என்பது தான் சர்வாதிகார அடையாளம். எங்கெல்லாம் சுதந்திரம் ஒருவழிப் பாதையாக இருக்கிறதோ அங்கெல்லாம் சர்வாதி காரமும் இருக்கும். மதத்தைப் புறக்கணிப்பது மத சுதந்திரம் என்ருல், பிறரை வருத்தாமல், அதை வெறி யோடு விரும்பிக் கடைப்பிடிப்பவனை அந்தச் சுதந்திரத்தி லிருந்து விடுபடச் சொல்லி நிர்ப்பந்தப்படுத்துவதை என்ன வென்பது?

இங்கே உள்ளூர் பண்டார சந்நிதிக்கோ, சாமியார்களுக்கோ மாலை போடுவதும், தரிசிப்பதும்கூட மூட நம்பிக்கை என்று முழங்கும் பரம பகுத்தறிவாளர்களும், வெளிநாடு போனல் ரோமாபுரியில் வாடிகனுக்குப் போய் போப்பாண்டவருக்குப் பச்சை ஏலக்காய் மாலை போட்டு, அவரோடு நின்று படமும் பிடித்துக் கொண்டு வர முடியலாம். போப்பாண்டவரைக் குறை சொல்லவில்லை. நம்மூர் பகுதித்தறிவாளர்கள் உள்ளூரில் பிறர் தம் இஷ்டப்படி வழிபடும் வழிபாடுகளைக் குரு பக்தியைக் கிண்டல் செய்து விட்டுத் தாங்கள் மட்டும் தேவையானபோது ஃபாரின் சுவாமிகளோடு மாலையணிந்து போட்டோ எடுத்துக் கொள்ளும் சுதந்திரத்தை எடுத்துக் கொள்கிறார்களே என்பதைத்தான் சுட்டிக் காட்டினேன்.

'நான் எங்கே எப்படி வேண்டுமானாலும் இருப்பதற்குச் சுதந்திரம் உண்டு. நீங்கள் மட்டும் இன்ன இன்ன விஷயத்தில் இப்படி இப்படித்தான் இருந்தாக வேண்டும்'—என்பது என்ன சுதந்திரமோ புரியவில்லை.

இன்னும், வாக்களிக்கும் வாக்காளர்களைவிட அவர்கள் வாக்கைப் பெறும் எம்.எல்.ஏ.க்கள், எம்.பி.க்கள் அதிக சுதந்திரத்தை அனுபவிக்க முடிந்த நாடு இது. வாக்குகளைப் பெற்று ஜெயித்து விட்டால், அப்படி ஜெயித்து விடுகிற வேட்பாளர் தாம் நின்று ஜெயித்த கட்சி சின்னம் ஆகியவற்றைப் பற்றிக் கவலையேபடாமல் ஐந்து வருஷங்களுக்குள் தமக்கு லாபமுள்ள எந்தக்கட்சிக்கும் தாவுகிற சுதந்திரத்தை என்னவென்பது? ஐந்து வருடங்களுக்கு வாக்காளர் ஒரு சுதந்திரமும் இன்றித் தவிக்க (தகுதியற்ற வேட்பாளரைத் திருப்பியழைக்கும் சுதந்திரம்கூட இல்லாமல்) வேட்பாளர் அபரிமிதமான பல சுதந்திரங்களைப் பெற்றுப் பயனடைகிறாரே அதை எந்தச் சுதந்திர வகையில் சேர்ப்பது, எப்படி ஏற்பது?

சுதந்திர இந்தியாவிலும் தங்கள் வரிப் பணத்திலிருந்து, தங்கள் சொத்தான பொது வசதிகளாக உருவாக்கப்பட்ட பஸ்கள், இரயில்கள், தபாலாபீஸ்கள், தந்திக் கம்பங்களை

அழிக்கவும், எரிக்கவும் சில மக்கள் 'சுதந்திரம்' எடுத்துக் கொள்கிறார்களே அதை எந்தப் பிரிவில் வைத்து எண்ணுவது?

சுதந்திரம் என்ற பேரில் சில அராஜகங்களும், உரிமை என்ற பேரில் சில உபத்திரவங்களும் பெருகிவிட்டதனால் தான் எது அசல் சுதந்திரம், எது அசல் உரிமை என்று நம்மால் விளங்கிக் கொள்ள முடிவதில்லை.

பஸ் ஸ்டாண்டில் சிவனே என்று காத்து நிற்கிற யுவதியிடம் நாலைந்து இளைஞர்கள் வந்து கேலி பண்ணி வம்பு செய்தால் கண்டிக்க முடியவில்லை. 'இளைஞர் உரிமை' என்று குரல் எழுகிறது. 'யுவதியின் உரிமை' என்ன ஆவது? ஒருவரை அவமானப்படுத்தி மற்றொருவர் அடையும் எதுவும் சுதந்திரமோ, உரிமையோ ஆகாது. பிறரைச் சுதந்திரமாக இருக்க விடாதபடி தடுத்து நாம் அடையும் சந்தோஷம் பாவகரமானது என்பது புரிந்தாலொழியச் சுதந்திரத்தின் தத்துவமும் நமக்குப் புரியாது.

இங்கு நம் சுதந்திரத்தை நாம் புரிந்து கொள்ளும் முன் பிறர் சுதந்திரத்தைச் சகித்துக் கொள்ளப் புரிந்து கொள்ள வேண்டும். பிறர் சுதந்திரமாயிருப்பதைச் சகித்துக் கொள்ளக்கூட முடியாமல் நாம் சுதந்திரமாயிருக்க ஆசைப்படுவதற்குத்தான் 'அடக்கியாளுவது' என்று பெயர்.

நம் தலைவர்களில், சிவில் சர்வீஸிலுள்ள பெரிய அதிகாரிகளில், மந்திரிகளில் எத்தனை பேருக்குப் பிறர் சட்டத்துக்குட்பட்ட நியாயமான சுதந்திரத்தோடு இருப்பதைச் சகித்துக் கொள்ளும் குணம் இருக்கிறது என்று ஒரு 'சாம்பிள் சர்வே' செய்தீர்களாயின், சுதந்திரத்தை இந்த 32 வருஷங்களாக நாம் எப்படிப் புரிந்துகொண்டிக்கிறோம்—புரிந்து கொள்ள வைத்திருக்கிறோம் என்பது உடனே விளங்கி விடும். சக்தியுள்ளவர்களோ, சக்தியில்லாதவர்களோ, ஏழைகளோ, பணக்காரர்களோ, நம் கருத்துக்கு ஒத்தவர்களோ, ஒவ்வாதவர்களோ, நமக்கு வேண்டியவர்களோ, வேண்டாதவர்களோ—யாராயிருந்தாலும் சட்டத்துக்குட்பட்ட நியாயமான நல்வாழ்க்கை வாழ்ந்து சந்தோஷமா

யிருந்தால் அதை வரவேற்றுச் சகித்துக் கொள்ளும் குணம் மற்றவர்களுக்கு இருக்க வேண்டும். வரவேற்கும் குணம் இருந்தால் உத்தமமான சுதந்திரம் அது. சகித்துக் கொள்ளும் குணமிருந்தால் பரவாயில்லை. எங்காவது இரண்டுமில்லையாயின் அங்கு சுதந்திரமும் இல்லை என்பதைப் புரிந்து கொள்ள வேண்டியதுதான்.

ஒருவர் சுதந்திரமாயிருக்கப் பயன்படும் உத்திகள் பலர் ஒடுங்கிக்கிடக்க உதவுமாயின் அதுதான் சுதந்திரமின்மைக்கு அடையாளம்.

நமக்குச் சுதந்திரமாயிருக்கப் பிடிக்கிறது. கடினமாக உழைக்கப் பிடிக்கவில்லை. சொகுசாயிருக்கப் பிடிக்கிறது. பொறுப்பாயிருக்கப் பிடிக்கவில்லை. எதிர்காலத் திட்டமும், கவலையும், அக்கறையும் பிடிக்கவில்லை. இன்னும் சுதந்திரம் நமக்கு நிறையப் புரிய மீதம் வைத்திருக்கிறது.



# 22. திசை திருப்பும் கலையில்..

நீங்கள் எத்தனையோ கலைகளைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கலாம். ஆயகலைகள் 64 என்றுகூட முன்னோர்கள் அதனுடைய எண்ணிக்கையைக் கூறியிருக்கிறார்கள். நீங்கள் இதுவரை கேள்விப்படாத-முன்னோர்களின் எண்ணிக்கையில் அடங்காத—புதிய கலை ஒன்று பதவியில் உள்ள இந்நாட்டு அரசியல்வாதிகளால் அபாரமாக வளர்க்கப்பட்டு வருகிறது. இதில் மற்றவர்கள் ஓரளவுதான் தேர்ந்திருக்கிறார்கள் என்றால் அரசியல் வாதிகள் 'ரேங்க்' வாங்கக் கூடிய அளவுக்குத் தேர்ந்திருக்கிறார்கள்.

தேசத்தையே ஆட்டிப்படைக்கும் அந்த மகத்தான கலையின் பெயர் என்னவென்று நினைக்கிறீர்கள்? அது தான் 'திசை திருப்பும் கலை' இந்த மாபெரும் கலை தெரிந்திருந்தால் வேறு ஒரு திறமையும் இல்லாமலே ஆண்டுக்கணக்கில் இந்நாட்டு மக்களை ஆண்டு கொண்டிருக்கலாம்.

மக்களில் யாரும், தங்களுடைய பிரச்னைகள் எல்லாம் திசை திருப்பப்படுகின்றன என்பது கூடப் புரியாமலே கரகோஷம் செய்து சந்தோஷப் பட்டுக் கொண்டிருப் பார்கள்.

இலட்சக்கணக்கான கிராமங்கள் குடி தண்ணீர் இல்லா மல் சிரமப்படுகின்றன என்ற கசப்பான உண்மையை மறந்து விட்டு, அல்லது மறைத்து விட்டு, 'ஒவ்வொரு கிராமத்திலும் கலர் டெலிவிஷன் வரப் போகிறது'—என்று சொன்னால் ஜனங்கள் வாயில் விரலை இட்டு நகத்தைக் கடித்துக் கொண்டே கேட்டுக் கொண்டிருப்பார்கள்.

'சர்க்கரை, அரிசி விலைகள் ஏறி விட்டன. சர்க்கரையும், மண்ணெண்ணையும் கிராமங்களில் அறவே கிடைக்க வில்லை'—என்ற உண்மையைக் கௌரவமாக ஒப்புக் கொள் வதற்குப் பதில், 'எல்லாவற்றுக்குமே முந்திய கட்சியும்

அதன் ஆட்சியும்தான் காரணம்' என்று அப்புறமாகக் கூட்டத்துக்குக் கூட்டம் பேசிக் கொண்டிருக்க முடிந்த நாடு இது. பிரச்னைகளைத் திசை திருப்பி விட்டே அடுத்த தேர்தல் வரை காலம் கடத்திவிட முடிந்த அளவு அரசியல் அறியாமைகளும், வீர வணக்க மனப்பான்மையும் இந்நாட்டில்தான் நிரம்பிக் கிடக்கின்றன.

மின்சார வெட்டு, விவசாயிகள் பிரச்னை, பால் சப்ளையில் கோளாறுகள் எல்லாம் அமளி துமளிப்படுகிற நேரத்தில் சென்னைக் குதிரை வீரன் சிலைகளை மதுரைக்குக் கொண்டு போவதுபற்றிப் பேசிக் கொண்டிருப்பதும் இங்கேதான் சாத்தியமாகக் கூடியது.

இந்தத் திசை திருப்பும் கலையில் மந்திரிகளும், ஆட்சிகளும் தேர்ந்தபின், 'நெல்லுக்கு இறைத்த நீர் வாய்க்கால் வழியோடிப் புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம்' என்பது போல் அதிகாரிகளும் தேர்ச்சி பெறத் தொடங்கி விட்டார்கள். திசை திருப்பப் பயிற்சி பெறத் தொடங்கி விட்டார்கள்.

இதே ரீதியில் போய்க் கொண்டிருந்தால் ஏமாற்றுகிறவர்களின் எண்ணிக்கை அளவற்றுப் பெருகி விடும். பின்பு ஏமாறுவதற்கு ஆட்களே மீதமிருக்க மாட்டார்கள். ஏமாறுவதற்கு ஆட்கள் மீதமில்லா விட்டால் இன்றைய இந்தியத் தலைவர்களில் தொண்ணூற்றொன்பது சதவிகிதம் பிழைப்பில்லாமல் நடுத்தெருவுக்கு வந்து அநாதைகளாக நிற்கும்படி நேரிட்டு விடும்.

இன்றைக்குப் பல விஷயங்கள் ஏமாறுகிறவர்களை நம்பித்தான் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. ஏமாறுகிறவர்கள் இல்லாவிட்டால் எதையுமே சாதிக்க முடியாத அளவு பலவீனமான திறமைசாலிகளைக் கொண்ட நாட்டில் திசை திருப்பும் முயற்சிகளைக் கொண்டே மக்களைச் சமாளிக்க முடிந்திருக்கிறது.

கடந்த பல ஆண்டுகளாக மின்சாரத் தட்டுப்பாடு என்பது ஒவ்வோர் இந்திய மாநிலத்தையும் கடுமையாகப் பாதித்து வருகிறது. தொழில் உற்பத்தி சிதறிப் பொருளா

தாரம் பாதிக்கப்படுகிறது. சின்னஞ்சிறு அச்சக உரிமை யாளர் முதல், மிகப் பெரிய தொழிலதிபர்கள் வரை 'பவர்கட்' அறிவிப்பு வந்தவுடன் தலையில் கையை வைத்துக் கொண்டு சோர்ந்து போய் உட்கார்ந்து விடுகிறார்கள்.

இந்த முப்பதுக்கு மேற்பட்ட ஆண்டுகளில் எங்கெங்கே 'ஹைட்ரோ எலெக்டாக்' திட்டங்கள் சாத்தியம், எங்கெங்கே அனல் மின்சாரத்திட்டங்கள் சரித்தியம் என்பது பற்றித் திசை திருப்பாமல் பொறுப்போடு யோசித்திருந்தால் உற்பத்திக் குறைவைத் தவிர்க்கலாம். ஆனால், பொறுப் போடும் அக்கறையோடும் யாரும் அதைக் கவனிக்கவில்லை.

'இதை ஏன் செய்ய முடியவில்லை' என்பதற்குப் பின்னால் விளக்கம் சொல்லி விவரித்துப் பேசிக் கொண்டிருக்கும் தலைவர்கள்தான் இங்கு அதிகமே தவிர, 'இதை உடனே செய்தாக வேண்டும்'—என்று அவசிய, அவசரமுள்ள ஒரு வெகுஜன நலனுக்கான திட்டத்தில் கண்ணும் கருத்துமாகச் செயல்படக் கூடிய தலைவர்களோ, அதிகாரிகளோ இங்கு மிக மிகக் குறைவு. ஒன்றை அவ்வப்போது தட்டிக் கழிக்கவும், நிரந்தரமாகத் தட்டிக் கழிக்கவும், ஞாபகம் வைத்திருந்து 'விடாக் கண்டன் கொடாக் கண்டனாக'த் தொந்தரவு செய்பவர்களைத் திசை திருப்பிவிடவும் இந்திய அதிகார வர்க்கத்தினர் பயிற்சி பெற்றுத் தேறி இருப்பது போல், அத்தனை தூரம் பயிற்சியும் தேர்ச்சியும் உள்ளவர் களை உலகெங்கும் தேடினாலும் கிடைக்க மாட்டார்கள்.

1. கூடிய வரை குழப்பி விடுவது, 2. பதில் சொல்லா மல் தவிர்ப்பது, 3. தவறாக வழி காட்டுவது, 4. இழுத் தடித்து அயரப்போடுவது 5. தேடி வருபவர்கள் பொறுமை இழந்து தாங்களே திரும்பிப் போகும்படி செய்து விடுவது, 6. விஷயத்தை முற்றிலும் திசை திருப்பி விடுவது—ஆகிய அரிய பெரிய விஞ்ஞானக் கண்டு பிடிப்புக்கள் இந்திய அதிகார வர்க்கத்தினரின் சாதனைப் பட்டியலில் வரும் அம்சங்களில் சில ஆகும்.

இந்த அரிய சாதனைகளில் மந்திரிகளுக்கும், தலைவர் களுக்கும் அரசியல் கட்சிகளுக்கும் கூட அவர்கள் பயிற்சி

அளிக்கத் தொடங்கி விட்டிருக்கிறார்கள். உலகம் முழுவதும் உள்ள தனியார், சர்க்கார் அலுவலகங்களில் 'உண்டு, இல்லை, முடியும், முடியாது' என்ற சொற்கள் மட்டுமே பதிலாகக் கிடைக்கும். 'லெட் அஸ் ஸீ, ஐ வில் கோத் ரூதி பேப்பர்ஸ், அண்டர் கன்ஸிடரேஷன், நாட் யெட் டிஸைடட்' போன்ற அற்புதமான மந்திரச் சொற்றொடர்கள் இந்திய அதிகார வர்க்கத்தினரின் (அபூர்வச் சொற்றொடர்கள்) பொன் முட்டைகளாக மதிப்புப் பெறுபவை.

மக்கள் விழிப்பு உணர்ச்சியோடு கவனிக்கா விட்டால் விழித்துக் கொண்டிருக்கும் போதே அவர்கள் தொடையில் கயிறு திரிக்கத் தெரிந்த அரசியல்வாதிகளும், தலைவர்களும், கட்சிகளும் உள்ள நாடு இது.

ஆகவே, மக்களில் ஏமாறுகிறவர்களின் எண்ணிக்கை குறைய வேண்டுமாயின்—திசை திருப்பல் பேர் வழிகளைத் தட்டிக் கேட்க அவர்கள் திராணி பெற வேண்டும். அவசியமற்ற பயமும் அநாவசியமான மரியாதைகளும் போனால் தான் அந்தத் திராணி வர முடியும். நம் ஜனங்களுக்கு அது வருமா? வரமுடியுமா?

# 23. நிழல் யுத்தங்கள்

நம் நாட்டிலுள்ள தலைவர்கள், பிரமுகர்கள், அரசியல் வாதிகள், சமுதாய சீர்த்திருத்தவாதிகள் முதலியவர்களின் செயல்களைக் கூர்ந்து கவனித்தால் ஒரு விநோதமான உண்மை முதற் பார்வையிலேயே நமக்குத் தெரிந்துவிடும். ஒருவகையில் எழுத்தாளர்கள், கதாசிரியர்கள், நாடகாசிரியர்கள், திரைப்படத் தயாரிப்பாளர்கள் முதலிய கலைஞர்களும்கூட இந்தப் பார்வையில் அகப்படுகிறார்கள்.

பெரும்பாலான சமயங்களில் பிரச்னைகளை எதிர்த்துப் போரிடுவதைவிட, அவற்றின் நிழல்களை எதிர்த்துப் போரிடுவதும், போரிடுவதுபோல் பாசாங்கு செய்வதும் ஒரு வழக்கமாகி விட்டது. சில சமயங்களில் எவற்றின் நிழல்கள் என்றே தெரியாத, எவற்றோடாவது போரிடுவதும் உண்டு. வரவர இப்படிப்பட்ட போர்கள்தான் இங்கு அதிகமாகி வருகின்றன.

நிஜச்சண்டைகளில் போரிட்டு வீரர்கள் ஆவதை விட, இப்படி நிழற் சண்டைகளிலே போரிட்டு வீரர்கள் ஆகி விடுவது மிகவும் சுலபமாக இருக்கிறது. நிழல்களோடு போரிடுவதில் ஒரு பெரிய வசதி, எதிர்த் தாக்குதலைச் சமாளிக்க வேண்டிய சிரமமும், அவசியமும் இல்லாமலே வெற்றி வாகை சூடி விட முடியும். அதே சமயம் எட்ட இருந்து பார்த்துக் கொண்டிருக்கும் அப்பாவி மக்களுக்கு, ஏதோ தீவிரமாகச் சண்டை போட்டு அப்புறம் ஜெயிப்பது போல் தோன்றச் செய்துவிடவும் முடியும். இந்தியாவின் பொது மேடைகளில் இன்று நிழல் யுத்தங்களே அதிகமாக நடக்கின்றன.

இந்நாட்டின் அரசியல்மேடைப் பிரசங்கங்களில் பலவும், தேர்தல் வாக்குறுதிகளில் சிலவும் நிழல் யுத்தங்களுக்குப் பிரத்யட்சமான உதாரணங்களாகும்.

சமீபத்தில் ஒரு கூட்டத்திற்குப் போயிருந்தேன். அது அரசியல் கூட்டமா, இலக்கியக் கூட்டமா என்று சொல்வது முடியாத காரியம்.

கூட்டத்தில் பேசிக் கொண்டிருந்தவர், திடீரென்று விழிகளில் சிவப்பேறி, அனல் பறக்க வலது கை முஷ்டியை மடக்கி மேடையில் ஒரு குதி குதித்து மல்யுத்த வீரரைப் போல் பாய்ந்து சீறி, ''தமிழின் எதிரிகளைக் கொன்று குடலைப் பிடுங்கி மாலை சூடத் தயாராகுங்கள்! தமிழ்த் துரோகிகளின் வாழ்வுக்கு முடிவு கட்டப் புறப்படுங்கள்'' என்று மூச்சைப் பிடித்துக் கொண்டு கத்திக் கூப்பாடு போட்டார்.

நான் தமிழின் எதிரி இல்லை என்றாலும் எனக்குப் பயமாக இருந்தது. எனக்கு மட்டுமில்லை. எல்லோருக்குமே பயமாக இருந்தது. பேச்சாளர் நரசிம்மாவதாரம் (777 திடீர் ரகம்) எடுத்து, இல்லாத இரணியனின் கற்பனைக் குடலைப் பிடுங்கும் முயற்சியில் நிழல் சண்டை போட்டதுதான் காரணம்.

அவருடைய அரசியல் எதிரிகளைத் தாக்குவதற்கு அவர் மேற்கொண்ட தாக்குதல் கணையாகத் தமிழ் பயன் பட்டது. உண்மையில் அவரால் தாக்கப்பட்ட கட்சிக் காரர்கள் மேடையில் பேசும்போதும் கூட, ''சாவில் தமிழ் படித்துச் சாகவேண்டும்—எங்கள் சாம்பல் தமிழ் மணந்து வேக வேண்டும்''—என்றுதான் வாய்க்கு வாய் முழங்கிக் கொண்டிருந்தார்கள். அவர்களும் தமிழ்த் துரோகிகளையும், தமிழ் எதிரிகளையும் தீர்த்துக் கட்டப் போவதாகத்தான் சவால் விட்டுக் கொண்டிருந்தார்கள். இவர்கள் நோக்கில் அவர்கள் தமிழ்த் துரோகிகள். அவர்கள் நோக்கில் இவர்கள் தமிழ்த் துரோகிகள். தமிழ்த் துரோகி களை எதிர்ப்பது என்ற பாவனை இருவருக்குமே தேவை.

பார்க்கப் போனால் தமிழின் எதிரிகள் என்று இன்று யாரும் இருப்பதாகத் தெரியவில்லை. தமிழ் தெரிந்தவர்கள், தமிழ் தெரியாதவர்கள் என்ற இரு பிரிவினர்தான் இருக் கிறார்கள். இன்னும் வெளிப்படையாகச் சொல்லப் போனால் வெறும் தமிழ் உணர்ச்சி மட்டுமே உள்ளவர்கள், தமிழ்

அறிவுள்ளவர்கள் என்று வேறு விதமாக அவர்களைப் பிரிக்கலாம். ஆனால், துரதிருஷ்டவசமாகத் தமிழின் பெயரால் இங்கே தமிழ் அல்லாத வேறு காரணங்களுக்காக ஒரு 'நிழல் யுத்தம்' தொடர்ந்து நடத்தப்படுகிறது.

எல்லா அரசியல் கட்சி மேடைகளிலும் 'சமூக விரோத சக்திகளைப் பூண்டோடு அழித்து விடப் போராடி வருகிறோம்' என்று ஒரு வாக்கியம் அடிக்கடி சொல்லப்படுகிறது. இந்த வாக்கியத்தின் மூலம் யாரைச் சாடுகிறோம் என்று பிரக்ஞையே இன்றி, எந்த மேடையிலும், எந்தப் பேச்சாளருக்கும் ரெடிமேடாகத் தாக்குவதற்கு உடனே வாய்ப்பளிப்பவர்கள் இந்த 'சமூக விரோத சக்திகள்.' இவர்களுக்கு விலாசம் எதுவும் கிடையாது. மானம், ரோஷம், வெட்கம் எதுவுமே இவர்களுக்குக் கிடையாது. 'ஏன் எங்களைத் தாக்கினீர்கள்' என்று எதிர்த்துக் கேட்கவும் இவர்களுக்குத் தெரியாது. இந்தச் சமூக விரோத சக்திகள் யாரென்று யாருக்கும் இதுவரை துல்லியமாகத் தெரியவில்லை. தெரிந்து கொள்ள ஆவலும் இல்லை.

இன்னும் சில சமயங்களில் 'சமூக விரோத சக்திகளே' ஒன்று சேர்ந்து கொண்டு உரத்த குரலில், ''சமூக விரோதிகளை ஒழித்தே தீருவோம்'' என்று முழக்கமிடும் விநோதத்தையும் கேட்கலாம். குறிப்பிட்டுத் தாக்குவதற்கும், விமர்சிப்பதற்கும், போரிடுவதற்கும் எதுவும் இல்லாத போது எல்லா தரப்பினருக்கும் வஞ்சகமில்லாமல், தாக்குவதற்கென்றே கிடைப்பவர்கள் இந்த 'சமூக விரோத சக்திகள்!'

ஒரு சமயம் காரசாரமாக மேடையில் பேசும் ஒரு அரசியல் கட்சித் தலைவரிடம் கேட்டேன்:

''நீங்களும் சமூக விரோத சக்திகளை எதிர்த்துப் போராடுவதாகச் சொல்கிறீர்கள்! உங்களை எதிர்க்கும் இன்ன தலைவரும் அடிக்கடி சமூக விரோத சக்திகளை எதிர்த்துப் போராடுவதாகத்தான் சொல்லுகிறார். நாட்டில் ஒட்டு மொத்தமாகப் பார்த்தால், உங்களையும் உங்களைப் போன்ற மற்றக் கட்சிகளையும் தவிர வேறு யாருமில்லை.

ஆனால், இத்தனை கட்சிகளும், இத்தனை பேரும் சேர்ந்து எதிர்க்கிற அந்தச் சமூக விரோத சக்திகள்தான் யாரென்று தெரியவில்லை! நீங்களாகச் சுட்டிக்காட்டவும் மாட்டேனென் கிறீர்கள்! உண்மையில் அவர்கள் யார்?

''ஒன்று உங்கள் அத்தனை பேரிலுமே சமூக விரோத சக்திகள் ஊடுருவியிருக்க வேண்டும். அல்லது அது எங்குமே இல்லாததாக இருக்க வேண்டும்!'' என்றேன்.

என் கேள்விக்கு அவர் மிகவும் சுலபமாகப் பதிலளித்து விட்டார்.

''சுருக்கமா ஒண்ணு வச்சுக்குங்க! நம்ம எதிரிங்களை நாம குறிப்பிடற வார்த்தை அது. நம்ம கட்சி ஆளுங் களுக்கு ஒரு 'மொரேல் பூஸ்டரு'க்காகவாவது நாம அடிக்கடி இப்படிச் சொல்லியாகணும்! நமக்கு வேண்டாத வங்களை நாம திட்டறதுக்கு 'சமூக விரோத சக்திகள்'ங் கிறது ஒரு தோதான வார்த்தை; அவ்வளவுதான்.''

இவருடைய பதிலை வைத்துப் பார்த்தால் சமூக விரோத சக்திகள் அல்லாதவர் யார் என்பதைப் புரிந்து கொள்வது சிரமம்.

இன்னொரு தலைவர் கொஞ்சம் நிதானமானவர். நல்லவர். கொள்கைகளைப் பற்றி நிற்பவர். அவர் விரிவான பட்டியலே கொடுக்க முன் வந்தார்.

''சுரண்டுவோர், கள்ளச் சாராயம் காய்ச்சுவோர், கடத்தல்காரர்கள், வெறியர்கள், வன்முறையாளர்கள்'' என்று சமூக விரோத சக்திகளைச் சுட்டிக் காண்பித்தார்.

''தயவு செய்து இவர்கள் அறவே இல்லாத கட்சிகளின் பெயர்களைச் சொல்ல முடியுமா?'' என்று நான் கேட்ட போது, அவ்வளவு உற்சாகமாக அவரால் எனக்கு உடனே பதில் கூற முடியவில்லை.

ஆகவே, 'சமூக விரோத சக்திகளோடு போரிடுவது'— என்ற மேடை முழக்கமும் ஒரு நிழல் யுத்தமாகவே எனக்குத் தோன்றியது. இத்தனை நாட்களாக இத்தனை கட்சிகள் தொடர்ந்து போரிட்டும் 'சமூக விரோதிகள்' அழியாததி

லிருந்து அது நிழற் சண்டையாகத்தான் இருக்க வேண்டும் என்று புரியவில்லையா?

அரசியல் சமுதாயப் பிரமுகர்கள் மட்டுமின்றி, நமது எழுத்தாளர்கள், கலைஞர்கள், நாடகாசிரியர்கள், திரைக் கதாசிரியர்கள் முதலியோரும்; கால் நூற்றுண்டுக்கும் மேலாகச் சமூக விரோத சக்திகளை எதிர்ப்பது என்ற நிழல் யுத்தத்தைத் தொடர்ந்து நடத்திக்கொண்டுதான் வருகிறுர்கள்.

எதிரியும் சாகாமல், எதிர்ப்பவரும் தளராமல் ஒரு யுத்தம் தொடர்ந்து நடக்க முடியுமானுல் அது நிழல் யுத்தமாகத்தானே (**Shadow Boxing**) இருக்க முடியும்?

வறுமை ஒழிப்பு, மூடநம்பிக்கைகளை ஒழிப்பது, அடித் தளத்து மக்களின் வாழ்க்கை நிலை உயரப் பாடுபடுவது. பொருளாதார சமத்துவத்தை உண்டாக்குவது, ஏற்றத் தாழ்வைப் போக்குவது போன்ற மெய்யான இலட்சியங்களை யும் கூட இந்நாட்டு அரசியல்வாதிகள் தொடர்ந்து நிழல் யுத்தங்களாகவே நடத்தி வருகிறுர்கள். எதிர்க்க வேண்டியதை இனங் கண்டு குறி வைத்து உடனே எதிர்த்து அழிப்பதைவிட, அழிப்பது போல் 'பாவிப்பது' என்பது இங்கே கை வந்த கலையாகி விட்டிருப்பதுதான் காரணம்.

பாவனையும், பாசாங்கும் இருப்பதால்தான் தெருவுக்குத் தெரு மளிகைக் கடைகளைப் போல் தனித்தனிக் கட்சிகளும், கல்லாப் பெட்டிகளைப் போல் தனித் தனித் தலைவர்களும் பெருகியிருக்கிறுர்கள்.

குறிப்பிட்ட எதிரியோடு, சிரத்தையாகத் தொடங்கி நேரத்தில் முடிக்கும் போருக்குத்தான் வெற்றி, தோல்வி, முடிவு உல்லாம் உண்டு.

எதிரி யாரென்றும் தெரியாமல், சில சமயங்களில் எதிரி களே இல்லாமல், இன்ன நேரத்தில் இப்படி முடிய வேண்டும் 'என்ற சிரத்தையும், அக்கறையும் இல்லாமல் வழ வழ என்று நடக்கும் போராட்டங்கள் ஒருபோதும் முடிவதில்லை.

பல பிரச்னைகளைப் பொறுத்து நமது போராட்டங்களும், எதிர்ப்புக்களும் இன்று அப்படித்தான் இருக்கின்றன.

தமிழின் எதிரிகளை ஒழிப்பது, வறுமை ஒழிப்பு, ஏற்றத் தாழ்வுகளை ஒழிப்பது, ஜாதி வேறுபாடுகளை ஒழிப்பது, சமூக விரோதிகளை ஒழிப்பது போன்ற பலவற்றில் நம்முடைய பொது மேடைகளில் இன்னமும் நிழல் யுத்தங்கள்தான் தொடர்ந்து நடந்து கொண்டே இருக்கின்றன.

தீவிர எதிரிகள் உடனே அழிந்து போர் முடிந்து விட்டால், 'நமது கட்சி, நமது இலக்கியம், நமது எடுபிடிகள் எல்லாவற்றுக்கும் வேலை இல்லாமல் போய்விடுமே' என்ற தயக்கத்தினாலோ என்னவோ, எதிரிகளைப் பத்திரமாக விட்டு விட்டு அவர்களின் நிழல்களோடு முடிவின்றித் தொடர்ந்து போரிடும் சாகசக் கலைவன்மையை நம்மவர்கள் கற்றிருக்கிறார்கள் போலிருக்கிறது.

சற்றே தொலைவிலிருந்து காணும் அப்பாவி மக்களின் பார்வையில் இந்த நிழல் யுத்தங்களைச் சாதுரியமாகச் செய்கிற கட்சி எதுவோ, அதுவே அதிகம் ஜெயிக்கிறது. அப்படிச் செய்ய முடியாதது தோற்கிறது. சுதந்திரப் போராட்டம் முடிந்து சுதந்திரமும் பெற்றபின், கடந்த முப்பதாண்டுகளில் அரசியல் கட்சிகளின் சாமர்த்தியம் இப்படி நிழல் சண்டைகளை நீடிப்பதில்தான் இருக்கிறது இங்கே.

ஒருவேளை நிழல் யுத்தங்கள் இன்னும் சிறிது காலத்தில் இந்நாட்டு மக்களுக்குச் சலிப்பூட்டலாம். ஆனாலும் கட்சி அரசியலுக்கும், மேடைகளுக்கும், பேச்சாளர்களுக்கும் அவையில்லாமல் வேறு ஒன்றுமே செய்ய முடியாது. நிழல் யுத்தங்களையே சகல வீரதீர சாகஸமும் உள்ளே அசல் யுத்தங்களைப் போல முப்பது வருஷங்களாக விடாமல் நடத்திக் கொண்டிருக்க எவ்வளவு சாதுரியம் வேண்டும்?

இந்நாட்டின் எல்லாக் கட்சிகளுக்கும் மூல விருட்சமான காங்கிரஸ், (1948-க்குப் பின்) தொடங்கி, சிவஞான கிராமணியாரின் உள்ளங்கையகலத் தமிழரசு இயக்கம் வரை

அத்தனை கட்சிகளும் இத்தனை ஆண்டுகளில் மாற்றி மாற்றிச் செய்த பிரச்சார சாகஸங்களையும், மேடை வாக்குறுதிகளையும், பாவனைகளையும் இக்கட்டுரைத் தலைப்பைவிடப் பொருத்தமான வேறெந்தத் தலைப்பால் குறிப்பது என்பது இதை முடிக்கும் இந்தவிநாடி வரை எனக்குப் புலப்படவேயில்லை!



# 24. போலீஸும் பொதுமக்களும்

கலவரங்கள், அரசியல் ஊர்வலங்கள், கறுப்புக் கொடி ஆர்ப்பாட்டங்கள், கோஷ்டிச் சண்டைகள் இவற்றை எல்லாம் பற்றிப் பத்திரிகைகளில் படிக்கும்பொழுது, நாலைந்து போலீஸ்காரர்களும் காயமுற்று ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வருகிறார்கள் என்பதையும் சேர்த்தே இப்போதெல்லாம் படிக்க நேர்கிறது.

போலீஸ்காரர்களைத் தங்கள் எதிரிகளாகவே நினைக்கும் பொது மக்களும், பொது மக்களை எல்லாம் தங்கள் எதிரிகளாகவே நினைக்கும் போலீஸ்காரர்களும் இங்கே இருக்கிறார்கள்.

பழைய சுதந்திரப் போராட்ட காலத்துத் தேச பக்தர்களுக்கு, பிரிட்டிஷ் அரசாங்க ஏவலாட்களாக இருந்த பழைய போலீஸைப்பற்றி என்ன மனப்பான்மை இருந்ததோ அதே மனப்பான்மைதான், இன்றைய அரசியல் கட்சிகளுக்கு இன்றைய போலீஸைப் பற்றியும் இருக்கிறது.

'ஒரு போலீஸ் ஊழியன் என்பவன் யூனிஃபார்ம் அணிந்த குடிமகன். ஆனால், நாட்டின் ஒவ்வொரு குடிமகனும் பொது நலனைப் பொறுத்தவரை யூனிஃபார்ம் அணியாத போலீஸ்காரனாவான்' என்று நம் நாட்டின் தலைநகராகிய டெல்லி போலீஸ் கமிஷனர் அலுவலக முகப்பில் அழகாக ஒரு வாக்கியம் எழுதிப் போட்டிருக்கிறார்கள். படிக்க நன்றாக இருக்கிறது.

ஆனால், நடப்பு என்னவோ இதற்கு நேர்மாறாக இருந்து வருகிறது. தானும் இந்நாட்டைச் சேர்ந்த குடி மக்களில் ஒருவர் என்பது போலீஸ்காரருக்குச் சில சமயங்களில் மறந்து விடுகிறது. பொது மக்களில் சிலர் 'தடியெடுத்தவன் தண்டல்காரன்' என்ற பாணியில் சட்டத்தைத் தங்கள் கைகளில் எடுத்துக் கொண்டு விடுகிறார்கள்.

சுதந்திரத்துக்குப் பின் பல அரசியல் குழப்பங்கள், பல அரசியல் கட்சிகள், கூட்டணிகள் மாறி மாறி ஆண்ட சில மாநிலங்களில் மக்களிடம் போலீஸுக்கு இருந்த மரியாதையும், போலீஸிடம் மக்களுக்கு இருந்த மரியாதையும் படிப் படியாகச் சிதறிப் போய் விட்டன. ஜனங்களையெல்லாம் குற்றவாளிகளாகவே பாவித்துக்கொண்டுபார்க்கும் போலீஸ் காரர்களும், போலீஸ்காரர்களை எல்லாம் கொடிய விரோதி களாகவே பாவித்துக்கொண்டு நடக்கும் ஜனங்களும் இருந் தால் நிலைமை எப்படிச் சீர்ப்படும்?

ஆக மொத்தத்தில் நல்லது கெட்டது, நியாய அநியாயம் தரம் பிரித்துச் சட்டத்தையும், ஒழுங்கையும் பாதுகாக்க வேண்டிய போலீஸ், எதிலும் பட்டுக் கொள்ளாமல் பார்வையாளராக நின்று விடுவதே இன்று உத்தமம் என்று நினைக்கும்படி ஆகிவிட்டது. போலீஸ்காரர் களில் சிலரே அடி, உதை, இரத்தக் காயம் பட்டு ஆஸ்பத்திரி யில் சேர்க்கப்பட்டால் கூடப் பெரும்பாலான பொது மக்களின் இரக்கமும், அரசியல் கட்சிகளின் கருணையும் அவர் களுக்குக் கிடைப்பதில்லை. அவர்கள் மேல் இரக்கப்படுவது எதிர்க்கட்சி அரசியலுக்கு லாபம் தராதே!

சட்டம், ஒழுங்கைப் பாதுகாப்பதற்காகத் தயவு தாட்சண்யமின்றி நடவடிக்கையில் இறங்கினாலும், "போலீ ஸாரின் அட்டூழியம் மிருகத்தனமான தாக்குதல், அத்து மீறிய செயல்" என்றெல்லாம் அரசியல் கட்சிப் பேச்சாளர் களும், அரசியல் கட்சிப் பத்திரிகைகளும் சாடத் தொடங்கு கின்றன.

போலீஸ், நடவடிக்கையில் இறங்காமல் சும்மா இருந்து விட்டாலோ, 'சட்டம் ஒழுங்கைப் பாதுகாக்க வேண்டிய போலீஸ் புளியங்காய் பறிக்கவா போயிருந்தது?'—என்றெல் லாம் கண்டனக் குரல்கள் எழும்.

உரலுக்கு ஒரு பக்கம் இடி என்றால் மத்தளத்துக்கு இரண்டு பக்கமும் இடி. ஆளும் கட்சியும் சரி, எதிர்க் கட்சிகளும் சரி, எப்போது சட்டம் ஒழுங்கைப் பாதுகாக்க முயன்றதற்காகத் தங்களைக் கண்டிப்பார்கள்? எப்போது

சட்டம் ஒழுங்கைப் பாதுகாக்கத் தவறியதற்காகக் கண்டிப் பார்கள் என்பது புரியாமல் போலீஸ்காரர்களே பல சமயங் களில் திணறிப் போகிறார்கள்.

சமீபத்தில் கர்நாடக மாநிலத்தில் இந்திரா கைதானதை எதிர்த்து, மாநில அ(ர்ஸ்)ரசின் ஆசியுடன் காங்கிரஸ் குண்டர்கள் மத்திய அரசு உடைமைகளைச் சூறையாடிய போது, மாநிலப் போலீஸார் கை கட்டிச் சும்மா இருந்ததை அந்த அரசு அந்தரங்கமாகப் பாராட்டியதுபோல் பாராட்டப்படுகிற சந்தர்ப்பங்களும் இருக்கலாம். இந்த வகையில் போலீஸ் ஆளும் கட்சியின் உட்பிரிவு போலாகி விடுகிறது.

போலீஸால் முன்பு பாளையங்கோட்டையில் பேராசிரியர் தாக்கப்பட்ட போதும், கிளைவ் ஹாஸ்டலில் மாணவர்கள் போலீஸ் தரப்புக் குற்றங்களுக்குப் பதில் கூறுமல் வாய் மூடி மௌனம் சாதித்தவர்களும் இப்போது புத்தாண்டு வாழ்த் துக் கூறும் எதிர்க் கட்சியாளர் என்ற முறையில், தமிழ்நாடு முழுவதுமே சட்டம் ஒழுங்கு சீர் குலைந்து விட்டதாக அறிக்கை விடுகிற வசதியைக் கட்சி அரசியல் தருகிறது. பொது மக்கள் நலனுக்காகவும், சட்டம், ஒழுங்கைப் பாது காப்பதற்காகவும் இருக்கிற போலீஸை ஆளும் கட்சியின் கைக்கூலிப் படை போல எதிர்க் கட்சிகள் சித்திரிக்க முயல் வதும், சில சமயங்களில் சில இடங்களில் போலீஸ்காரர்களே அந்தக் குற்றச்சாட்டை மெய்ப்பிப்பது போல நடந்து கொண்டு விடுவதும் உண்டு. மிகப் பெரிய மனிதர்களும், பிரமுகர்களும், அரசியல் தலைவர்களும் போலீஸை மதித் தால்தான் மிகச் சிறிய மனிதர்களும், பொது மக்களும் மற்ற வர்களும் போலீஸை மதிப்பார்கள்.

குஜராத் தனியே பிரிக்கப்படாத பழைய பம்பாய் மாநிலத்தின் முதலமைச்சராக இருந்த போது, மொரார்ஜி தேசாயை ஒரு சர்க்கஸ் நிகழ்ச்சியைத் தொடங்கி வைப்பதற் காக அழைத்திருக்கிறார்கள். குறிப்பிட்ட நேரத்திற்குக் கால் மணி முன்னதாகவே தேசாய் அங்கே போய்விட்டார். அங்கே முகப்பில் சர்க்கஸ் உரிமையாளர் முதலியோர் வந்து

வரவேற்கக் காத்திருக்கவில்லை. கூட்டத்திலும், நெருக் கடியிலும் எளிமையாக வந்திறங்கிய தேசாயை யாரென்று கவனிக்காத காவலர், "உள்ளே போக அனுமதிச் சீட்டோ, பாஸோ, இருக்கிறதா?" என்று கேட்டு விட்டார்.

"மன்னிக்கவும். எனக்கு அனுப்பியிருந்த அழைப்புக் கடிதத்தையும், பாஸையும் மறந்து வீட்டில் வைத்து விட்டு வந்து விட்டேன். இதோ போய் எடுத்து வந்து விடுகிறேன்" என்று கூறி, மறுபடி காரில் ஏறி வீட்டுக்கு விடச் சொல்லி வீட்டில் போய் அவற்றை எடுத்துக்கொண்டு வந்தாராம் தேசாய்.

பொது மக்கள் கட்டுப்பாடாக நடந்து கொண்டால் தான் போலீஸ் கட்டுப்பாடாக இயங்குவதற்கு முடியும். பிரிட்டனில், எலிஸபெத் அரசி போக்குவரத்து விதிகளுக்கு முரணுகக் காரை ஓட்டினுல்கூடச் சாதாரண டிராஃபிக் கான்ஸ்டபிள் அரசியைத் தடுத்து நிறுத்தி அபராதம் வாங்கி விட முடியும். கான்ஸ்டபிளும் கூச மாட்டார், அரசியும் மிரட்ட மாட்டார். நான் வார்ஸாவில் இருந்தபோது, போலிஷ் கலாசார அமைச்சகம் எனக்கு அளித்திருந்த இண்டர் பிரெட்டரான 'மாரெக்பிரிஸ்கி என்பவர் ஜீப்ராக்ராஸ் இல்லாத இடத்தில் சாலையைக் கிராஸ் செய்த தற்காக, 250 ஸ்லாட்டி (நூறு ரூபாய்க்கு மேல்) அபராதம் கட்டியதை என்கண்ணுலேயே பார்த்தேன்.

விதிகளையும், சட்டங்களையும், ஒழுங்கையும் தலைவர் களிலிருந்து பொதுமக்கள் வரை அனைவரும் மதித்து நடக்கிற தேசத்தில்தான் போலீஸுக்கும் மரியாதை இருக்கும்; பொது மக்களுக்கும் மரியாதை இருக்கும். சுதந்திரத்திற்குப்பின் நம் நாட்டில் தலைவர்களும், பிரமுகர்களும், அரசியல்வாதிகளும் தங்கள் **Privilaged class** ஆக நினைத்துக்கொண்டு, எதை எப்போது மீறினுலும் தாங்கள் தண்டிக்கப்படக் கூடாதவர் கள் என்று பாவிக்க ஆரம்பித்து விட்டார்கள்.

இந்தப் பாவனையின் காரணமாகச் சட்டம், ஒழுங்கைப் பராமரிப்பதில் 'டபிள் ஸ்டாண்டர்டு' ஏற்பட்டு விட்டது. அரசியலில் ஈடுபாடுள்ள குடும்பங்கள் சம்பந்தப்பட்ட சட்ட

மீறலை, ஒழுங்கு மீறலைக் கண்டு கொள்ளாமல் இருந்து விடுவதும், யாரும் நிச்சயமாகப் பரிந்து கொண்டுவர மாட்டார்கள் என்பதுபோல், அநாதைகளைப் பொறுத்த மட்டில் மிகச் சிறிய சட்டம் ஒழுங்கு மீறலைக்கூடப் பெரிது படுத்தித் தண்டிப்பதும் போலீஸாரின் வழக்கமாகி விட்டது.

சில ஊர்களில் போலீஸ் இன்ஸ்பெக்டர் வசமே கஞ்சாப் பொட்டலம், அபினிப் பொட்டலம் எல்லாம் தயாராக இருக்கும். யாராவது ஒரு வேண்டாத ஆளை அல்லது விரோதியைப் பிடித்து உள்ளே தள்ள வேண்டுமென்றால் இந்தக் கஞ்சாவையோ, அபினியையோ அவன் வைத்திருந்ததாக எஃப். ஐ. ஆர். எழுதப்படும். கிராமங்களிலும் சிற்றூர்களிலும் இன்னும் இப்படி நடக்கிறது. கள்ளச் சாராயம், விபச்சாரம் இதிலெல்லாம் 'கண்டுகொள்ளாமல்' இருப்பதற்காக கமிஷன், மாமூல் எல்லாம் வாங்கும் போலீசார் கூட இருப்பதாகப் பேசப்படுகிறது. மாமூல் பிரச்னையிலிருந்து சில ஊர்களில் சைக்கிள் ரிக்ஷாக்காரர்களுக்கு விடுதலை கிடைத்து விட்டது. பெரும்பாலான சைக்கிள் ரிக்ஷாக்கள் சில ஊர்களில் போலீஸ்காரர்களுக்கே சொந்தமாக இருக்கிறதாம். மாமூல் தருவதாயிருந்தால் சொந்தக்காரருக்குச் சேர வேண்டிய வசூல்தான் குறையும். இதனால் ரிக்ஷாக்காரர்களுக்கு அதிக வசதி. ஒரு தொந்தரவும் இராது.

போலீஸை, ஒரு கட்சிச் சார்புள்ள சாதனம் போல் காட்ட ஆளும் கட்சிகளும் முயலக் கூடாது. எதிர்க் கட்சிகளும் அப்படிச் சித்திரிக்க முயலுவதை நிறுத்த வேண்டும்.

மனிதனைப் பயமுறுத்தியே நல்லவனாக இருக்கச் செய்ய முயலுவதை விட, அவனே விரும்பி நல்லவனாக நடந்து கொள்ளச் செய்ய வேண்டும். பிரமுகர்களும், தலைவர்களும், அரசியல்வாதிகளும் மகத்தான சட்ட மீறுதல்களைப் புரியும் போது, வாலைச் சுருட்டிக் கொண்டு சும்மா இருந்துவிட்டு அப்பாவிக் கல்லூரி ஆசிரியர், வக்கீல், டாக்டர், மாணவர்களிடம் வீருப்புக் காட்டிக் கெட்ட பெயர் சம்பாதிப்பதிலிருந்து போலீஸ்காரர்கள் இனியாவது விடுபடவேண்டும். தவறு செய்தவர் யாராயினும் தண்டிக்க முன்வர வேண்டும்.

தான் பொது மக்களின் காவலாளி என்பதைவிட, அவர்களுடைய உண்மையான நண்பன் என்ற உணர்வு போலீஸுக்கு வர வேண்டும். தங்கள் ஜம்பம் சாயாத இடத்தில் ஒடுங்கிக் கொள்வதும், ஒதுங்கிக் கொள்வதும், அப்பாவிகளிடம் புலிபோல் பாய்வதும் தவிர்க்கப்பட வேண்டும்.

தங்களைக் கண்டு மக்கள் பயப்படுகிறார்கள் என்பது போலீஸுக்குப் பெருமை இல்லை. தங்களை மக்கள் நம்புகிறார்கள் என்பதுதான் போலீஸுக்குப் பெருமை. தங்களைக் கண்டு மக்கள் மிரளுகிறார்கள் என்பது போலீஸுக்குப் பெருமை இல்லை. தங்களை மக்கள் மெய்யாக மதிக்கிறார்கள் என்பதுதான் போலீஸுக்குப் பெருமை. சட்டமும், ஒழுங்கும் பலருடைய பயங்களை நீக்குவதற்காக ஏற்பட்டவையே தவிர, பயமுறுத்துவதற்காக ஏற்பட்டவை அல்ல. போலீஸ், ஜனங்களின் நம்பிக்கையைச் சம்பாதிக்க வேண்டும். ஒன்றின்மேல் நம்பிக்கை ஏற்படாவிட்டால் அதன்மேல் மதிப்போ, மரியாதையோ வராது. பயமுறுத்தி வருகின்ற மதிப்பும், மரியாதையும் நீடிக்காது. நிலைக்காது.

ஆளும் கட்சிகள், எதிர்க்கட்சிகள் எல்லாம் சேர்ந்து அவரவர்களுடைய பங்குக்குப் போலீஸ் என்ற பொதுநல அமைப்பைச் சீரழித்து வைத்திருக்கிறார்கள். வீரியமற்றதாக்கி இருக்கிறார்கள் நம்பத் தகாததாகவும், டபிள் ஸ்டாண்டர்டு உள்ளதாகவும், மரியாதையற்றதாகவும் ஆக்கி வைத்திருக்கிறார்கள்.

முதலில் அவர்கள் திருந்தினால்தான் போலீஸ் திருந்த முடியும். ஓரிடத்தில் போலீஸ் நியாயமாக நடந்து கொள்ள முயல்வது தங்களுக்கு இடைஞ்சலாக முடியும் போலிருந்தால் கூட ஆளும் கட்சி தலையிடக் கூடாது. போலீஸ் நியாயமாக நடந்து கொள்வது தங்களுக்கு இடைஞ்சலாக இருந்தால்கூட எதிர்க் கட்சியும் தலையிடக்கூடாது.

எது மக்களுக்கு நல்லது, எது மக்களுக்குப் பாதுகாப்பு, எது மக்களுக்கு ஒழுங்கு, எது மக்களுக்கு நியாயம் என்பது தான் போலீஸுக்கு முக்கியமே தவிர, எது ஒரு கட்சி அரசியல் ஆட்சியாளர்களுக்கு மட்டும் உகந்தது என்பது முக்கியமில்லை.



# 25. தேசிய மொழிகளும் தமிழ் நாடும்!

மொழி சம்பந்தமாகத் தமிழ் நாட்டில் மட்டுமே உள்ள சில விநோதமான நிலைமைகளைக் கவனித்தால் மிகவும் ஆச்சரியமாயிருக்கும். உலகின் மற்றெல்லாப் பகுதிகளிலும் ஒருவரை ஒரு குறிப்பிட்ட மொழியில் அறிஞர் என்று முடிவு செய்வதற்கு அவர் அந்தக் குறிப்பிட்டமொழியில் எவ்வளவு தூரம் கெட்டிக்காரர் என்பதை மட்டுமே கணக்கில் எடுத்துக் கொள்வார்கள். ஆனல், தமிழ்நாட்டில் அப்படி இல்லை. ஒருவரைத் தமிழில் அறிஞர் என்று முடிவு செய்வதற்கு முன், அவருக்கு இந்தியின் மேலும் சம்ஸ்கிருதத்தின் மேலும் வெறுப்பு உண்டா என்பதும் கவனிக்கப்பட்டு, அந்த இனம் புரியாத(?) வெறுப்புக்களும் ஃப்ளஸ் பாயிண்டுகளாகக் கணக்கிடப்பட்டு எடுத்துக் கொள்ளப்படும். தமிழறிஞர் என்று முடிவு செய்வதற்குத் தமிழில் புலமையும், பற்றும் மட்டுமே போதாது. தமிழல்லாத வேறு இந்திய மொழிகளின்மேல் வெறுப்பும் வேண்டும் இங்கே. சில ஸ்பெஷல் கேஸ்களில் தமிழ்ப் புலமை இல்லாவிட்டாலும், வேற்று மொழிகளில் உள்ள வெறுப்பே கணக்கில் எடுத்துக் கொள்ளப்பட்டு, அவரைத் தமிழ் அறிஞராகக்கூட ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள் இங்கே. உண்மை. இதில் ஒரு சிறிதும் மிகையில்லை.

எங்கோ ஆறாயிரம் மைல்களுக்கு அப்பால் இருந்து வந்து பரவியிருக்கும், சந்தேகத்திற்கு இடமில்லாத அந்நிய மொழியாகிய ஆங்கிலத்தின் மேல்கூட அவ்வளவு துவேஷமும் வெறுப்பும் இங்கு பரப்பப்படவில்லை. ஆனல், சம்ஸ்கிருதத்தின் மேலும், இந்தியின் மேலும் பரப்பப்பட்டிருக்கிற துவேஷமும் வெறுப்பும் அதிகமானவை மட்டுமல்ல;

கொஞ்சம் அநாவசியமானவையும் கூட. தேசிய மொழிகளும், நம் நாட்டைச் சேர்ந்தவையுமான சம்ஸ்கிருதமும், இந்தியும் வெறுக்கத்தக்கவை என்னும் மனப்பான்மை தமிழ் நாட்டுக்கே உரிய தனிக் குணங்களில் ஒன்றே என்றுதான் எண்ணப்பட வேண்டியிருக்கிறது. இங்கு அவ்வளவு வெறுப்பு ஆங்கில மொழியின்மேல்கூட உண்டாக்கப்படவில்லை.

தங்களுக்கென்று தனித்தன்மையும் தேசிய கலாசாரப் பிணைப்பும் உள்ள வங்காளிகளிடமும் மலையாளிகளிடமும் சம்ஸ்கிருத வெறுப்போ, இந்தி வெறுப்போ இல்லாத அழுத்தமான தாய்மொழிப் பற்று இருப்பதைக் கவனிக்க வேண்டும். ஆங்கில மோகமோ, ஆங்கில வெறுப்போ கூட அவர்களிடம் இல்லை.

நல்ல ஆங்கிலத்தில் சரளமாக உரையாடுவதை இலகுவாகவும், சுகமாகவும், உல்லாசமாகவும் செய்ய முடிந்த இரண்டு மலையாளி ஐ ஏ.எஸ். ஆபீசர்கள் சந்தித்துக்கொண்டால் தங்களுக்குள் மலையாளத்தில்தான் பேசிக் கொள்வார்கள். அதே போல் இரண்டு வங்காளி அறிஞர்கள் சந்தித்துக் கொண்டால் வங்காளி மொழியில்தான் உரையாடுவார்கள். "தாழ்வு மனப்பான்மையோடு தப்புத்தப்பான ஆங்கிலத்தில் பேசிக் கொண்டிருக்கும் நாகரிகமாக உடையணிந்த இருவரை எங்கே பார்த்தாலும் அவர்கள் நிச்சயமாகத் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள்தான் என்று முடிவு செய்யலாம்', என என் நண்பர் ஒருவர் அடிக்கடி சொல்வது வழக்கம். அது பெரிதும் உண்மை என்றே படுகிறது எனக்கு.

இந்தியாவின் எல்லாத் திசைகளிலும், எல்லாப் பிரதேசங்களிலும் சமய கலாசார அந்தஸ்தைப் பெற்றுள்ள புராதனமான சம்ஸ்கிருத மொழியை 'வடமொழி' என ஒரு திசையில் மட்டுமே குறுக்கி அழைக்கும் விநோதம் தமிழ் நாட்டுக்கே உரியது. உண்மையில் சம்ஸ்கிருதம் அகில உலக மொழி. வடமொழி மட்டுமல்ல; சர்வதேச மொழிகளில் ஒன்று அது.

இந்தியாவின் பல்வேறு பிரதேசங்கள் என்னும் மடிப்புக்கள் உள்ள பெரிய தேசிய வேஷ்டிக்குச் சரிகைக் கரை போன்றது சம்ஸ்கிருத மொழி. கரையே வேஷ்டியாகி விடாது என்றாலும். கரை வேஷ்டியை அழகு படுத்துகிறது என்பதையும், சில வேளைகளில் வேஷ்டி கிழியாமல் காக்கிறது என்பதையும் மறுக்க முடியாது. உலகில் உள்ள மொழிகளில் எல்லாம் சிறந்தவையும், பல மொழிகளைப் படைக்க முடிந்த 'பொடன்ஷியாலிட்டி' உள்ளவையுமாக உலக மொழியியல் அறிஞர்கள் எண்ணுபவை மூன்றே மூன்று மொழிகள்தாம். அவை கிரீக், லத்தீன், சம்ஸ்கிருதம் என்பவையே. இந்த மூன்றில் முக்கியமானது சம்ஸ்கிருதம். இம்மூன்றில் சம்ஸ்கிருதத்தின் சாயல் உள்ளது என்று கருதப்படும் ஜெர்மானிய மொழிகளின் ஒரு பிரிவாகிய ஆங்கிலோ சாக்ஸனைத்தான் இன்றைய ஆங்கில மொழிக்கு முன் அமைப்பாகக் கொள்கிறார்கள். இந்த வகையில் சம்ஸ்கிருதம் ஆங்கிலத்திற்கு அப்பனுக்கும் அப்பனாகக் கருதப்படுகிறது. இன்று மேற்கு ஜெர்மனியில் 60-க்கும் மேற்பட்ட சமஸ்கிருத இன்ஸ்டிட்டியூட்கள் உள்ளன. உலகெங்கும்—அவை கம்யூனிஸ நாடுகளாயிருந்தாலும், ஜனநாயக நாடுகளாயிருந்தாலும்—சம்ஸ்கிருத மொழி போற்றப்படுகிறது. தமிழ்நாட்டில் மட்டும் அதன் மேல் இனம் புரியாத (ஒருவேளை தவறாக இனம் புரிந்து கொண்டும் இருக்கலாம்) வெறுப்பு பரப்பப்படுகிறது. கேரளத்தில் இஸ்லாமிய கிறிஸ்தவ சம்ஸ்கிருத அறிஞர்களையும் ஈழவரான சம்ஸ்கிருத அறிஞர்களையும் சந்திக்கலாம், நாயர்களில் கூட சம்ஸ்கிருத அறிஞர்களைச் சந்திக்கலாம்! வங்காளத்திலும் இதே நிலைமைதான்., தமிழ் நாட்டில் புரோகிதர்களைத் தவிர வேறு யாருக்கும் சம்ஸ்கிருதம் தெரிந்திராது என்ற அனுமானத்தின் காரணத்தாலேயே சமஸ்கிருதம் என்னும் பக்குவமான இலக்கிய மொழி ஒரு 'புரோகித பாஷை' யாகச் சித்திரிக்கப்பட்டு, பாமரத்தனமானதும், மௌடீகம் நிறைந்ததுமான ஒருவகைப் பிரசாரத்துக்கு ஆளாக்கப்பட்டு விட்டது. இது துரதிருஷ்ட வசமானது. அறிவாளிகள் வருத்தப்பட வேண்டியது.

இங்கு நமது தமிழில் சங்க இலக்கியங்களும், தொல்காப்பியமும் தோன்றி வளர்ந்த காலத்திலேயே அவற்றோடு சம்ஸ்கிருத மொழியும் இருந்தது. ஆனால், சம்ஸ்கிருதம் தமிழ் வளர்ச்சிக்கு இடையூறாக இருந்ததில்லை. தமிழுக்குக் கலாசாரத் தோழனாகவே இருந்திருக்கிறது. இருந்தும் அதன்மேல் வெறுப்பு. தமிழ் வளர்ச்சிக்கும், தமிழ்ப் படிப்புக்கும் இடையூறான, அரசியல் ஆதிக்கமாக இந்நாட்டில் இருந்த ஆங்கில மொழியின்மேல் காரணமற்ற மோகம் இன்னும் நீடிக்கிறது. யாரோ செய்த பாவத்துக்கு யாரோ தண்டனை அநுபவிக்கிறார்கள். இதை என்னவென்று விவரிப்பது?

தமிழில் நாடக இலக்கியம், அலங்கார இலக்கணம் ஆகிய துறைகளே சம்ஸ்கிருத மொழியின் கலாசாரத் தோழமையினால் கிடைத்தவைதான். இலக்கணம், இலக்கியம், தர்க்கம், வைத்தியம் ஆகிய துறைகளில் தனித்தனியே படித்து சிரோன்மணி பட்டம் பெறத்தக்க அளவு பரந்த நூல்களின் பெருக்கம் உள்ள சம்ஸ்கிருத மொழியை வெறுப்பதன் மூலம் என்ன லாபம் என்பதுதான் புரியவில்லை. எந்த வெறுப்பும் லாபத்தைத் தர முடியாது.

நமது தேசத்துக்குரிய தேசிய மொழிகள்மேல் வெறுப்பும், அதன் காரணமான தாய் மொழிப் பற்றும் வேண்டும் என்ற ஒரு நிலைமை இந்தியாவின் மற்றப் பிரதேசங்களில் இல்லாத ஒரு விசித்திரப் போக்கு ஆகும். சம்ஸ்கிருதம் சங்க காலத்திலும், அதையடுத்த காலங்களிலும் தமிழ் மொழிக்கும், தமிழ்ப் புலவர்களுக்கும் ஓர் 'இண்டெலக்சுவல் கம்பானியன்ஷிப்'பைத் தொடர்ந்து அளித்து வந்திருக்கிறது என்பதுதான் வரலாற்று உண்மை. அதைவெறுக்க வேண்டும் என்ற மனப்பான்மை புதிதாக 1940-க்கும் 1980-க்கும் இடைப்பட்ட காலங்களில் வளர்க்கப்பட்ட புதிய 'வேலிக்காத்தான்' ஆகும். 'வேலிக்காத்தானால்' பாதுகாப்பைவிட நஷ்டமே அதிகம்.

சம்ஸ்கிருதத்தைப்போல் 'இந்தி' தமிழுக்கு இணையான மொழி என்று நான் கூறமாட்டேன். ஆனாலும் தமிழர்களில்

பலருக்கு அந்தத் தேசிய மொழியின்மேல் இருக்கும் வெறுப்பை நான் ஒப்புக்கொள்ளவும் முடியாது. ஒவ்வொரு பிரதேசத்துக்காரனும் இன்னொரு பிரதேசத்து மொழியை வெறுப்பதன் மூலம்தான் தாய்மொழிப் பற்றைக் காட்டிக் கொள்ள முடியுமானல், உத்தரப்பிரதேசத்துக்காரர்களும் தென்னிந்திய மொழிகளை வெறுக்க ஆரம்பித்துவிடுவார்கள்.

மற்ரெரு மொழியைக் கற்பதும் கற்காமல் விடுவதும் நமது இஷ்டம் அல்லது சௌகரியத்தைப் பொறுத்தது. அதில் நிர்ப்பந்தம் கூடாதுதான். எப்படி ஆதரிப்பதில் நிர்ப்பந்தம் கூடாதோ அப்படியே வெறுப்பதிலும் நிர்ப்பந்தம் கூடாது என்பது என் கருத்து. இந்தி, சம்ஸ்கிருதத்தைக் கற்பதில் நிர்ப்பந்தம் கூடாது என்று கூறப்படும் வாதத்தை ஏற்கிற அதே சமயத்தில், அவற்றைத் திட்டமிட்டுக் கண் மூடித்தனமாக வெறுப்பதிலும் நிர்ப்பந்தம் கூடாது என்பதை இங்கே நினைவூட்ட வேண்டியது அவசியமாகிறது.

'தமில் வால்க!' என்பதுபோல் சுவரில் பிழையாக எழுதும் கண்மூடித்தனமான மொழிப்பற்ரே, 'இந்தி அரக்கி ஒழிக' என்று கோஷமிடும் வறட்டுக் குரல்களோ நாகரிகமான மொழிப்பற்று ஆக முடியாது. நமக்குப் பிடிக்காத மொழியை 'அரக்கி' 'லம்பாடி' என்று கூறும் வழக்கத்தை இன்று நாம் முன்னுதாரணமாகக் காட்டிவிடுவோமானல் நாளைக்கு நமது தாய்மொழியைப் பிடிக்காதவர்களும் இதே உதாரணத்தைக் கடைப்பிடித்து நம்மைத் திட்டத் தொடங்கிவிடக் கூடும்.

நமக்கு எதிர்த்த வீட்டிலும் பக்கத்து வீட்டிலும் இருப்பவர்களை நாம் தெரிந்து கொள்ளாமலிருக்கவும், பழக்கப்படுத்திக் கொள்ளாமலிருக்கவும் நமக்கு உரிமை உண்டு. ஆனல் தெரிந்து கொள்ளாமலும், பழகாமலுமே, அவர்களை 'அரக்கர்கள்' என்றும் 'லம்பாடிகள்' என்றும் திட்ட ஆரம்பிப்பது கடைந்தெடுத்த காட்டுமிராண்டித்தனமாகும்.

தமிழ் நாட்டிற்கு எதிலுமே மிகைப்படுத்தும் குணம் அதிகம். பிற தேசிய மொழிகளை எதிர்ப்பதிலும்கூட இந்த

மிகைப்படுத்தும் குணமே தெரிகிறது. நாம் படிக்காத அல்லது நம்மால் படிக்க முடியாத ஒரு மொழியை வெறுப்பது, தூற்றுவது, திட்டுவது என்பது ஜனநாயகத்துக்கே விரோதமானது. ஆனால் நம்பிக்கை, விசுவாசம் இவற்றிற்குப் பதிலாக சகல துறைகளிலும் வெறுப்பு, துவேஷம் இவற்றையே முதலீடு செய்து வளர்ந்த சில அரசியல் கட்சிகள் தமிழ்நாட்டில் இன்னும் அதே லேபிளில் காலந்தள்ள, மக்களை அறியாமை நிறைந்தவர்களாகவே வைத்திருக்க ஆசைப்படுகின்றன. அறிவு வளர்ந்துவிட்டால் அவர்கள் வியாபாரம் படுத்துவிடும்.

என்ன காரணம்? அறியாமை நிரம்பியிருக்கிற பகுதிகளில்தான் வெறுப்பையும் துவேஷத்தையும் பயிரிட முடியும். சில கட்சிகளின் பொருளாதாரத் திட்டம், அரசியல் கொள்கை எல்லாமே வெறுப்பும், துவேஷமும்தான் அறிவு வளர்ந்துவிட்டால் வெறுப்பும் துவேஷமும் மறைந்து போய்விடும்.

எங்கே வெறுப்பும் துவேஷமும் மறைந்து தங்கள் அரசியல் பிழைப்பு நடைபெறுமல் போய்விடுமோ என்ற பயத்தில் நன்செய் நிலங்களில்கூட அவசர அவசரமாக வேலிக்காத்தான் விதைகளைத் தூவிக் கொண்டிருக்கிறுர்கள் சிலர். மக்களுக்கு இது புரியவேண்டும். மக்கள் ஏமாறுவதைத் தவிர்க்க வேண்டும். ஏமாறுவதைப்போல் பாவம் வேறில்லை.

நமது சொந்த தேசத்தின் வேற்று மொழிகளை வெறுத்தால்தான் நம் பிரதேச மொழியை வளர்க்க முடியும் என்ற மனப்பான்மை குழந்தைத்தனமானது. பூனை கண்ணை மூடிக் கொள்வதால் மட்டுமே உலகம் இருண்டு போய்விடாது. கிணற்றுத்தவளை மனப்பான்மை ஒழிய வேண்டுமானல் கண்மூடித்தனம் போகவேண்டும். கண்மூடித்தனம் போக அறியாமை தொலைய வேண்டும்.

நமது பக்கத்து வீட்டுக்காரன் நண்பனு, எதிரியா என்று அவனேடு பழகி அறிந்து முடிவு செய்யாமல், பழகாமலே அவனை எதிரி என்றும் அரக்கன் என்றும், லம்பாடி என்றும்

யாருடைய நிர்ப்பந்த்துக்காகவோ முடிவு செய்வது அநாகரி மானது. தமிழர்களாகிய நாம் அந்த அநாகரிகத்தைத் தவிர்க்க இனியாவது முயல வேண்டும்.

ஜப்பானியர்களும், ஜெர்மானியர்களும், பிரெஞ்சுக் காரர்களும், ருஷ்யர்களும் தங்கள் தாய்மொழியை நேசிக் கிறார்கள். வேறு மொழிகளை வெறுப்பதில்லை. ஆங்கில மோகமும் அவர்களிடம் இல்லை.

நமக்கோ சம்ஸ்கிருதத்தின்மேல் காரணமற்ற வெறுப்பு; ஆங்கிலத்தின்மேல் காரணமற்ற மோகம். இந்தியின்மேல் எரிச்சல். தமிழ் மட்டுமே பூரணமாகத் தெரிந்தவன்மேல் இளக்காரம். ஆகவே, மிஞ்சுவது பிற மொழி வெறுப்பு மட்டும்தான். இந்தப் புரியாத்தனம் நமக்குப் பெருமை தருவதாக இல்லை என்பது என் கருத்து. 

# 26. மூளை வறட்சியோ! உன் மறு பெயர்தான் இமிடேஷனா?

நம் தலைமுறையில் வாழும் அல்லது முந்திய தலைமுறையில் வாழ்ந்த ஒரு பெரிய திறமைசாலியிடமிருந்து அதே துறையில் திறமைசாலியாக ஆசைப்படுகிறவர்கள் தூண்டுதலும், ஊக்கமும் பெற வேண்டிச் சிலவற்றைக் கவனிப்பதும் கடைப்பிடிப்பதும், மேற்கொள்வதும் தவறுகள் இல்லை.

தூண்டுதல் ஊக்கம் (இன்ஸ்பிரேஷன்) பெறுவது தவறில்லை. ஆனால், இமிடேஷன் செய்வது தவறு. நாய் போல், கிளி போல், பூனை போல், மிமிக்ரி செய்வது ஒரு கலை. ஒருவர் பேசுவது போல் பாடுவது போல் இன்னொருவர் சில விநாடிகள் பேசிக் காண்பிப்பதும் அப்படி அதே வகையில் ஒரு கலை. ஆனால், உண்மையாகவும், தீவிரமாகவுமே பலர் அப்படி முயலுவது 'இமிடேஷன்' ஆகிவிடுகிற அபாயம் இருக்கிறது.

கடந்த பல ஆண்டுகளாக ஒரு சொற்பொழிவாளன் என்ற முறையில் கேட்பவர்களையும், பேசுபவர்களையும் கூர்ந்து கவனித்து வந்திருக்கிறேன். பள்ளிக்கூட இலக்கிய மன்றங்களிலும், கல்லூரிகளிலும் இளம் தலைமுறையினரில் உருவாகும் பேச்சாளர்கள், நடிகர்கள், கலைஞர்களைக் கவனிக்கும் போது ஒரு விஷயம் என் மனத்தை அதிகம் பாதித்துக் கவலையளித்திருக்கிறது. பல சமயங்களில், சொற்பொழிவு கேட்டுக் கொண்டிருக்கிறோமா அல்லது ஏதாவது 'மிமிக்ரி' நிகழ்ச்சியை ரசித்துக் கொண்டிருக்கிறோமா என்ற சந்தேகம் கூட ஏற்பட்டதுண்டு.

அத்தனை பேரும் வீர பாண்டியக் கட்டபொம்மனில் சிவாஜி வீர முழக்கமிட்ட அதே குரலில், அதே பாணியில் பேசினார்கள். அல்லது ஏதாவதோர் பிரபல அரசியல் தலைவரின் பழைய, பழகிய ஒரே பாணியில் பேசினார்கள்.

ஒருவர் தலை முடி வைத்திருப்பது போல் மற்றொருவர் வைத்துக் கொள்வது, ஒரு பெண் கொண்டை போட்டுக் கொள்வது போல் மற்றொருவர் போட்டுக் கொள்வது, ஒருத்தி உடுப்பது போல் மற்றொருத்தியும் புடைவை உடுத்திக்கொள்வது இவற்றையாவது ஃபேஷன்ஸ் என்று ஒதுக்கி விடலாம். பழக்க வழக்கம், உண்பன, உடுப்பன ஆகியவற்றிலுள்ள ஒருவிதமான தன்மைகளை நியாயப்படுத்த முடியும். ஏற்கவும், ஒப்புக் கொள்ளவும்கூட முடியும்.

அறிவுத் துறையிலும், கலைத் துறையிலும் ஒரே விதமான சிந்தனை, ஒரே விதமான பாணி ஒரே விதமான அணுகு முறை, ஒரே விதமான கற்பனை என்பது மூளை வறட்சியைக் காட்டும் அடையாளங்களில் ஒன்றாகி விடும். வெகு சிலரைத் தவிர பெரும்பாலோரைப் பொறுத்தவரையில் நம்மிடையே எழுத்திலும், பேச்சிலும் நடிப்பு முதலிய கலைகளிலும் 'இமிடேஷன்' பார்த்தீனியமாகக் களை மண்டி விட்டது.

மிக மிக உயர்தரமான கலை என்பது இமிடேட் செய்கிறவனை ஏமாற்ற வேண்டும். இமிடேட் செய்கிறவனுடைய கொச்சையான கைகளுக்கு எட்டாத உயரத்திற்கு மேற்பட்டு நிற்க வேண்டும் அது. ஆனால், இந்தக் கலைஞர்களின் எண்ணிக்கை நம்மிடையே குறைவு.

மகாகவி பாரதியாரைப் போல், உத்வேகமும் உணர்ச்சி அழகும் நிறைந்த கவிதையை இன்னொருவர் பாட முடியவில்லையே என்பதுதான் பாரதியாருக்குச் சிறப்பே ஒழிய, பாரதியாரை ஆயிரம் பேர் இமிடேட் செய்துவிட முடியும் என்பது சிறப்பு ஆகாது.

காப்பி, ஈயடிச்சான் காப்பி, இமிடேஷன், இன்னாரது ஸ்கூல் ஆஃப் தாட், இன்னாரது பாணி, இன்னாரது பந்தா, பரம்பரை என்றெல்லாம் பெயர்கள் வழங்கி வருவதைக் கவனியுங்கள்.

முன்பே பலர் நடந்து பழக்கப் படுத்திப் பாதையாக்கிய தடத்தில் தான் நம்மவர்களுக்கு நடந்து வழக்கமே ஒழிய, புதிதாக நடந்து புதுப்புதுப் பாதைகளை உண்டாக்கி வழக்கமில்லை.

ஆட்டு மந்தை மனப்பான்மை ஒழிய ஒழியத்தான் இமிடேஷன் புத்தி குறையும். இமிடேஷன் மனப்பான்மையும், ஈயடிச்சான் காப்பித்தனமும் தொலைந்தால் தான் ஒரு சமூகம் அறிவுத் தரத்தில் உயர்ந்து மெருகேற முடியும்.

ஒரு திரைப்படம் ஒரு தினுசான கதையமைப்புடன் நூறு நாள் இருநூறு நாள் ஓடி வசூலில் வெற்றி கண்டு விட்டால் வந்தது ஆபத்து. அப்புறம், அதே மாதிரி இமிடேட் செய்து பத்துப் படம் எடுத்து அதன் மரியாதையைக் கெடுத்து விடுவார்கள்.

அறிவு, கலைத்துறைகளில் இப்படி மந்தநிலை, அல்லது ஈயடிச்சான் காப்பி நிலை அடிமை நாட்டில்தான் இருக்க முடியும். தமிழகம் களப்பிரர் ஆட்சியில் சிக்கியிருந்த வரலாற்றுக் காலத்திலும், இந்தியா பிரிட்டிஷ் ஆதிக்கத்தில் இருந்த காலத்திலும் இந்த இருண்ட நிலைமை இருந்திருக்கலாம். இருந்திருப்பது சாத்தியம்.

ஆனால், இன்று சுதந்திர நாட்டிலும் அறிவு, கலை வளர்ச்சித் துறைகளில் புதுக் புதுக் கற்பனைத் திறனும், சுய சிந்தனையும் பெருகவில்லை என்பது வருந்தத்தக்கது. சுய சிந்தனைக் கற்பனைத்திறன், ஒரிஜினலிட்டி, புதியன புனைதல் ஆகியவற்றுக்குச் 'சீலைப்பேன் மனப்பான்மை' முதலில் தொலைய வேண்டும்.

நான் தமிழாசிரியராக இருந்த போது மாணவர்களின் கட்டுரை நோட்டுக்களைத் (காம்போஸிஷன்) திருத்தியிருக்கிறேன். ஒரு வகுப்பில் நாற்பது பிள்ளைகள் எழுதிய கட்டுரை நோட்டுக்களையும் படித்தால் 38 கட்டுரைகள் முதல் எழுத்திலிருந்து கடைசி எழுத்து வரை கமா, புல்ஸ்டாப் உள்பட ஈயடிச்சான் காப்பியாக இருக்கும்.

அந்த நாற்பதில் அபூர்வமாகவும், அதிசயமாகவும் ஒன்று அல்லது இரண்டு பையன்களின் கட்டுரை சுயமாக எழுதப்பட்டதாகவும், நன்றாக எழுதப்பட்டதாகவும் இருக்கும். ஈயடிச்சான் காப்பிக்காரன் நூற்றுக்கு நூறு

சதவிகிதமும் சரியாகவும் நன்ருகவும் எழுதியிருந்தால் கூடத் தப்புக்களோடு சுயமாக எழுதியவனே எனக்கு மகிழ்ச்சி தரக்கூடியவஞக இருப்பான்.

மிகச் சிறிய முயலைச் சரியாகக் குறி வைத்து அம்பு எய்து வீழ்த்தியவனை விட மிகப் பெரிய யானையை நோக்கிக் குறி வைத்து எய்ய முயன்று குறி தவறித் தோற்றவனையே நான் சிறந்தவஞகக் கருதுவேன்.

ஒருவன் தவறு செய்தால் கூடச் சுயமான முயற்சியின் போது அது நேர்ந்திருக்க வேண்டும். தவறு செய்யாமல் இமிடேட் செய்கிறவனைக் காட்டிலும், ஒரிஜினலான முயற்சியில் தவறு செய்து விடுகிறவனைக் கொண்டாடலாம் என்பது என் கருத்து.

அறிவு, கலைத் துறைகளில் அரைத்த மாவையே அரைத்துக் கொண்டிருக்கிற மனப்பான்மையை ஒழித்தாலொழிய மூளை வறட்சியை ஒழிக்க முடியாது.

மூளை வறட்சி இருக்கிறவரை 'இமிடேஷன்' குணம் தொலையப் போவதில்லை. மூளை வறட்சியின் மறு பெயர்தான் இமிடேஷன். தங்கம் எட்டாத விலையில் விற்கிற இந்நாளில் நகைகளில் வேண்டுமாஞல் 'இமிடேஷன்' இருந்து தொலைத்து விட்டுப் போகட்டும்.

அறிவு, கலை, இலக்கியத்துறைகளில் இமிடேஷன் கேவலமானது மட்டுமில்லை. மிக மிக அவமானகரமானது என்பதை உணரவேண்டும். 

# 27. மக்கள் என்னும் அப்பாவிகள்

மக்கள் தீர்ப்பு, மக்கள் விருப்பம், மக்கள் ஆதரவு என்றெல்லாம் சில வார்த்தைச் சேர்க்கைகளை அரசியல்வாதிகளும், சினிமா தயாரிப்பாளர்களும், பத்திரிகை நடத்துகிறவர்களும், வியாபாரிகளும் அடிக்கடி இங்கே சொல்லிவருகிறார்கள். மக்கள் என்ற தனித்தனி விலாசத்தைச் சுட்டாத ஒரு தொகுதியான பெயருக்கு விலாசம் எதுவும் கிடையாது. அவர்கள் எங்கெங்கோ இருக்கிறார்கள். ஆகவே, அவர்களைப் போய் விசாரிக்க முடியாது. பெயர் உள்ள, வீடு வாசல் உள்ள தனித்தனி மனிதர்களுக்குத்தான் விலாசம் உண்டு. அவர்களை விசாரிக்கவும், சந்திக்கவும், விவாதிக்கவும் வாய்ப்பு உண்டு.

'நீங்கள் இப்படித்தான் விரும்புகிறீர்களா? இதுதான் உங்கள் தீர்ப்பா?இதுதான் உங்கள் ஆதரவா!' என்று தனித் தனியே நேரில் போய்க் கேட்க முடியாத தந்திரமான வார்த்தைப் பிரயோகம் 'மக்கள்'. அப்படியே நீங்கள் போய்ச் சிலரை விசாரித்து, 'இது எங்கள் விருப்பமில்லை. நாங்கள் இப்படித் தீர்ப்பளிக்கவில்லை. எங்கள் ஆதரவு இதற்குக் கிடையாது' என்று அந்தச் சிலர் கூறினாலும், எஞ்சியுள்ள பலர் தலையில், மக்கள் விருப்பம் என்றபழியைப் போட்டுவிடலாம். 'மக்கள்' என்பது நம் நாட்டு அரசியல், சினிமா, பத்திரிகை, வியாபார உலகத்துக்குக் கிடைத்திருக்கும் மிக மிகச் சௌகரியமான, வளைந்து கொடுக்கக் கூடிய ஒரு வார்த்தை. அதைப்போல் பிளெக்ஸிபிலான ஜவ்வு மிட்டாய் வார்த்தை வேறொன்று கிடைப்பதரிது.

அந்த வார்த்தை கடந்த காலத்திலும் பலமுறை 'பிளாக்மெயில்' செய்யப்பட்டிருக்கிறது. நிகழ்காலத்தில் அபரிமிதமாகப் 'பிளாக்மெயில்' செய்யப்படுகிறது. எதிர்

காலத்திலும் அது செலாவணியாவதற்கு இந்த இரண்டுங் கெட்டான் தேசத்தில் நிறைய 'ஸ்கோப்' இருக்கிறது. செலாவணி செய்யவும் நம்மவர்களுக்குச் சாமர்த்தியம் இருக்கும்.

இங்கே சில அரசியல் கட்சிகள் தங்களைச் சார்ந்திருப்பவர்கள் நடத்தும் போராட்டங்கள், ஊர்வலங்கள், எழுதும் எழுத்துக்கள் ஆகியவற்றை மட்டும் மக்கள் இயக்கம், மக்கள் இலக்கியம், மக்கள் புரட்சி என்று தனிப் பெயர்கள் கொடுத்துச் சொல்லிக் கொள்கிறார்கள். அப்படியானால் அந்த அரசியல் கட்சிகளைச் சாராதவர்கள் எல்லாம் மக்களே இல்லையா என்ற கேள்வி எழுகிறது.

'கோடிக்கணக்கான மக்களின் தலைவியாகிய என்னைக் கேவலம் ஒரு நியாயாதிபதியோ, நீதி மன்றமோ முடிவு செய்வது இயலாத காரியம்' என்று நீதி மன்றங்களுக்கு எதிராகக் கூலிப்பட்டாளத்தை ஊர்வலம் விட்ட தலைவர்கள் உள்ள நாடு நம்முடையது. 'ஜனங்களுக்கு இதுதான் சார் பிடிக்கும்! வேற வழியில்லை. இப்படி நடத்தினால்தான் விற்கும்' என்று 'வல்கார்டியை' நியாயப்படுத்த ஜனங்கள் பெயரை பிளாக்மெயில் செய்யும் பத்திரிகைக்காரர்களும் இங்கேதான் இருக்கிறார்கள். அவர்கள் ஜனங்களுக்கு நல்லது பிடிக்காது—பிடிக்கக்கூடாது எனக் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறார்கள்.

''டிங்கிரி டிங்காலே, டொங்கிரி டொங்காலே, ஜல் ஜக்கா பல் பலே' என்பதுபோல் அர்த்தமில்லாத சத்தத்தைச் சங்கீதமென்று சொல்லிப் புகுத்தி, 'என்ன சார் பண்றது? மக்களுக்கு இப்படித்தான் பிடிக்கும்' என்று மக்களை 'பிளாக்மெயில்' செய்யும் சினிமாத் தயாரிப்பாளர்களும் இருக்கிறார்கள். தங்களை பிளாக்மெயில் செய்கிறார்களே எனக் கோபம்கூட வராத நிரந்தர சாத்வீகக் குணமுள்ளவர்கள் நம்மவர்கள்.

'மக்களுக்கு நல்லது பிடிக்காது'—என்பது இவர்கள் உதட்டளவில் கூறும் வார்த்தையே தவிர 'எங்கே நல்லது பிடித்துவிடுமோ?' என்பதுதான் இவர்கள் மனத்தளவில்

உள்ள பயமும், பதற்றமும். அந்தப் பயத்திலும் பதற்றத் திலுமே இவர்கள் செயல்படுகிருர்கள்.

'கன்ஸ்யூமர் ரெஸிஸ்ட்டன்ஸ்' என்னும் விழிப்பு உணர்ச்சியோடு மக்களிடம் தரக் குறைவைத் தட்டிக் கேட்கும் குணமும் வளராத வரை நம் நாட்டு மக்களை அரசியல்வாதி, சினிமாத் தயாரிப்பாளர், பத்திரிகைக்காரர் கள் யார் வேண்டுமானுலும், எப்படி வேண்டுமானுலும், எதில் வேண்டுமானுலும் பிளாக்மெயில் செய்துகொண்டு தான் இருப்பார்கள். சங்கராச்சாரியாரை ஒரு வாரப்பத்திரி கைக்கு ஆசிரியராக நியமித்தால்கூட, எங்கிருந்தாவது கை யெழுத்துப் போடத் தெரியாத, எழுதப் படிக்கத் தெரியாத ஒரு 'காட்டுமிராண்டிப் புத்தூர்' ஏஜெண்டு 'ஜெய் மாலினியை ஏன் அட்டையில் போடவில்லை' என்றுதான் கேட்டுக் கொண்டிருக்கக் கூடும். இது நம் நாட்டின் சாபக் கேடு. படிப்பு வளர்வதாகப் பள்ளி கல்லூரிகளின் எண் ணிக்கையைக் காட்டி விவரம் சொல்லுகிருர்கள். இந்த வருடம் எத்தனை லட்சம் பேருக்குச் 'சர்டிபிகேட்' அல்லது டிகிரி கொடுத்துவிட்டோம் என்று புள்ளி விபரம் தருகிருர் கள். எதற்கு சர்டிபிகேட் கொடுத்தார்கள்? அறிவுக்கா, அறியாமைக்கா, வளர்ச்சிக்கா, தளர்ச்சிக்கா, நாகரிகத் துக்கா, காட்டுமிராண்டித்தனத்துக்கா? பக்குவத்திற்கா? சிறுபிள்ளை தனத்துக்கா? எதற்கென்றுதான் புரியவில்லை நமக்கு.

தனித்தனியாக விசாரித்தால் ஒவ்வொரு மனிதனும் தீமையின்மேல் தனக்குள்ள வெறுப்பை உமிழ்கிருன். "'இதெல்லாம் பிடிக்கலீங்க... ஆனு ஏதோ நிறுத்த முடியாமே பழக்கதோஷத்திலே வாங்கிக்கிட்டிருக்கேன்'' என்று பதில் வருகிறது. இதுதான் இந்திய மனப்பான்மை. ஆனுல், இதே பழக்கதோஷ இந்தியன் பலசரக்குக் கடைக்குப்போய் புளி கேட்டு, அது இல்லை என்பதற்காக முதல் நாள் வாங்கிப் பழகிய புகையிலையையோ, சிகரெட் டையோ வாங்கிவிட்டுப் புளியை மறந்துவிடுவதில்லை. புளி

கிடைக்காவிடில் திரும்பிவந்து கிடைக்குமிடத்தைத் தேடிப் போய் அதை வாங்குகிறான்.

மனிதர்கள் தனித்தனியாக நல்லவர்களாக இருக்கிறார்கள். தனித்தனியாக அவர்களை நல்லவர்களாக வைத்திருக்க முடியும் போலிருக்கிறது. 'மக்கள்', 'ஜனங்கள்' என்றமைதான வார்த்தைக்குள் மந்தையாக அவர்களை அடைக்கும்போதே அரசியல், சினிமா, பத்திரிகைக்காரர்கள் அவர்களது தனித்தன்மையை நல்லது கெட்டது பிரித்துணரும் பகுத்தறிவை, அந்தப் பெருங்கூட்டத்து மந்தையில் அவர்களிடமிருந்து நைஸாக 'பிக்பாக்கெட்' செய்துவிடுகிறார்கள்.

'மக்களுக்குப் பிடிக்கும்—பிடிக்கிறது ஆகவே செய்கிறேன்' என்று சொல்லிக்கொண்டே தனக்குத் தெரிந்ததை —தனக்குப் பிடித்ததைச் செய்யும் பாசாங்குக்காரர்களின் காலம் நடக்கிறது. தனக்குத் தெரிந்த சுமார் ரக விஷயங்களை மக்களுக்குப் பிடித்ததாக லேபிள் ஒட்டி விற்க முயல்வதும், தனக்குத் தெரியாத முதல் ரக விஷயங்களைப் 'பத்தாம் பசலிச் சரக்கு' எனப் பிரச்சாரம் செய்வதும் பத்திரிகை, சினிமா, கல்வி எல்லாத் துறைகளிலும் வந்து கொண்டிருக்கிறது. முதலில் அரசியலில் தொடங்கிய இந்தப் பெரிய நோய் இப்போது எல்லாப் பிரிவுகளுக்கும் பரவிவருகிறது. எல்லாப் பிரிவுகளிலும் ஏற்கெனவே நாற்காலிகளில் அமர்ந்திருக்கும் நாலாந்தரமான நபர்கள், முதல்தரமான அறிவாளிகள் அந்தப் பக்கம் வந்துவிடக் கூடாதே என்று முன் ஜாக்கிரதையாகப் பயப்பட்டுப் பதறுகிறார்கள். அறிவு போய் இருள் சூழ்ந்துவிடுமோ என்று பயப்படுகிறவர்களை விட அறியாமை இருள்போய் புத்தியின் ஒளி வந்துவிடுமோ என்று பயப்படுகிறவர்களே இங்கு அதிகம் இருக்கிறார்கள் எங்கும் எதிலும் இருக்கிறார்கள்.

ஆனால் இவர்கள் அனைவரும்தான் உண்மையான கோழைகள். தங்களை முன் வைத்து, "இது என் விருப்பம். ஆகவே இப்படிச் செய்கிறேன்" என்று சொல்லத் துப்பும், துணிவும் இல்லாதவர்கள், 'மக்கள் விருப்பம்' என்று தங்கள்

சுயநலம் சார்ந்த பயத்தை மக்கள் தலையில் கட்டி ஏமாற்றுகிற மோசடிக்காரர்கள். செய்கிற தவறுகளைத் தன்னோடு அடையாளப்படுத்திக் கொண்டு தைரியமாகச் செய்யும் வீரம் இவர்களுக்குக் கிடையாது. 'மக்கள் விருப்பம்' என்ற முகமூடி இவர்களுக்கு எப்போதும் வேண்டும். அந்த முகமூடி இல்லாவிட்டால் இவர்களால் தரக்குறைவான எதையும் செய்ய முடியாமல் ஏதோ இவர்களைத் தடுக்கும். எதனாலோ இவர்கள் தயங்குவார்கள்.

இவர்களை விட மற்றவர்கள் என்ன நினைப்பார்கள் என்று கவலையோ, பயமோ இல்லாமல் நடுத் தெருவில் பிறந்த மேனிக்கு நிற்கும் சில பைத்தியங்கள்—மன நோயாளிகள், சுய ப்ரக்ஞையில்லாத புத்தி ஸ்வாதீனமிழந்த கேஸ்கள்—எவ்வளவோ தேவலை. ஏனெனில் அம்மாதிரி சித்த ஸ்வாதீனமில்லாத நிலையில் கூட அதுகள், "மக்கள் விருப்பம் இது! அதனால்தான் நடுத் தெருவில் இப்படி நிற்கிறேன்" என்பதாக ஒருபோதும் கூறுவது கிடையாது. இந்த 'மக்கள் விருப்பம்' என்ற முகமூடியே 'சர்வரோக சஞ்சீவி' ஆகிவிடுமானால் குழந்தையைக் கொன்ற கொலைகாரன் ஒருவன் கூடத் தனக்கு வேண்டிய இரண்டாயிரம் பேர்களை கோர்ட் வாசலுக்கு ஊர்வலம் வரச் சொல்லி—'மக்கள் ஆதரவு எனக்கு இருக்கிறது. நான் செய்த கொலைக்கும் இருக்கிறது'-என்று முழங்கிவிட்டு குற்றவாளிக் கூண்டை விட்டு வெளியேறி ஊர்வலத்திற்கு நடுவே போய் மாலைப் போட்டுக் கொள்ளலாம். பாராட்டு மடல்களை வாசிக்கச் சொல்லி வாங்கிக் கொள்ளலாம்.

ஜலதோஷம் வந்து தடுமம் பிடித்தவனுடைய மூக்கில் வாசனைகள் தெரியாதது போல, மக்களை நிரந்தர ஜலதோஷத்தில் வைத்திருக்க வேண்டும் என்பது இந்தக் கோழைகளின் ஆசை. நல்லது, கெட்டது பிரித்துணரும் அறிவு உணர்ச்சியைக் காயடித்து விட வேண்டும் என்பது இந்தக் குற்றவாளிகளின் ஆசை. இப்படிச் செய்ய வேண்டும் என்ற ஆசைக்கு முதற் காரணம் சுயநலம். சுயநலம் பயத்தை உண்டாக்கும். பயம் தற்காப்பு உணர்வை

உண்டாக்கும். பிறரைப் பாதுகாக்கவே அவதாரம் செய் தாற் போன்ற பாசாங்கைச் செய்து கொண்டு தன்னை மட்டுமே பாதுகாத்துக் கொள்ளும் அற்புதமான கலைத் திறமையை முதலில் இந்நாட்டு அரசியல் வாதிகள் கண்டு பிடித்தார்கள். இப்போது அந்த 'அபூர்வமான விஞ்ஞான விவேக சாதனையானது' சினிமாத் தயாரிப்பாளர்கள், பத்திரிகை நடத்துபவர்கள், வியாபாரிகள், பிரசங்கிகள், பிரமுகர்கள் அனைவருக்கும் சகல ரோக நிவாரணமாகப் பயன் பட்டு வருகிறது. பயம், இன்ஃபீரியாரிட்டி காம்ப்ளெக்ஸ் ஆகியவை காரணமாக ஏற்படும் சுயநலத் தற்காப்பு உணர்வு எப்போதும் தவறுகளைப் பரவலாக்கி நியாயப்படுத்தவும், விஸ்தரிக்கவுமே தூண்டும். தவறுகளைத் தவிர்க்கத் தூண்டாது.

''நியாயம், சத்தியம், தரம், ஒழுக்கம், பக்தி, பணிவு, இதெல்லாம் இனிமே இந்த நாட்டிலே போணியாகாது சார்! காலத்துக்குத் தகுந்த மாதிரிப் போகணும். அதுதான் இன்னிக்கு எடுபடும்'' என்று ஏதோ 1979-ம் வருஷத்துடன் நியாயம், தர்மம், ஒழுங்கு, தரம், பக்தி, பணிவு, கட்டுப் பாடு, சத்தியம் இவற்றுக்கெல்லாம் யாரோ உடனே நம் நாட்டில் தடை விதித்து அவசரச் சட்டம் கொண்டு வந்து நிறுத்தி விட்டாற் போன்ற பாணியில் பேசுவது முதல் நம்பர் காலித்தனங்களில் சேரும் என்பதை மக்கள் உணர வேண்டும். இங்கே மக்கள் என்பதை அண்டர்லைன் செய்து கொண்டு படியுங்கள். அப்போதுதான் சரியான அர்த்தம் கிடைக்க முடியும்.

ஒரு வேண்டாத நாயை அடித்துக் கொல்லுவதற்கு முன் "வெறி நாய்' என்று அதை 'பிராண்ட்' செய்து விட்டு "அப்புறம் அடித்துக் கொல்லு'-என்பார்கள். அது போல் மக்களை ஏமாற்றி மோசடி செய்வதையே கலையாகப் பயின்ற வர்கள், 'மக்கள் விருப்பம்', 'மக்கள் தீர்ப்பு'-'மக்கள் ஆதரவு' 'மக்கள் என் பக்கம்'-என்று சொல்லியே, மக்களை ஏய்த்துப் பிழைக்க முயல்வது வேடிக்கையிலும் வேடிக்கை தான்.

''மக்கள் பிற்போக்கு வாதிகளை ஆதரிக்க மாட்டார்கள்.''

''மக்கள் வகுப்பு வாதிகளை அடையாளங் கண்டு கொள்ளும் காலம் வந்து விட்டது.''

''மக்கள் மத்தியில் நிலையான ஆட்சியை நாங்கள் தான் அமைக்க முடியும் என்பதை மக்களே உணரத் தலைப்பட்டு விட்டார்கள்''—

என்றெல்லாம் சில அரசியல் வாதிகள் இப்போதே தேர்தலுக்காக மக்களைப் 'பிளாக் மெயில்' செய்யத் தொடங்கி விட்டார்கள். பிறர் ஒரு புறமிருக்க, மக்கள் தங்களை எந்தப் போக்கு வாதி-எனச் சொல்லுவார்கள் என்பது பற்றி இவர்கள் ஒரு நாளும் பேச மாட்டார்கள். தாங்கள் நினைப்பதை எல்லாம் மக்கள் நினைப்பதாகப் பேசியே பழக்கப்பட்டவர்கள் இவர்கள். மக்கள் என்ன நினைக்கிறார்கள் என்பதைக் கண்டு சொல்லும் 'தாட்ரீடிங்குக்கு' இவர்கள் தான் ஸோல் ஏஜென்ஸியா என்ன?

ஜன்னி கண்டு சாகக் கிடக்கும் நோயாளிக்கு என்ன டயட், என்ன சிகிச்சை, என்ன மருந்து என்பதை எல்லாம் டாக்டர்தான் பொறுப்போடு முடிவு செய்து: அளித்து, நோயைக் கொன்று நோயாளியைக் காப்பாற்ற வேண்டுமே ஒழிய 'மக்கள் விருப்பம்'—என்ற பாணியில் நோயாளி விரும்புகிறான் என்பதற்காக ஜன்னி கண்ட நிலையில் ஐஸ் கிரீம், புரூட் சால்ட், பீச்மெலபா, அரை டஜன் மசால் தோசை, கால் டஜன் வடை, எல்லாம் அவனுக்குச் சாப்பிடக்கொடுத்து பத்திரமாக நோயைக் காப்பாற்றி விட்டு நோயாளியைக் கொன்று விடக்கூடாது. வைத்தியத்தில் முக்கியமான அம்சம், ''அழிக்கப்பட வேண்டியது எது? காப்பாற்றப்பட வேண்டியது எது?''-என்ற கேள்விகள் தான். நோய் அழிக்கப்பட வேண்டும். நோயாளி காப்பாற்றப்பட-அல்லது மீட்கப்பட வேண்டும். அதுதான் மிக மிக முக்கியமான இலட்சியம்.

ஆனால் துரதிருஷ்டவசமாக நமது அரசியல், சினிமா, பத்திரிகைத் துறைகளில் நோய்களைப் பத்திரமாகக் காப்

பாற்றிவிட்டு, அதைப் பாதுகாப்பாக நியாயப்படுத்த மக்கள் விருப்பம் என்ற லேபிளையும் அதன் மேல் ஒட்டி விட்டு, நோயாளிகளைத் திட்டமிட்டு அழித்துக்கொண்டிருக்கிறோமோ என்று சந்தேகம் வருகிறது எனக்கு. இப்படி ஒரு சந்தேகம் உங்களுக்கு எப்போதாவது வருவதுண்டா? ★

# 28 உபசார வார்த்தைகள்!

கடந்த இருபது வருஷங்களுக்கும் மேலாகத் தமிழில் மேடைப் பேச்சு, சொற்பொழிவு, அல்லது பிரசங்கம் பிரமாதமாக வளர்ந்திருப்பதாகச் சொல்லுகிறார்கள். அதை, அப்படி வளர்த்து விட்ட பெருமை தங்களையே சேரும் எனப் பெருமை கொண்டாடி மகிழவும் சிலர் தயாராயிருக்கிறார்கள். செயல், தொண்டு, தியாகம், உழைப்பு இவற்றை வளர்த்தவர்கள் எல்லாம் விபரம் தெரியாத பைத்தியக்காரர்களோ என்று நினைக்கும் அளவுக்குப் பேச்சை வளர்த்தவர்கள்-சற்று அதிகமாகவே மார் தட்டிக் கொள்கிறார்கள்.

மேடைப் பேச்சு எந்த இலட்சணத்தில் வளர்ந்திருக்கிறது என்று கொஞ்சம் பார்க்கலாம். நம்மவர்கள் கையில் எந்த அபூர்வமான விஷயத்தைக் கொடுத்தாலும், அதை மிக விரைவில் **formal** ஆகவும், உப்புசப்பில்லாமலும் பண்ணிவிட்டுத்தான் மறுவேலை பார்ப்பார்கள். அறிந்தோ அறியாமலோ அதை ஒரு சடங்காகவும், சம்பிரதாயமாகவும் பண்ணி விடுவதில் அபாயகரமானதும், தாறுமாறானதுமான ஒரு குரூர நிபுணத்துவம் நம்மவர்களுக்கு உண்டு.

நமது இந்த குரூர நிபுணத்துவத்தில் இருந்து பேச்சும் தப்பி விடவில்லை. தேவைக்கு அதிகமான சம்பிரதாயச் சொல்லலங்காரங்களும், உபசார வார்த்தைகளும் மலிந்து பேச்சுக்கள் சாரமற்றவை ஆகி வருகின்றன.

ஒரு படி அரிசியை வேக வைத்துச் செய்த ஒரு பொங்கலில் இருநூறு கிராம் முந்திரிப் பருப்பை வறுத்துக் கலந்தால் ருசியாகவும், பொருத்தமாகவும் இருக்கும். மாறாக இருநூறு கிராம் அரிசியை வேக வைத்துவிட்டு ஒரு படி முந்திரிப் பருப்பை வறுத்துக் கலந்தால் எப்படி இருக்கும். பல தமிழ்ச் சொற்பொழிவுகள் இந்த இரண்டாவது ரகத்

யைச் சேர்ந்தவையாகவே தோன்றுகின்றன. பிரசங்கத்துக்கு எடுத்துக் கொண்ட பிரச்னை, எதற்காக மேடையேறி நிற்கிறோம் என்ற பிரக்ஞை இவற்றைவிட, எப்படிச் சம்பிர தாயமாகவும், உபசாரமாகவும் தொடங்க வேண்டும்; எவ்வாறு சம்பிரதாயமாகவும், உபசாரமாகவும் முடிக்க வேண்டும் என்பதிலேயே அதிகக் கவனம் செலுத்துகிறார் கள். பொய், புனைந்துரை, மிகைப்படுத்தல், திரித்துச் சொல்லுதல் இவற்றின் விகிதாசாரம் நாளுக்கு நாள் அதிக மாகி வருகிறது.

நமது ரூபாய் 'டீ வேல்யூ' ஆகியிருப்பதை விட அதிக மாகச் சொற்கள்—அர்த்தத்தில் டீ வேல்யூ ஆவதைப் பிரசங்கங்களில் நீங்கள் தாராளமாகவே பார்க்கலாம்.

சமையற்காரர் பிடி துணியாகப் பயன்படுத்தும் துண்டு அளவுக்குச் சிறிதான ஒரு கைத்தறிக் குட்டையை எடுத்துக் கொண்டு, ''அண்ணன் அவர்களுக்கு இந்தக் கைத்தறி யாடையைப் பொன்னாடையாகப் போர்த்துகிறேன்'' என்று உபசாரமாகச் சொல்வார்கள். ஒரு சாதாரண பூமாலையைக் கையிலெடுத்துக் கொண்டு, மைக்கைக் கடித்து முழுங்கப் போவதுபோல் அதனருகில் நெருங்கி நின்று கொண்டு, ''இந்த மலர் மாலையை அண்ணனுக்கு மாணிக்க மாலையாகச் சூடுகிறேன்'' என்பார்கள். மலர், மாணிக்கம், பொன் இதற்கெல்லாம் அர்த்தமே கிடையாது.

கைத்தறி துண்டைக் கைத்தறி துண்டாகவே கருதிப் போர்த்தினால் என்ன கேடு வந்தது? மலர் மாலையை மலர் மாலையாகவே கருதிச் சூடினால் என்ன குடி முழுகிவிடப் போகிறது? அவற்றை ஏன் மற்றவைகளைப்போல் பாவித்துக் கொண்டு சூட வேண்டும்? நிஜமாகவே ஒரு மாணிக்க மாலையை எடுத்துக் கொண்டு வந்து, ''இந்த மாணிக்க மாலையை மலர் மாலையாகக் கருதி அண்ணனுக்குச் சூட்டு கிறேன்'' என்று யாராவது, அதிர்ச்சியளிக்கக் கூடிய விதத்தில் சம்பிரதாயத்தை மாற்ற மாட்டார்களா என்று எதிர்பார்த்துச் சலித்துப் போய் விட்டது எனக்கு.

கூட்டத்தில் அமர்ந்திருப்பவர்களைவிட அதிகமான எண்ணிக்கையுள்ள பேச்சாளர்கள் மேடையில் அமர்ந்திருப்பதும் தலைவர் முதல், நன்றி கூறுகிறவர் வரை பேசுகிற ஒவ்வொரு வரும் தங்களைத் தவிர மேடையில் உள்ள மற்றவர்களின் பெயரை ஒன்று விடாமல் சொல்லி விளித்து விட்டுத்தான் பேச்சைத் தொடங்க வேண்டும் என்பதும் உபசார வழக்கு ஆகி வருகிறது. 'தலைவர் அவர்களே, நண்பர்களே' என்பது போல் நாகரிகமாகவும், நாசூக்காகவும் அதைச் செய்தால் பல தர்ம சங்கடங்களைத் தவிர்க்கலாம். பெயர்களை மறந்து விடுவது, சிலரை மட்டும் சொல்லாமல் விட்டுவிடுவது, சொல்லாமல் விட்டுப்போன அந்தச் சிலருடைய மனத்தாங்கல்கள், இவை எல்லாம் ஏற்படாமலிருக்க வேண்டுமாயின் ஆங்கிலத்தில் இருப்பதுபோல் 'மிஸ்டர் சேர்மன் அண்ட் ஃபிரண்ட்ஸ்' என்று அழைக்கத் தொடங்குவதே நாகரிகமாக அமையும். ஆனால், நாம்தான் எல்லா விஷயங்களிலும் முன் நோக்கிப் போவதற்குப் பதில் 'ரிவர்ஸில்' போவதையே நாகரிகமாகக் கருதத் தொடங்கி விட்டோமே? காட்டு மிராண்டித்தனத்திலிருந்து நாகரிகத்தை நோக்கிப் போகிறோமா, அல்லது நாகரிகத்தைவிட்டுவிட்டுப் பின் நோக்கி நகர்கிறோமா என்பதே பலவேளைகளில் புரியவில்லை.

"உங்கள் பொன்னார் பாத கமலங்களில் வீழ்ந்து வேண்டி விரும்பிக் கேட்டுக் கொள்கிறேன்' என்பதுபோல் ஒரு வாக்கியம் அடிக்கடி தேர்தல் கூட்டங்களில் காதில் விழும். அனேகமாக இந்த வாக்கியத்திலுள்ள அத்தனை சொற்களுக்குமே ஆழ்ந்த அர்த்தம் கிடையாது. வோட்டு வாங்கி முடிக்கிற வரை வாக்காளர்களிடம் காட்டப்படுகிற பணிவு என்பது, "காரியம் ஆகிறவரை காலைப்பிடி' என்பது போன்ற விவகாரம்தான். தமிழ்நாட்டு அரசியலைப் பொறுத்த வரையில், உபசார வார்த்தைகள் சம்பிரதாயத் தொடர்கள், சொல் அலங்கார ஜபர்தஸ்து வகையறுக்களைப் பயன்படுத்தாமலே மனதில் பட்டதை அதற்கென்றே இருக்கும் வார்த்தைகளால் அப்பட்டமாகவும், யதார்த்த

மாகவும் பேசியவர்கள் மூன்று பேர். அவர்கள் பேச்சில் உபசார வார்த்தைகள் அநேகமாக இராது. வார்த்தை களோ, அர்த்தமோ 'டபேல்யூ' ஆகாது. ராஜாஜி, காமராஜ், பெரியார்—இந்த மூன்று பேருடைய பேச்சும் இயல்பானவை, சகஜமானவை, யதார்த்தமானவை. கூட்டத்தையும், மக்களையும் கவர முயலும் 'குரூர நிபுணத் துவம்' எதையும் இந்த முதியவர்கள் கடைப் பிடித்ததில்லை. பட்டிக் காட்டானுக்கும் எளிதில் புரியக்கூடிய வார்த்தை களைத்தான் இவர்கள் பேசினார்கள். பேசத் தேர்ந்தெடுத் தார்கள்.

ஆனால், இதற்கு நேர்மாறாக, முந்திரிப் பருப்பையே பொங்கலாக்குவது போல் ஒரே உபசார வார்த்தைகள், வர்ணனைகள், ஜாலங்கள், சவால்கள், சவடால்கள், சொற் புதர்கள், வார்த்தைக் காடுகள், (அர்த்தமே காணாமல் போகிற அளவு புதரான காடுகள்) ஆகியவற்றாலேயே முழுப் பிரசங்கத்தையுமே அமைத்து மக்களைத் திணற அடிக்கும் பிரசங்கங்கள் பல. பெரும்பாலான பேச்சாளர்களை இதற்கு உதாரணமாகக் கூற முடியும்.

99 தோட்டாக்களைக் குறி தவறி வீணாக்கி 100-வது தோட்டாவில் ஒரு பறவையைச் சுடும் ஊதாரி வேட்டைக் காரன் போல், சொற்களை வீணாக்குவது அவங்காரப் பேச்சுக் களில் இயல்பாக நடக்கிறது.

''கிணற்றுக் கேணிகளிலே பானைக் குடம் கொண்டு மங்கை மடந்தையர் வெள்ளத் தண்ணீர் எடுக்கும் நாடு நகரங்களிலே, ஊர் உலகங்களிலே' என்பது போல ஒரே அர்த்தத்தில் பல பதங்கள் வீணாக்கப்படுவது இன்றைய மேடை முழக்கங்களில் புதுத் துணை கலாசாரம் போலப் பெருகி வருகிறது. அறிவுள்ளவர்களைப் போல் தோன்றும் பேச்சாளர்கள், அறியாமை நிறைந்த மக்களைப் பிரமிக்க வைக்க இந்த வார்த்தைப் பிரவாகம் உதவி செய்கிறது. வார்த்தைக் கோவையில்தான் அர்த்தம் இருக்க முடியுமே ஒழிய, வார்த்தைப் பிரவாகத்தில் தெளிவான அர்த்தம் எதுவும் இருக்க முடியாது.

இன்றைய தமிழ், எழுத்து, பேச்சு, எல்லாமே ஒரே அடை மொழிகள் மயமாக ஆகி விட்டதோ என்று கவலையாக இருக்கிறது. ஒரு வேடிக்கைக்காக ஒரு கால்மணி நேரம் சர்க்கஸில் குரங்குக்குக் குல்லாய் மாட்டி கப் அண்ட் சாசரைக் கையில் கொடுக்கலாம். எல்லாக் குரங்குகளுமே எப்போதும் குல்லாய் மாட்டிக் கொண்டு ஓட்டலுக்கு வந்து கப்பில் டீ கேட்டால் என்ன ஆகும்? இங்கேயுள்ள பல அடை மொழிகள் குரங்குக்கு குல்லாய் மாட்டி விட்டது போல் வேடிக்கையாக இருக்கின்றன.

நம் இந்தியாவில் அரசியல் தலைவன் எத்தனை எளிமையாக இருக்க முடியும் என்பதைக் காட்ட ஒரு மகாத்மா காந்தி வந்து தோன்றியது போல், எல்லோருக்கும் இயல்பாகப் புரியக்கூடிய விதத்தில் கோமாளித்தனம் இல்லாமல் மொழியை சகஜமாக எழுதவும் பேசவும் யார் அவதரித்துக் கற்றுத் தரப்போகிருர்களோ தெரியவில்லை.

பெரும்பாலான வேளைகளில் மொழி, நடை, எல்லாம் பயன்படுத்துகிறவரின் ஈகோவைக் காட்டுவதாகவே உள்ளது. யாருக்குப் பயன்படப் போகிறதோ அவர்களைப் பற்றி இம்மியும் நினைப்பதில்லை. கன்ஸ்யூமரைப் பற்றிக் கவலைப்படாது பொருள்களை உற்பத்தி செய்து தள்ளும் தயாரிப்பாளர்கள் தான் இப்படி ஆடம்பர நடைப் பேச்சாளர்களுக்கு மிகவும் பொருத்தமான உதாரணம் ஆக முடியும். பொருத்தமான வார்த்தைகளால் நினைத்த கருத்தைக் கச்சிதமாகக் கூறும் பேச்சுக்கள்தான் மக்களுக்குத் தேவை. ஆனுல் கேட்டவரை மருட்டக் கூடிய சர்க்கஸ் பேச்சுக்களே நம்மிடையில் அதிகம் பேசப்படுகின்றன என்பதையே இப்படிப்பட்ட பதில்கள் நிரூபிக்கின்றன.

பேசுகிறவர், பீரங்கிக் குண்டுகளைப் பாய்ச்சுகிற வேகத்தில் (வேகம் இல்லாவிட்டால் இங்கு பலரால் பேசவே முடியாது.) உதிர்த்த வார்த்தைப் புதரில் கேட்பவர் அர்த்தத்தைத் தேடித் தேடி அலுத்துப் போக வேண்டியிருக்கிறது.

ராஜாஜி, காமராஜ், பெரியார் மூவரிடமும் எனக்குப் பிடித்த அம்சம் அர்த்தங்களே மறைந்து காணமல் போகுமளவு வார்த்தைப் புதர்களை அவர்கள் ஒருபோதும் உருவாக்கியதில்லை.

இங்கு பல தமிழ்ப் பேச்சாளர்களையும், உபசார வார்த்தை + அடைமொழி உபயோகிப்பாளர்களையும் பார்க்கும்போது, கை நிறைய தீப்பெட்டிப் படம் சேர்த்து வைத்துக் கொண்டு—தீப்பெட்டிப் படமே சேர்க்காத மற்ெருரு பையனை மிரட்டுபவனை அகம்பாவம் பிடித்த பையன்தான் என் நினைவுக்கு வருகிறுன். வார்த்தைப் புதர்களும், அடைமொழிப் பந்தல்களும் பிரசங்கங்கள் அல்ல என்று இவர்களுக்கு எப்படிப் புரிய வைப்பது? ★

# 29. மாறி வரும் மதிப்பீடுகள்

அறிவு என்ற வார்த்தைக்கு இப்போது என்னென்னவோ விளக்கங்கள் கொடுக்கிறார்கள். ஆனால், அதற்கு முன்பு கொடுக்கப்பட்ட விளக்கம், 'நல்லதின் நன்மையையும், தீயதின் தீமையையும் உள்ளவாறு உணர்வது' என்பது ஆகும்.

இதன்படி நல்லது, கெட்டது என்பவற்றைப் பிறழாமல் கண்டு பிடித்துக் காரண, காரியத்தோடு அறிவதுதான் அறிவு என்று ஆகிறது.

ஆனால், இன்று நல்லது அல்லது கெட்டதைக் கண்டு பிடிப்பதிலேயே பல குழப்பங்களும், முரண்பாடுகளும் ஏற்பட்டு விட்டன.

பலர் சேர்ந்து, கெட்டதை நல்லது போல் காட்டவும், நல்லதைக் கெட்டது போல் காட்டவும் முயலும் முயற்சிகள் இன்று அதிகம், மிகவும் அதிகம்.

வேல்யூஸ் (Values) எனப்படும் மதிப்பீடுகள் மாறி வருகின்றன. தவறுகள் கண்டிக்கப்பட வேண்டியவை என்ற இறுக்கமான-கறாரான பழைய பிடிவாதம் போய்த் தவறுகள் மன்னிக்கப்பட வேண்டியவை என்ற புதிய-நெகிழ்ச்சி ஏற்பட்டிருக்கிறது. தவறுகள் அங்கீகரிக்கப்பட வேண்டியவை என்றும் ஒரு வாதம்.

இன்னும் ஒருபடி மேலே போய்ச் 'சில தவறுகளும் தர்மங்களே' என்று சாதிக்கும் துணிவு கூடச் சிலருக்கு வந்து விடுகிறது - வந்திருக்கிறது.

ஐந்து பேர், பத்துப் பேர் அடங்கிய சிறிது குழுவுக்கு நடுவே ஒருவன் புளுகினால் அல்லது பொய் சொன்னால் புளுகன் என்றும் பொய்யன் என்றும் குற்றம் சாட்டுகிறோம்; கண்டிக்கிறோம்.

அதே விதமான பொய்களைச் சிகரமான நடையில், அலங்காரமான வார்த்தைகளால் ஆயிரம் பேருக்கு முன்னாலோ, பத்தாயிரம் பேருக்கு முன்னாலோ ஒருவன் கூற முடிந்தால், இன்று அவனுக்குப் பெயர் தலைவன் அல்லது தேசத் தலைவன். இதுதான் நடைமுறையாக இருக்கிறது. ஆகவே, நல்லதை ஏன் நல்லது என்றும், தீயதை ஏன் தீயது என்றும் காரண காரியத்தோடு கண்டு தெளியும் அவசியம் இன்றைய அறிவின் மதிப்பீட்டில் இல்லை.

'பலரும், பல பத்திரிகைகளும் இதை நல்லதென்று சொல்கிறார்கள். அதனால் இதை நல்லதென்று ஆராயாமலே ஒப்புக்கொண்டு விடுவோம். பலரும் பல பத்திரிகைகளும் இதைக் கெட்டதென்று சொல்கிறார்கள். அதனால் ஆராயாமலே இதைக் கெட்டதென்று ஒப்புக் கொண்டு விடுவோம்' என்பது போன்ற போக்குத்தான் இப்போது அதிகம் தெரிகிறது.

மந்தையோடு ஒத்துப் போகிற இந்த மனப்பான்மைக்கு, ஆராய்ந்து பாராமலே முடிவை ஏற்கிற இந்தக் கண்மூடித் தனமான சரணாகதிக்கு வெகு ஜனப் போக்கு, பெரும்பான்மை மனப்போக்கு என்றெல்லாம் நாகரிகமான பெயர்களும், குறியீடுகளும் கிடைத்திருக்கின்றன.

வலிமையான பலர் சொல்லும் அல்லது செய்யும் தவறான ஒன்றைச் சரியான சிந்தனையுள்ள மக்களே எதிர்க்க அஞ்சுகிறார்கள்.

நல்லதை அது ஏன் நல்லது என்று தூண்டித் துருவி ஆராயும் பொறுமையோ தீயதை அது ஏன் தீயது என்று துண்டித்துருவி ஆராயும் பொறுமையோ யாருக்கும் இன்று இல்லை.

தப்பித் தவறி அப்படிப்பட்ட பொறுமையும், துறுதுறுப்பும் யாருக்காவது இருந்தால் அவர்கள் பொது வாழ்வுக்குப் பயன்படாதவர்களாகவும், இடையூறானவர்களாகவும் கருதப்படுகிறார்கள்.

மதிப்பீடுகள் மாறியிருப்பது தலைமுறை இடைவெளிகளில் நன்றாக விட்டுத் தெரிகிறது. ஒரு தந்தை, தான்

தனது வாழ்நாள் முழுவதும் பணி புரிந்து வந்த ஒரு கம்பெனி உரிமையாளரிடம் ஓய்வு பெறும்போது தன் மகனுக்கு ஒரு வேலை தருமாறு கேட்டு வாங்கி, அவனை அங்கே அமர்த்துகிறார். அவர் கம்பெனிக்கு விசுவாசமாக உழைத்தவர் என்ற காரணத்தால் தான் அவரது மகனுக்கு வேலை கிடைக்கிறது. இரண்டு ஆண்டுகள் கழித்து மகனே தந்தையிடம் பேசும்போது, 'விசுவாசமாவது வெங்காய மாவது? அவர் சம்பளம் கொடுக்கிறார். நான் உழைப்பைக் கொடுக்கிறேன். விசுவாசத்தைக் கொடுக்கணும்னு அதுக்காக அவர் பதிலுக்கு எனக்கு மேலும் ஏதாவது தந்தாகணும்' என்று எடுத்தெறிந்து பேச நேரிடுகிறது.

தந்தை, மகனின் இந்தப் பேச்சைக் கேட்டு அதிர்ச்சி யடைகிறார். மகனோ எந்த அதிர்ச்சியும் இன்றிச் சர்வ சாதாரணமாக இதைப் பேசுகிறான்.

இதிலிருந்து விசுவாசத்தைப் பற்றிய 'மதிப்பீடு' மாறி யிருப்பதை நன்றாகப் புரிந்து கொள்கிறோம். நன்றி, விசுவாசம் இவையெல்லாம் கற்பைப் போல் புனிதமானவை என்று நினைத்து மதிப்பிடும் ஒருவரையும், அவற்றுக்கும் தனியே விலை உண்டு என்று சாதாரணமாகச் சொல்லும் ஒருவரையும் அருகருகே பார்க்கும்போது மதிப்பீட்டு மாற்றம் புரிகிறது.

வயது எண்பத்திரண்டு ஆகி, நடமாட்டம் ஓய்ந்து தளர்ந்த பின்னும், கிழிந்த கதர் வேஷ்டியையே கட்டிக் கொண்டு அந்த முரட்டுத் துணி 'படுக்கைப் புண்' வரக் காரணமாக இருந்தும், அதன் மேலுள்ள பற்றும், பிடிவாத மும், முரண்டும் தீராமல் அதையே உபயோகிக்கிறார் ஒரு தியாகி!

'டெரிகாட்' உபயோகப்படுத்தும் அவருடைய பேர னுக்கு அந்தத் தாத்தாவின் பிடிவாதம் அர்த்தமற்றதாகப் படுகிறது. ஒரு மகத்தான சுதந்திர இயக்கத்தின்போது அவர் விரதமாக மேற்கொண்ட ஒரு புனிதப் பழக்கத்தை அவருடைய பார்வையில் மதிப்பிட்டுப் பார்க்க, பேரனால் முடியவில்லை.

பஸ்ஸில், ரயிலில், பிக்பாக்கெட் அடித்தோ, சங்கிலியைத் திருடியோ, அகப்பட்டுக் கொள்கிறவனைப் போலீஸ்காரர் வருவதற்கு முன்பே பிடித்தவர்கள் மூக்கு, முகம் பாராமல் அடித்து நொறுக்கி விடுகிறார்கள். ஆனால், பகிரங்கமாகப் பொதுப் பணத்தையோ, பொதுச் சொத்தையோ கையாடி அல்லது விரயமாக்கி விட்டுப் பல ஊழல் கமிஷன்களில் புகுந்து புறப்பட்டு மறுபடியும் மார் தட்டிக் கொண்டு தேர்தலில் வந்து நிற்கிறவனைத் தலைவன் என்றும், துயர் துடைக்கப் பிறந்த தோன்றல் என்றும் கொண்டாடுகிறார்கள். மதிப்பீட்டின் பொது அளவுகோலே புரிவதில்லை.

'தர்மம், நியாயம், தெய்வத்துக்கே பொறுக்காது சாமி, கண்ணை அவித்து விடும். வம்சம் விளங்காமல் போய் விடும். எல்லாவற்றையும் மேலே ஒருவன் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறான். ஆண்டவன் சும்மா விட மாட்டான்!' என்பது போன்ற பதம் கலந்த நம்பிக்கை அடிப்படையிலான முந்தைய மதிப்பீடுகளும் போய் விட்டன.

பயமோ, நம்பிக்கையோ சம்பந்தப்படாத 'நல்லவனாக இருக்க வேண்டும்' என்ற அடிப்படை நாணயத்தை மையமாகக் கொண்ட மதிப்பீடும் குறைந்து வருகிறது.

சுயநலத்துக்கு இப்போது புதிய வியாக்கியானங்கள் கூடத் தரப்படுகின்றன.

'அதிலே என்னம்மா தப்பு? தேனிலே கைபட்டவன் சும்மாவா விடுவான்? கொஞ்சம் ருசி பார்க்கிறதிலே குறைவு ஒண்ணுமில்லே. இல்லாதவன் நாலு காசு சேர்க்கத்தான் சேர்ப்பான். சேர்க்கட்டுமே! கூட்டிக் கழிச்சுப் பார்த்தா யார்தான் ஊழல் பண்ணலே?' என்று லஞ்சத்தை—ஊழல் வழியில் பணம் பண்ணுவதை—நியாயப்படுத்திப் பேசுவது அதிகமாகி வருகிறது. நேற்றைய மதிப்பீடுகள் எந்த வகையிலும் நிலைக்கவும், நீடிக்கவும் திணறுகையில், இப்படிப் புதிய தற்காலிக மதிப்பீடுகள் கிளம்புகின்றன. அவற்றில் சில மேலோட்டமாகப் பார்த்தால் சுலபமாகவும், காலத்துக்

கேற்றவையாகவும் தெரிகின்றன. வேறுவகையில் கூர்ந்து கவனித்தால் பழைய மதிப்பீட்டைப் பலி வாங்கியவை களாகத் தெரிகின்றன. அடிப்படையற்ற மதிப்பீடுகளாகத் தெரிகின்றன.

இப்படிச் சில மதிப்பீடுகளுக்கு அடிப்படை என்ன வென்றே தெரியவில்லை. சில மதிப்பீடுகளுக்கு அடிப்படையே இருப்பதில்லை. சிலவற்றுக்குப் படித்தவன், யோக்கிய மானவன், சிந்திக்க தெரிந்தவன் வேண்டும் என்று மதிப்பீடு செய்கிறார்கள்.

வேறு சிலவற்றுக்குப் படித்தவர்களும், விபரம் தெரிந் தவர்களும், யோக்கியர்களும், பிரயோஜனப்பட மாட்டார் கள் என்று ஒதுக்கி மதிப்பீடு செய்கிறார்கள். மதிப்பீடுகள் காரணகாரிய ரீதியிலும் இல்லை. நிலையான அடிப்படை யிலும் இல்லை.

'லஞ்சம் வாங்க அனுமதிக்கா விட்டால், வேண்டியவர் களுக்குச் சலுகை காட்டாவிட்டால், எந்த அரசியல் கட்சி யிலும் பலர் தங்கி உழைக்க மாட்டார்கள். ஆகவே, ஒவ்வொரு கட்சியும் தங்கள் ஆட்கள் சலுகைகள், லஞ்சம் ஆகியவற்றைப் பெறுவதைக் கண்டு கொள்ளாதது போல் விட்டுவிட வேண்டும்' என்று ஒரு புது மதிப்பீடு.

கறை படாத கரம், நிர்வாகத் திறன், லஞ்ச ஊழலற்ற ஆட்சி, இவற்றை அளிப்பதாகத் தேர்தல் வாக்குறுதிகள் ஒருபுறம். எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் மதிப் பீடுகள் ஒரே மாதிரி இல்லை. 'தர்ம நியாயத்துக்குக் கட்டுப் படுகிறவர்' என்பதை ப்ளஸ் பாயிண்டாக மதிப்பிடுகிறவர் களும் இருக்கிறார்கள். 'தர்மமாவது நியாயமாவது?... எல்லாம் சுத்தத் பத்தாம் பசலித்தனம்' என்கிறவர்களும் இருக்கிறார்கள். பரம்பரை நம்பிக்கைகளுக்கும் —நவீன வேகங்களுக்கும் நடுவிலிருக்கிற சமூகம் எங்கெல்லாம் இருக் கிறதோ அங்கெல்லாம் இப்படி மதிப்பீட்டுக் குழப்பமும், தலைமுறை இடைவெளியும் இருக்கத்தான் செய்கின்றன. அளக்கும் அளவு கோல்களின் அடிப்படை ஒரே மாதிரி யில்லை.

தனிமனிதன் தனி மனிதனிடம் புளுகினால் பொய். தனி மனிதன் கோடிக்கணக்கான மனிதர்களை முன்னால் கூட்டி மேடை போட்டுப் புளுகினால் வீர முழக்கம்.

தனி மனிதன் திருடினால் கேவலமான திருட்டு. பொதுப் பதவியில் இருப்பவன் சாமர்த்தியமாகக் கொள்ளையடித் தால் அது கெட்டிக்காரத்தனமான அரசியல்.

எங்கோ ஒரு தனி மனிதன் நீதி தவறினால் அது தப்பு. ஒரு பெரிய தலைவன் எனப்படுவன் நீதி தவறி, நெறி பிறழ்ந்து, அதிரடி அரசியல் நடத்தி மறுபடி தேர்தலில் நின்று வென்றுவிட்டால், அவன் தவறுகளை மக்களே மன்னித்து ஏற்றுக்கொண்டு விட்டதாகவும் மறந்துவிட்ட தாகவும் ஒரு சமாதானம்.

இம்மாதிரி நடக்கும் வேளைகளில்தான் மதிப்பீடுகள் மாறிவிட்டனவா, திரிந்துவிட்டனவா என்ற சந்தேகமே வருகிறது நமக்கு.

ஒன்றை அளக்கும் முறைகள் மாறலாம். அடிப்படைகள் மாறக் கூடாது. இரட்டை அளவு கோல்கள் கூடாது. இரட்டை மதிப்பீடுகளும் கூடாது. பாதுகாப்போடு பத்திர மாகச் செய்யப்படும் தவறுகளைக் கண்டு கொள்ளாமல் இருந்து விடுவதும், பாதுகாப்பும், பத்திரமும் செய்துகொள் ளாமல் தற்செயலாகப் பாமரர் செய்யும் பிழைகளைப்பெரிது படுத்துவதும்தான் சமூக மதிப்பீடு என்றால், பொறுத்துக் கொள்வதும் ஜீரணிப்பதும் சிரமம்தான். சில தர்மங்கள் திட்டமிட்டுத் தவறுகளாகச் சித்திரிக்கப்படுகின்றன. சில தவறுகள் திட்டமிட்டுத் தர்மங்களாகச் சித்திரிக்கப்படு கின்றன.

ஒன்றை நல்லது என்று புரிந்து கொள்வது மட்டும் அறிவு இல்லை. அது ஏன் நல்லது என்றும் சேர்த்துப் புரிந்து கொள்வதுதான் அறிவு.

ஒன்றைத் தீயது என்று புரிந்துகொள்வதுமட்டும் அறிவு இல்லை. அது ஏன் தீயது என்றும் சேர்த்துப் புரிந்துகொள் வதுதான் அறிவு.

இன்றைய நமது ஜனநாயகத்தில் அறிவுக்கும் அறிவுள்ளவர்களுக்கும் பஞ்சமில்லை. ஆனால், காரண காரியத்தெளிவின் தொடர்பற்ற அறிவாகவே எங்கும் நிரம்பியிருக்கிறது.

சில காரணங்களைக் கவனிப்பதே இல்லை. சில காரியங்களைக் கவனிப்பதே இல்லை. இரண்டையும் தொடர்புபடுத்தி அறிகிற தெளிவுதான் அறிவு முதிர்ச்சி. தெளிவு-அத்தகைய-தெளிவு-கிடைக்காத வரை நம்மிடம் மதிப்பீடுகள் இருக்கும். அவற்றுக்கான அடிப்படைகள் மட்டும் ஒரு சீராக இருக்காது. அடிப்படை சரியாக இல்லாத மதிப்பீடு அஸ்திவாரமில்லாத கட்டிடம் போன்றதே! ★

# 30. ஜாதிகள் இல்லையடி பாப்பா!

ஜாதி வேறுபாடுகளை ஒழிப்பதாகப் பேசுவதும், எழுதுவதும் ஒரு நாகரிகமாகக் கருதப்பட்டு வரும் காலத்தில் நாம் வாழுகிறோம். கல்விமான்கள் அரசியல்வாதிகள், சீர்திருத்தக்காரர்கள் எல்லாரும் ஜாதி வேறுபாடுகளை ஒழிப்பது பற்றி நிறையப் பேசுகிறார்கள், எழுதுகிறார்கள். அப்படிப் பேசுவதன் மூலமும், எழுதுவதன் மூலமுமே ஜாதி வேறுபாடுகள் வளர்கின்றன. இன்னும் பச்சையாகச் சொல்லப்போனால் ஜாதிகளை ஒழிப்பதைவிட ஜாதிகள் இருப்பது நமது கல்விக்கு, நமது அரசியல்களுக்கு, நமது தேர்தல்களுக்கு, நமது சீர்திருத்தங்களுக்கு ஒரு சுயநலமான அவசியமாக இருப்பது போல்கூடத் தோன்றுகிறது. ஜாதிகளை மறக்க விரும்புவதைவிட நினைவு கூர விரும்புவதில் நம்மவர்கள் அதிக அக்கறை காட்டுகிறார்கள் என்பது மிகவும் கொச்சையான ஓர் உண்மை. கசப்பான நிஜம். நமது தேர்தல்களுக்கு ஜாதி தேவைப்படுகிறது. நமது கல்விக்கு ஜாதி தேவைப்படுகிறது. நமது சமூக சீர்திருத்தத்துக்கு ஜாதி தேவைப்படுகிறது. இதை ஒழிப்பதாகச் சொல்லிக்கொண்டே பிழைக்கிறவர்களுக்கு உண்மையிலேயே இது ஒழிந்துவிட்டால் அப்புறம் 'ஒழிப்பதற்கும், ஒழிப்பதாகச் சொல்லிக்கொள்வதற்கும் ஒன்றுமில்லை' என்பதாலேயே அவர்களுக்கும் பைத்தியம் பிடித்துவிடுமோ என்றுகூடத் தோன்றுகிறது. காஷ்மீரிலிருந்து கன்னியாகுமரி வரை ஜாதிமத வேறுபாடுகளை வைத்துத்தான் ஒவ்வொரு சிறு அணுவும் அசைகிறது. ஆனாலும் நமது தேசத்தில் ஜாதி மத வேறுபாடுகளை ஒழிப்பது என்பது அரசாங்கங்களுக்கும், இலட்சியவாதி

களுக்கும், அவ்வப்போது அறிக்கைகள் விடுகிறவர்களுக்கும் தவிர்க்க முடியாத ஒரு பாசாங்காகத் தேவைப்படுகிறது. சங்கரர், இராமானுஜர் காலம் முதல்-இன்றுவரை **wishful thinking** ஆகவே ஒரு விஷயம் நிற்கிறது என்றால் அது, நமது ஜாதி—மதச் சீர்திருத்த லட்சியங்கள்தான் என்று சொல்ல வேண்டும்.

சில வேளைகளில் நான் இப்படிக்கூட நினைப்பது உண்டு. ஜாதி, வறுமை, வேலையில்லாத் திண்டாட்டம், பல்வேறு வகைப் பஞ்சங்கள், நிர்வாக ஊழல்கள், இவற்றை எல்லாம் ஒழிப்பதாகச் சொல்லித்தான் ஒவ்வோர் அரசியல்வாதியும் வோட்டுக் கேட்க முடிகிறது. இவற்றை எல்லாம் ஒழிப்பதாகச் சொல்லித்தான் ஒவ்வொரு கட்சியும் ஆட்சிக்கு வர முடிகிறது. உண்மையிலேயே ஒரு குறிப்பிட்ட தேதியில் இவை எல்லாமே தாமாக ஒழிந்து போய்விடுகின்றன என்று வைத்துக்கொள்வோம். அப்புறம் வோட்டுக் கேட்கிற அரசியல்வாதிகள், ஆளவரும் கட்சிகள் அனைத்தும் திண்டாடித் திணறிப் போய்விட நேரிடும். அரசியல் மேடைச் சொல் வர்த்தகர்கள், சவால்விடும் வார்த்தை வியாபாரிகள், எதையாவது சீர்திருத்தப் போவதாகச் சொல்லியே பிழைக்கும் சீர்திருத்தவாதிகள், ஆட்சியாளர்கள் எல்லாரும் அப்புறம் எதை ஒழிப்பதாகச் சவடால் அடிக்க முடியும்? இந்த ஒரு சுயநலமான வசதியைக் கருதியே இவற்றை எல்லாம் ஒரேயடியாக ஒழித்துவிடாமல் வாழ வைத்துக் கொண்டிருக்கிறார்களோ என்றுகூடத் தோன்றுகிறது. இப்படித் தோன்றுவதில் உண்மையில்லாமலில்லை.

அரண்மனை வாயிலில் உள்ள பெரிய அண்டாவில் ஒவ்வொரு குடிமகனும் ஒரு குவளை பால்விட வேண்டுமென்று அரசன் கட்டளையிட அதைக் கேட்ட மக்கள் ஒவ்வொருவரும் 'எத்தனையோ ஆயிரம் பேர் பால்விடப்போகிறார்கள். நாம் ஒருவர் மட்டும் தண்ணீர் விட்டால் அது யாருக்குத் தெரியப் போகிறது' என்று எண்ணித் தண்ணீரையே விட்ட

கதையாகத்தான் ஜாதி வேறுபாடுகளை ஒழிக்கும் முயற்சியும் இதுவரை இருக்கிறது. இதில் நாடு முழுவதும் பொதுவான சிரத்தையும், தனித்தனியான அசிரத்தையுமாக ஒரு முரண் பாடான நிலை நம் நாட்டில் இருந்து வருகிறது. பல்வேறு ஜாதிகளைச் சேர்ந்த ஆயிரம் பேர் அடங்கிய சபையினருக் காகப் பல்வேறு ஜாதிகளைச் சேர்ந்த ஆறு பேர் சொற்பொழி வாளர்களாக மேடையேறி நின்று பேசும்போது காட்டும் வேகமோ, ஆர்வமோ பிரசங்கம் முடிந்ததும் பேசியவர் களுக்கும் இருப்பதில்லை; கேட்பவர்களுக்கும் இருப்பதில்லை. பேசுகிறவர்கள் வேறுபாடுகளை ஒழிப்பது பற்றிப் பேசுகிறார் கள். கேட்கிறவர்கள் கேட்கிறார்கள்.

நாம், கூட்டமாக இருக்கும் போது ஒருவர் ஜாதியைப் பற்றி மற்றவர் அறிந்து கொள்ளவோ, விசாரிக்கவோ ஆசைப்படாமல், அவர் மனித இனம் என்ற ஒரே காரணத்துக்காக மட்டுமே பெருமைப்படுவது போல் பாவனை பண்ணுகிறோம். கூட்டம் கலையும்போது ஒவ்வொரு வரும் மற்றவரைப் பற்றி முதலில் அறிய விரும்பும் தகவல், "என்ன ஜாதி' என்பதுதான். 'மதம்' என்பது பெரும் பாலும் பெயர்களிலேயே தெரிந்து விடுவதால் நாம் அதை அநேகமாகத் தெரிந்து கொள்ள ஆசைப்பட்டுத் தவிப் பதில்லை. இப்படி உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசி ஜாதிப் பித்துப் பிடித்து அலையும் ஆஷாட பூதித்தனத்தை விடப் பெயர்களுடன் ஜாதிகளைச் சேர்த்துப் போட்டுக் கொண்டு கள்ளங் கபடமில்லாமல் அவற்றை வெளிப் படுத்திய பழைய தலைமுறை மனிதர்களே ஒரு வகையில் யோக்கியமானவர்களாகத் தோன்றுகிறார்கள். அவர்களிடம் ஜாதி மட்டும் தான் இருந்தது. ஜாதிப் பித்து இல்லை. நம்மிடம் ஜாதிப் பித்து இருக்கிறது. ஜாதிப் பெயர்கள் தான் இல்லை.

பெயிண்ட் அடிப்பவர்கள், கைகளில் இரத்தக் கறை பட்டவர்கள், தங்கள் கைகளிலிருந்து அவற்றை அகற்றும் முயற்சியில், வேறு சுத்தமான இடங்கள், துணிகளில்

அவற்றை அப்பி அழுக்காக்கி விடுவது போல் தான் நமது ஜாதி வேறுபாடுகளை நீக்கும் முயற்சியும் இருக்கிறது. ஒவ்வொருவரும் அவரவர் ஜாதியைத் தவிர மற்ற ஜாதிகளை ஒழித்து விட முயல்கிறோம்.

ஒரு ஆபீஸில், ஒரு பெரிய நிர்வாகி ஏதோ ஒரு குறிப்பிட்ட ஜாதியை, அல்லது இனத்தைச் சேர்ந்தவர் என்று வைத்துக்கொள்வோம். அந்த நிர்வாகியின் ஜாதி அல்லது இனம் அவராக விரும்பி ஏற்றிருந்தாலும், இல்லாவிட்டாலும், அவரது பெற்றோர்கள் ஏதோ ஓர் ஜாதியை அல்லது இனத்தைச் சேர்ந்தவர்களாக இருப்பதால் அவரும் அந்தச் சிலுவையைச் சுமக்க நேர்ந்திருக்கிறது. அவருடைய நிர்வாகத்தின் கீழே வேலை பார்க்கும் ஒருவருக்கும் அவருக்கும் ஒரு சிறு மனஸ்தாபம் வருகிறது என்று வைத்துக்கொள்வோம். வேறு நாடாகவோ, வேறு பிரதேசமாகவோ இருக்குமானால், அது ஒரு நிர்வாகிக்கும், ஊழியருக்கும் நடுவேயுள்ள தகராறாக, அல்லது இரண்டு தனிமனிதர்களுக்கு நடுவேயுள்ள தகராறாக மட்டும்தான் இருக்கும். ஆனால், இங்கே அது உடனே இரண்டு ஜாதிகளுக்கு நடுவிலான சண்டையாக மாறிவிடும். மாற்றப்பட்டு விடும் என்று சொன்னால் பொருத்தமாயிருக்கும் என்று தோன்றுகிறது. நிர்வாகியின் ஜாதியிலுள்ள மற்ற யாரும் அவருடைய தகராறுக்குக் காரணமாகவோ, துணையாகவோ இல்லையென்றாலும் அனைவரும் மொத்தமாகப் பழிக்கப்படுவது வழக்கம். அதே போல, ஊழியரின் ஜாதியைச் சேர்ந்த வேறு எந்த ஒரு நபரும் ஊழியரின் தகராறுக்குக் காரணமோ, துணையோ இல்லை என்றாலும், ஜாதியைச் சுட்டிக் குறை கூறுவதன் மூலம் அந்தப் பழிக்கு அனைவரும் நிர்ப்பந்தமாக ஆளாக்கப்படுகிறார்கள்.

ஜாதி வேறுபாடுகள் போய் விடாமல் கட்டிக் காப்பதில், நமது கல்வித்துறை முதல் கருமாதி நடக்கும் இடமான சுடுகாடு வரை பக்காவாக ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்

றன. பழங்குடியினர், பிற்பட்ட வகுப்பினர், என்று சலுகைகளுக்காக அரசாங்கம் அங்கீகரித்திருக்கும் பிரிவினர் தங்கள் ஜாதி-உட் பிரிவு உள்பட அனைத்தையும் எல்லா விண்ணப்பங்களிலும் கூற வேண்டியிருக்கிறது. ஆனால், இந்த அங்கீகரிக்கப்பட்ட பிரிவில் வராத மற்றவர்களையும் ஜாதி உட்பிரிவு விவரங்கள் கூறச் சொல்லியும், எழுதச் சொல்லியும் வற்புறுத்தாத கல்வி நிறுவனங்கள் மிகமிகக் குறைவு. ஒரு வேளை பழைய ஜாதிகள் வேறுபாடுகள் போனாலும், அரசாங்கம் என்ற புதிய மனுவால்-ஃபார்வர்டு, பேக்வர்டு. என்ற புதிய ஜாதிகள் உண்டாக்கப்பட்டிருக்கின்றன.

கல்வி நிறுவனங்களில், பஸ் கட்டணச் சலுகைக்கு விண்ணப்பிக்கும் சாதாரண விண்ணப்பங்களில் கூட ஜாதி கேட்கப்படுகிறது. ஒரு கல்வி நிறுவனத்தில் அட்மிஷனின் போது, 'கலகங்கள், பொதுச் சொத்துக்களுக்குச் சேதம் ஏற்படுத்தும் காரியங்களில் நான் ஈடுபடமாட்டேன்'-என்று மாணவர்களிடம் ஒரு டெக்ளரேஷன் வாங்கப்பட்டது. அதில் கூட ஜாதியைக் கேட்டிருந்தார்கள். இன்னொரு கல்லூரி அட்மிஷனில், எல்லா வகையிலும் தகுதி பெற்றிருந்த ஒரு மாணவரை அட்மிஷனுக்கு ஏற்றுக் கொண்டு, அட்மிஷன் கார்டும் அனுப்பி விட்டார்கள். ஆனால் கார்டில் சிவப்பு பால்பாயிண்ட் பேனாவால் ஒரு சிறு புள்ளி இடப்பட்டிருந்தது. மாணவர் அதைக் கவனிக்கவில்லை. அட்மிஷன் கார்டுடன் காலேஜ், கவுண்டரில் பணம் கட்டப் போனவுடன், கவுண்டரில் இருந்தவர் மாணவரிடம் சிவப்புப் புள்ளியைக் காட்டிப் பணம் வாங்க மறுத்து விட்டார். மாணவர் பிரின்ஸிபாலைப் பார்த்து, நிர்வாகிகளைப் பார்த்து வாதாடி, 'சரியான காரணம் தெரிவிக்காத பட்சத்தில் கோர்ட்டுக்குப் போக நேரிடும்' என்று பயமுறுத்திய பின், வேண்டா வெறுப்பாக அட்மிஷன் தரப்பட்டது.

பின்னால் விசாரித்ததில், சில குறிப்பிட்ட ஜாதிக்காரர்களுக்கு அவர்கள் எவ்வளவு நல்ல மார்க் வாங்கியிருந்தாலும் அந்தக் கல்லூரியில் அட்மிஷன் தருவதைத் தொடர்ந்து தவிர்த்து வந்தார்கள் என்பது தெரிந்தது.

கேட்பவர்களுக்கு எல்லாம் சிபாரிசுக் கடிதம் கொடுத்து வந்த ஒரு பிரமுகர் பச்சை, நீலம், கருப்பு என்று மூன்று மைகளில் கடிதங்கள் தருவது உண்டு. பச்சை என்பது அவரது ஜாதிக்காரர்களுக்கு மட்டும் தரப்படும். காரியம் நிறைவேறும் நிறம் அது. 'நீலம்'-எனக்கு ஆட்சேபனை யில்லை; ஆனால், 'ஆள் நம் ஜாதியில்லை' என்பதைக் குறிக் கும். 'கருப்பு' 'என்னைத் தொந்தரவு பண்ணுகிறார்கள். கடிதம் தந்து தொலைத்திருக்கிறேன்! நீ கவலைப்படாமல் தட்டிக் கழித்து விடு'-என்று பொருள்படும். இந்தக் கடித வர்ண வேறுபாட்டின் கர்த்தாவும், ஜாதி வேறுபாடுகளை எதிர்த்து மேடையில் முழங்கியவர்தான்.

எல்லா ஜாதிகளுக்கும் பொதுவான சில பெயர்கள் உண்டு. அப்படிப் பெயர்களுக்குரியவர்களின் ஜாதியைக் கண்டு பிடிக்க, 'நீங்கள் இன்னாருக்கு உறவா? உங்கள் தகப்ப னார் பெயர் என்ன? தாத்தா பெயர் என்ன?'-என்று தந்திரமாக வலைவிரித்துக் கேட்கும் வழக்கம் இங்கு ஒரு புது வகை நாகரிகமாக இருக்கிறது. அரசியலில் வேட்பாளர் எந்த ஜாதியைச் சேர்ந்தவரோ அந்தஜாதிக்காரர்கள் அதிகம் இருக்கும் பகுதியில் தான் அவர் அபேட்சை மனுப் போட வேண்டுமென்பது உன்னிப்பாகக் கவனித்து மேற்கொள்ளப் படுகிறது. சுதந்திரமடைந்து முப்பது வருஷத்துக்குப் பின்னும் இங்கே இந்த நிலைமை இன்னும் போகவில்லை. வியாபார நிறுவனங்கள், தொழில் நிறுவனங்கள், நம்பிக் கையான இடங்களில் எல்லாம் தன் ஜாதி, தன் உறவினர் களை நியமித்துக் கொள்வதில் எல்லா ஜாதிக்காரர்களுமே அக்கறை காட்டுகிறார்கள்.

ஜாதி வேறுபாடுகளை ஒழிக்கும் முயற்சிகள் மூலமாகவே, அதை முன்னை விடத் தீவிரமாக வளர்க்கும் ஒரு தேசம் உலகில் உண்டு என்றால் அது இந்தியா தான். அதில் சந்தேகமே இருக்க வேண்டியதில்லை.

அமெரிக்கா என்றால் நினைவுக்கு வரும் ஜனங்கள், முதலில் அமெரிக்கர்கள் என்ற பெயரில்தான் நினைவுக்கு

வருவார்கள். ரஷ்யா என்றால் ரஷ்யர்கள் என்று தான் நினைவுக்கு வருவார்கள்.

அது போல இந்தியா என்றாலும், இந்தியர்கள் என்பது தான் முதலில் நினைவுக்கு வர வேண்டும். ஆனால் இந்துக்கள், முஸ்லீம்கள், கிறிஸ்துவர்கள், அப்புறம் இந்துக்களில் அந்த ஜாதி, இந்த ஜாதி, கிறிஸ்துவர்களில் அந்தப் பிரிவு இந்தப் பிரிவு-இவைகள் தான் இங்கு நினைவுக்கு வருகின்றன. 'ஜாதிகள் இல்லையடி பாப்பா' என்று பாரதியார் இந்தத் தேசத்தைப் பற்றி மிகவும் தன்னம்பிக்கையோடு துணிந்து தான் பாடி விட்டுப் போய் விட்டார்! பாவம் பாரதியார்!



# 31. ஆசீர்வதிக்கப்பட்ட அத்துமீறல்கள்

சுதந்திரம், ஜனநாயகம், உரிமை, சமத்துவம், சலுகைகள் என்ற பெயரில் இரட்டை அளவு கோல்கள், இரட்டை விலை, இரட்டை நிர்ணயம், இரட்டை நியாயம் என்று பல விசிதாசாரங்கள் ஏற்பட்டு விட்டன இந்த நாட்டில்.

அத்து மீறல்கள் தவறு என்ற பொதுவான நியாயம் புறக்கணிக்கப்பட்டு, சில அத்து மீறல்களை அங்கீகரித்துக் கொள்ளலாம் என்ற புது நியாயத்தை நாமே போஷித்து வளர்க்க முற்படுகிறோம்.

அதிகாரத்தாலும் ஆட்சியாலும் ஆசீர்வதிக்கப்பட்ட அத்துமீறல்களும், அங்கரிக்கப்பட்ட அத்துமீறல்களும், புதுப் புது அத்துமீறல்களுக்கும், சட்ட மீறல்களுக்கும் வழி செய்து கொடுக்கின்றன.

தனித்தனி மனிதர்களாக விலகி ஒதுங்கி நிற்கும் போது ஒழுங்காக இருக்க வேண்டுமென்றும், அங்கீகரிக்கப்பட்ட சட்ட நியாயங்களுக்குக் கட்டுப்பட வேண்டுமென்றும் நினைப்பவர்கள் சிலராகக் கூடி ஒன்று சேரும் போதும், கூட்டமாகக் கூடும் போதும் அத்துமீறலுக்குத் துணிவு பெறுகிறார்கள்.

ஒரு தவற்றைத் தனியாக ஒருவன் செய்தால் குற்றம் சாட்டத் தயங்காமல் சட்டமும், போலீஸும் நீதித்துறையும் தயாராயிருக்கின்றன. பலர் சேர்ந்து அதே தவற்றைச் செய்யும் போது சட்டமும், போலீஸும், நீதியும் முடங்கி விடுகின்றன.

தனி மனிதனின் அத்துமீறல்களைக் கண்டிக்கத் தயாராயிருக்கிற சட்டமும், கூட்டத்தின் அத்து மீறல்களையும், வன்முறையையும் கண்டிக்கத் தயாராக இல்லை. இதனால் வளரும் சமூக அபாயங்களுக்கு நாமனைவரும் ஆளாகிறோம்.

கொலை, கொள்ளை, வன்முறை, அத்துமீறல்கள், இனக் கலவரங்கள் ஆகியவற்றைக் கூட்டம் கூடித் திட்டமிட்டு அமைப்பு ரீதியாகச் செய்கிறவர்கள் தப்பி விடுகிறார்கள். தனி மனிதர்கள் அகப்பட்டுக் கொள்கிறார்கள்.

ஒரு பண்டம் ஒரே தெருவிலுள்ள ஏழு கடைகளில் ஏழு விதமான விலை வித்தியாசங்களோடு விற்கப்படுகிற நாட்டில் நாம் வாழுகிறோம். ஒரு பண்டம் ரேஷனில் ஒரு விலை, பொதுச்சந்தையில் மற்றொரு விலை என்று விற்கப்படுகிற நாடு நம் நாடு.

சிலருக்குச் சலுகைகள், சிலருக்குச் சலுகைகளே அற்ற நிலை என்று, நிரந்தரமாக மக்களை இரண்டு பிரிவாக்கி வைத்து விட்டுச் சோஷலிஸம் பேசுகிற தலைவர்கள் உள்ள நாடு நம்முடையது.

சராசரி ஐநூறு ரூபாய் வருமானமுள்ள ஒரு மத்திய தரக் குடும்பத்தின் ஏழைத் தலைவன் வீட்டுவரி, தொழில் வரி, மின்கட்டணம், தண்ணீர் வரி எல்லாவற்றையும் தேதி தவறாமல் கட்டி விட்டு மற்றச் செலவுகளுக்குத் திணறிக் கொண்டிருக்கிறபோது, முழு மின்சாரக் கட்டணத்தையும் வேறு வரிகளையும் உடனே ரத்துச் செய்ய வேண்டுமென்று அவனைவிட அதிக வசதி உள்ளவர்கள் கூட்டம் கூடி ஊர்வலம் போய்க் காரியத்தைச் சாதித்துக் கொள்ள முடிந்த நாடு இது.

குப்பனோ சுப்பனோ நீதிமன்றத்துக்குள் போய்க் கூப்பாடு போட்டு எதிர்ப்புக் குரல்கள் எழுப்பினால் தண்டிக்க முடிகிற சட்டமுள்ள இதே நாட்டில், ஓர் அரசியல்வாதியும் அவரைச் சேர்ந்த இளைஞர்களும் அவற்றைச் சுலபமாகச் செய்ய முடிந்தது. பெரிய இடத்து அத்து மீறல்கள் இயக்கங்களாக வும், புனிதப் போராட்டங்களாகவும் கூட வர்ணிக்கப் படுகின்றன. பாமரக் குடிமகன் நீதிமன்றங்களையும், நீதிபதி களையும், தீர்ப்புக்களையும் அத்துமீறி விமர்சிக்கக் கூடாது. ஆனால், இந்நாட்டின் மிகப் பெரிய பதவிகளில் இருந்த—

இருக்கிற சிலர் அந்த அத்துமீறல்களை நிறையவே செய்திருக்கிறார்கள்.

நாட்டில் எல்லாவகை அத்துமீறல்களும் அநியாயங்களும் சௌகரியம் கருதியும் வசதியை எதிர்பார்த்தும் பாதுகாப்பை உத்தேசித்தும், வெகு ஜன இயக்கங்களாகவே இங்கு நடத்தப்படுகின்றன.

தனி மனிதன் ஒருவன் டிக்கெட் வாங்காமல் 'வித் அவுட்' ஆகப் பிரயாணம் செய்தால் அது குற்றம். டில்லியில் நடைபெறும் மாபெரும் இளைஞர் காங்கிரஸ் மாநாட்டிற்காக, ரயில் பெட்டியின் வெளிப்பக்கம் போர்டு மாட்டிக் கொண்டு தைரியமாக டிக்கெட் இல்லாமல் பிரயாணம் செய்ய முடியும். டிக்கெட்டுடனும், குடும்பம்—குழந்தை குட்டிகளுடனும் வருகிற சட்டரீதியான மற்றப் பிரயாணிகளை உள்ளே நுழைய விடாமல் துரத்தியடிக்கவும் முடியும்.

அரசியலின் பெயரால் பல மனிதர்கள் சேர்ந்து திட்டமிட்டுச் செய்யும் அத்துமீறல்கள் ஆசீர்வதிக்கப்படுகின்றன.

சமீபத்தில் பாட்னாவில் நடந்த ஒரு சம்பவத்தைப் படித்திருப்பீர்கள். 'அரசாங்கத்தின் ஃபைல்களை விரைந்து முடிப்பதற்காகக் காலை 10 மணிக்கே எல்லா அலுவலர்களும், அமைச்சர்களும், செக்ரெட்டேரியட்டுக்குக் கூறாக வந்து விட வேண்டும் என்றும், 10 அடித்து 5 நிமிஷம் ஆனாலும் ஒருவரும் உள்ளே அனுமதிக்கப்படலாகாது' என்றும் உத்திரவிடப்பட்டது.

உத்திரவுக்குச் சில நாட்கள் கழித்து முதல் அமைச்சரே பத்தே முக்காலுக்கு வந்த போது, செக்ரெட்டேரியட்டின் பிரதான வாயிலில் இருந்த 'ஸெண்ட்ரி' கதவைத் திறந்து உள்ளேவிட மறுத்து விட்டான். 'தான் முதலமைச்சர்' என்று அவர் எடுத்துச் சொல்லியும் காவல்காரன் சர்க்கார் உத்திரவைச் சொல்லி அவரை உள்ளே விட மறுத்து விட்டான். அப்புறம் அவர் வெளியிலிருந்தபடியே சீஃப் செகரெட்டரிக்கு டெலிஃபோன் செய்து, அவர் பதறி ஓடி வந்து இவரை உள்ளே அழைத்துச் செல்ல நேர்ந்திருக்கிறது.

யாராயிருந்தாலும் அத்துமீறுவதை அனுமதிக்கத் துணியாத அந்த 'ஸெண்ட்ரி'யை, ஒரு விழாக் கொண்டாடி மாலை சூட்டிப் பாராட்டலாம் போல் தோன்றுகிறது அல்லவா? ஆனால், பெரிய இடத்து அத்துமீறல்களும், வலிமை மிக்கவர்களின் அத்துமீறல்களும் ஆசீர்வதிக்கப்படுகிற இந்நாட்டில் கடமை உணர்வு மிக்க அந்த ஸெண்ட்ரியை வேலையை விட்டுத் துரத்தாததே பெரிய காரியம் என்று சொல்ல வேண்டும்.

சாதாரணக் குடிமகன் வருமான வரியைச் செலுத்த மறந்தால் அது குற்றம். ஆனால், கால் நூற்றாண்டுக் காலத்துக்கும் மேலாக நாட்டின் அமைச்சராக இருக்கிற ஒருவர்—இருந்த ஒருவர்-அதை மறந்துவிடுகிற அளவுக்கு ஆசீர்வதிக்கப்பட்டிருந்த நாடு இது.

தலைவர்களும், பதவியிலுள்ளவர்களும், பதவியிலுள்ள கட்சியும் அத்துமீற அனுமதிக்கப்படுகிற நாட்டில், மக்களும் இளம் பருவத்து மாணவர்களும், முடிந்தபோதெல்லாம் அத்துமீற ஆசைப்படுவதை எப்படித் தவிர்க்க முடியும்? அல்லது தடுக்க முடியும்?

கல்வி, வியாபாரம், கலை, தொழில், அரசியல் எல்லாவற்றிலும் வலிமையும் வசதியுமுள்ளவர்கள் சாங்கோபாங்கமாக அத்துமீற அனுமதிக்கப்படுகிறார்கள்.

அதே துறைகளில் வலிமையும், வசதியுமில்லாத அப்பாவிகள் பிடிபட்டு -அத்துமீறலுக்காகத் தண்டிக்கப்படுகிறார்கள். அவர்களுடைய தவறுகள் அத்துமீறல்களாகப் பகிரங்கமாகப் பிரகடனம் செய்யப்படுகின்றன.

பொய், கொலை, களவு எல்லாம் செய்த ஒருவனை, அவையெல்லாம் நடந்த பிறகும் மக்கள் ஒரு தேர்தலில் வெற்றி பெறச் செய்து விடுவார்களானால், 'நான் தவறுகள் செய்யவில்லை. அத்துமீறவில்லை என்று இந்நாட்டு மக்களே தீர்ப்பளித்து விட்டார்கள்' என்று அப்படித் தேர்தலில் வென்றவர் கூறிக்கொள்ள முடிகிற நாடு இது.

தவறான ஒருவருக்கு 'வெற்றிபெறுகிற சந்தர்ப்பம்' கிடைத்தாலே போதும். அந்த வெற்றி பழைய அத்துமீறல்

களுக்குப் பொது மக்கள் அளித்த புதிய ஆசீர்வாதமாகவே கருதப்படும் மனப்பான்மையை இங்கு மிகப் பெரியவர்களே உண்டாக்கி விட்டார்கள்.

பல தவறுகளைச் செய்தவர்கள் பெறும் ஒரு வெற்றியே பொதுஜன ஆசியாகக் கருதப்படுவது போலக் காட்டிக் கொள்ள வசதி இருக்கும் ஒரு நாட்டில், அத்துமீறல் களுக்குக் கூசுகிற மனப்பான்மையை இளம் தலைமுறை யினரிடத்தில் ஏற்படுத்துவதே மிகவும் சிரமமான காரிய மாகத்தான் இருக்கும்.

கண் முன்னால் அத்துமீறல்களைச் செய்தே வாழ்வில் வசதியாக இருப்பவர்களையும், அத்துமீறல்களுக்கு அனு மதிக்கப்பட்டு முன்னேறியவர்களையும், அத்துமீறல்களுக்காக ஆசீர்வதிக்கப்பட்டவர்களையும் பார்த்துக் கொண்டே அத்து மீறாமல் அடக்கத்துடனும், ஒழுங்குடனும் கட்டுத்திட்ட மாக வாழ்ந்து கொண்டிருக்க யாராலும் முடியாது.

இந்நாட்டின் புதிய தலைமுறையினராலும் அது முடிய வில்லை. இளைஞர்களிடையே உள்ள குழப்பங்களை இந்தக் கண்ணோட்டத்தில் பார்த்தால் அதற்கு முதியவர்கள் எப்படிக் காரணமாகிறார்கள் என்பது புரியும். இப்படிப் பட்ட தலைமுறையில், இப்படிப்பட்டவர்களுக்கிடையே நக்ஸலைட்டுகள் தோன்றாமல், முனிபுங்கவர்களா தோன்று வார்கள்? அத்துமீறலைக் கலையாகப் பயின்றவர்கள் பிறரை எப்படி அத்துமீறலிலிருந்து காக்க முடியும்? 

# 32. மிகைப் படுத்தல் என்னும் தேசிய குணம்

நமது பிரசங்க மேடைகள், தினசரிப் பத்திரிகைகள், திரைப் படங்கள், நாடகங்கள், கதைகள் எல்லாவற்றையும் கூர்ந்து கவனிக்கும் போது ஒரு நிதரிசனமான உண்மை புலப் படும். எது ஒன்றையும் ஓரளவு அல்லது முடிந்த வரை மிகைப்படுத்திச் சொல்வது என்பது நமது இரத்தத்திலேயே கலந்து போயிருக்கிறது. இன்று நேற்றில்லை. பல தலைமுறை களாகவே இந்தக் குணம் நமது பிறப்புரிமை.

பிற்காலத்தில் யாராவது இதை ஒரு குறையாகச் சொல்லி விடக்கூடாது என்பதற்காகவோ என்னவோ அலங்கார நூலாசிரியர்கள் மிகைபடுத்திக் கூறுவதையே அன்று அதிசயோக்தி அல்லது உயர்வு நவிற்சி என்று ஒரு வகை அலங்காரமாகவே பிரித்துச் சொல்லி விட்டுப் போய் விட்டார்கள்.

ஆனால், அறிஞர்கள் கருத்துப்படி ஒன்றைக் குன்றக் கூறுவதும் குற்றம். மிகைபடக் கூறுவதும் குற்றம். இரண்டுமே அலங்காரங்கள் அல்ல.

குழாயடியில் சண்டை போடும் வாயாடிப் பெண் முதல் தேர்தல் வாக்குறுதிகளை அள்ளி வீசும் பல மேடைப் பிரசங்க அரசியல் வித்தைக்காரர்கள் வரை அனைவரையும் காக்கும் தாரக மந்திரம் மிகைபடக் கூறலே.

மிகைபடக் கூறல் மட்டும் இல்லை என்றால் நம் நாட்டு அரசியலும், அரசியல் கட்சிகளும், அரசியல்வாதிகளுமே இல்லை என்று சொல்லி விடலாம்.

இலக்கணம், அதைக் குற்றம் என்றோ அலங்காரம் என்றோ எப்படி வேண்டுமானாலும் சொல்லி விட்டுப் போகட்டும் நம் நாட்டு அன்றாட வாழ்க்கைக்கு அது தேவைப்படுகிற ஒரு 'தேசிய குணம்' ஆகி விட்டது.

அரசியலுக்கும், பத்திரிகைத் தொழிலுக்கும், பிரசங்கிகளுக்கும் தேவையான ஒரு குணத்தை அத்தனை சுலபமாகப் போக விட்டு விடுவார்களா என்ன? ஆகவே தான், பலர் அதைக் கட்டிக் காத்துப் போற்றிப் பேணி வளர்த்து வருகிறார்கள்.

அறுபது கோடிப் பேரில் எங்காவது ஒரு மூலையில், ஏதாவது ஓர் ஊரில் யாராவது ஒருவன் பட்டினியால் சாக நேர்ந்திருக்கும். அதைப் பற்றி எதிர்க்கட்சி மேடையில் பேசுகிற பேச்சாளர், 'பஞ்சம் பட்டினியால் மக்கள் தெருத் தெருவாகப் பூச்சி புழுக்களைப் போலச் செத்துக்கொண்டிருக்கிறார்கள். இந்த ஆட்சியில் கேள்வி முறை இல்லை. பொது மக்களின் உயிர் உடைமைகளுக்குப் பாதுகாப்பில்லை. எங்கு பார்த்தாலும் மரணம்! எங்கு திரும்பினாலும் கற்பழித்தல் குற்றங்கள்' என்று மிகைப்படுத்தி அடுக்கத் தொடங்கி விடுவார்.

சில ஆளும் கட்சித் தலைவர்களும் இதில் எதிர்க் கட்சிக் காரர்களுக்கு ஒரு சிறிதும் சளைக்காதவர்களாக இருப்பார்கள்.

இப்போது இன்று ஏறியிருக்கும் விலைவாசிக்கு, இன்று நிகழும் கற்பழித்தல் சம்பவங்களுக்கு, பெய்து தீர்த்த மழையால் வந்த வெள்ளச் சேதங்களுக்கு, பெய்யாத மழையால் வந்த பஞ்சங்களுக்கு, எல்லாவற்றுக்குமே ஆறு மாதங்களுக்கு முன்பு பதவியை விட்டுப் போன முந்திய அரசுதான் காரணம் என்று துணிந்து கூறும் மிகைப்படுத்தல் நிபுணர்கள் ஆளும் கட்சியிலும் இருக்கிறார்கள்.

நம் நாட்டில் வெகு காலத்துக்கு முன்பே, உண்மையை உண்மையாக நடந்தபடியே பார்க்கிற யதார்த்த வாதிகள் குறைவு. அதனால் தான் அந்தக் காலத்திலேயே 'யதார்த்த வாதி வெகு ஜன விரோதி' என்ற பழமொழியே உண்டாகி வழங்கி வருகிறது.

நம் கதைகளையும், திரைப் படங்களையும் பொறுத்த வரை மாமியார் என்பவள் நிரந்தரமான கொடுமைக்காரி.

தாய்-அன்னை என்பவள் தியாக வடிவம். ஒவ்வொரு தாயும் தன் மகனின் மனைவிக்கு மாமியார் தானே? ஒரே பெண் எப்படித் தாயாக இருக்கும் போது தியாக வடிவமாகவும், மாமியாராக இருக்கும் போது கொடுமைக்காரியாகவும் இருக்க முடியும் என்று நீங்கள் கேள்வி எல்லாம் கேட்டுப் பிரயோஜனமில்லை.

தியாகமோ, மோசமோ எதுவானாலும் அதை மிகைப் படுத்தியே சித்திரிக்க நாம் பழகி விட்டோம்: அதனால் நம் கதைகளிலும், படங்களிலும் தியாகமும் நம்பும்படியாக இல்லை; மோசமும் நம்பும்படியாக இல்லை. 'நம்ப முடியாது' என்ற ஒரே அம்சம்தான் நம்பும்படியாக இருக்கிறது.

ஒரு தேசம் புத்தியிலும், சிந்தனையிலும் மயக்கமோ, குழப்பமோ இல்லாமல் தெளிவாக இருக்கிறது என்பதற்கு அடையாளம் மிகைப்படுத்தல் குணம் அங்கே குறைவது தான். மிகைப்படுத்தல் குணம் குன்றுமலேஆளும் கட்சியும் எதிர்க்கட்சிகளும் அரை நூற்றுண்டாகக் குழந்தைத் தனமாக இருப்பது என்பது வளர்ச்சியின்மையைக் காட்டும் அடையாளங்களில் முக்கியமானது.

சிந்தனையில் ஒரு நிதானம்—அதாவது, 'பாலன்ஸ்' வராதவரையில்—படிப்பு, அறிவு, சிந்தனை எல்லாம் பயனற்றவையே. எவ்வளவு நாள் தண்ணீரில் கிடந்து ஊறினாலும் கருங்கல் கரையாதது போல, நிதானத்திலும் காரண—காரிய அறிவிலும் கரைந்து மென்மையடையாத படிப்பால் பயனில்லை.

இப்படிக் கரைந்து, இளகி மென்மையடையாத மனிதர் கள் அதிகம் இருக்கிறார்கள் என்பதையே நம் நாட்டு நிலை காட்டுகிறது.

திட்டமிட்ட, மிகைப்படுத்தும் நோக்கத்துடன் தரப் படும் தவறான புள்ளி விவரங்கள், 'சென்ஸேஷனல்' என்ற பெயரில் கடுகை மலையாக்குவது (மலையைக் கடுகாக்குவதும் சேர்த்துத்தான்) எல்லாம் நம்மிடையே இருக்கின்றன. அளவற்ற வகைகளில், விதங்களில் இருக்கின்றன.

சாதாரணமான ஒரு விஷயத்தைத், தான் கேட்டபடி சாதாரணமாக மெருகு கொடுத்து எழுதவோ, சொல்லவோ இங்கே யாரும் தயாராக இல்லை.

ஒவ்வொரு விஷயமும் பேச்சிலோ, எழுத்திலோ மிகைப் படுத்தப்பட்டே மக்களுக்குப் போய்ச் சேருகிறது. ஏராள மான கவிஞர்களும் புலவர்களும் பல்லாயிரம் ஆண்டு களாகவே வாழ்ந்து பழகிய தேசமாக இருப்பதாலோ என்னவோ, ஒவ்வொரு குடிமகனிடமும் கற்பனை உணர்வும் மிகைப்படுத்தும் குணமும் பிரமாதமாக நிரம்பி இருக் கின்றன.

'கடல் பாசியில் அல்வா செய்து பசியைப் போக்கு வோம்' என்பது ஒரு தேர்தல் வாக்குறுதி. 'அனைத்து மக்களுக்கும் தாலிக்குத் தங்கம்' என்பது ஒரு தேர்தல் வாக்குறுதி. இப்படியே போனால், 'எந்தப் பெண்ணும் கற்பை இழக்காமல் காப்போம்!' என்று கூட ஒரு வாக்குறுதி வரும். 'மிகைப்படுத்தல்' என்ற செப்பிடு வித்தையை வசப் படுத்தி நன்றாகப் பேசிப் பழகிக்கொண்டு விட்டால் அது ஆளும் கட்சிக்கும் பயன்படும், எதிர்க்கட்சிக்கும் பயன்படும்.

'ஒரு விஷயம் அதிகமாக மிகைப்படுத்தப் பட்டிருக்கிறது என்பதைக் கண்டு பிடிக்கவே ஐந்து வருஷமாகிற தேசம் இது.

'ஒரு ரூபாய்க்கு ஒரு படி அரிசி, என்ற மிகைபடக் கூறல் நமக்குப் புரிவதற்கே, ஒரு படி அரிசி மூன்று ரூபாய் விலைக்கு விற்கிற காலம் வரை தாமதம் ஆகி விட்டது.

மக்களின் நிறுவைத் தராசு மட்டும் சரியாக இருக்கு மானால், எந்த அரசியல் கட்சியும் மிகைபடக் கூறலால் அவர்களை ஏமாற்றவே முடியாது.

ஆனால், இங்கு மக்களுக்கே யதார்த்தத்தில் அதிகமான ஈடுபாடு இல்லை. ஒன்று, எதையாவது மிகைப்படுத்தி அல்லது குறைப்படுத்திக் கூறி வர்ணிப்பதைச் செவிமடுக்கும் அளவுக் குத்தான் அவர்களும் இருக்கிறார்கள். பிரிட்டனைப் போல், பக்குவமான மக்கள் உள்ள நாடாக ஒன்று இருந்தால் 'மிகைப்படுத்தல்' அங்கே செல்லுபடியாகாது.

சில 'மரணங்களை'க் கூட மிகைப்படுத்திப் பிழைக்கப் பார்க்கும் சுமார்ரக அரசியல்வாதிகள் நிறைந்த நாட்டில் 'பக்குவத்தை' எங்கே எதிர்பார்க்க முடியும்?

கதையோ, படமோ, செய்தியோ, பிரசங்கமோ 'கன்வின்ஸிங்' ஆக இல்லாத பட்சத்தில் மக்கள் அவற்றை ஒதுக்குகிற பக்குவத்தைப் பெற்றிருக்க வேண்டும்.

ஆயிரம் வருடம் கங்கை நீரில் மூழ்கிக் கிடந்தாலும் கரையாத கருங்கல்லைப் போல், அறிவு வளர்ச்சி என்ற கங்கைப் பிரவாகத்தில் காரண—காரியத் தெளிவு என்ற நெகிழ்ச்சி ஏற்படாத கல்வியால் என்னதான் பயன்?

'ஸ்திதப் பிரக்ஞன்' (உறுதியான அறிவு நிலை உள்ளவன்) என்ற ஆன்மீகப் பதம் இதைத்தான் சொல்கிறது. 99 சதவிகித அரசியல்வாதிகள் 'பதவிப் பிரக்ஞர்'களாக இருக்கிற தேசத்திலே உடனடியாக அந்தப் பக்குவம் வர வழியே இல்லை.

கற்பனைகளைக் கவிஞர்களுக்கு மட்டுமே ஒதுக்கி விட்டுப் பொது மக்கள் யதார்த்த நிலையைப் புரிந்து கொண்டு மிகைப்படுத்தலில் இருந்து விடுதலை அடையவேண்டும். 'மிகைப்படுத்தல்' என்பது ஆகாயப் பந்தலில் இருப்பதைப் போன்றது. ஆகாயப்பந்தலில் மனிதர்கள் வசிக்கவும் முடியாது. வசிக்கவும் கூடாது. ★

## 34. சுதந்திரத்தின் எல்லைகள்!

சுதந்திரம், சர்வாதிகாரம், எதேச்சாதிகாரம், உரிமை போன்ற வார்த்தைகள் பேச்சிலும், எழுத்திலும் அதிகமாகப் புழங்குகின்றன. பொதுமக்களுக்கும், தலைவர்களுக்கும், பிரமுகர்களுக்கும் இந்த வார்த்தைகளின் அர்த்தம் நடைமுறையில் எவ்வளவிற்குப் புரிந்திருக்கிறது என்பதைப் பார்த்தால் மிகவும் அதிர்ச்சியாயிருக்கும்.

ஒவ்வொருவனுடைய, அல்லது ஒவ்வொன்றினுடைய சுதந்திரமும் முடிகிற எல்லை என ஒன்றிருக்கிறது. அந்த எல்லைக்கு மேல் அது அடுத்தவனுடைய—அல்லது அடுத்ததினுடைய சுதந்திரத்தில் தலையிடுவதாக முடிந்து விடும்.

பலர், கட்டுப்பாடில்லாத நிலை தான் சுதந்திரம் என்று புரிந்து கொண்டிருக்கிறார்கள். உண்மையில், சுதந்திரமில்லாத நிலைக்குத் தேவையானதைவிட அதிகமான கட்டுப்பாடு சுதந்திரமான நிலைக்குத்தான் தேவை. கட்டுப்பாடற்ற சுதந்திரமும், சுதந்திரமற்ற கட்டுப்பாடும் கேடு விளைவிக்கக் கூடியவை.

ஒவ்வொரு தனி மனிதனும், ஒவ்வொரு ஸ்தாபனமும், ஒவ்வொரு சர்க்காரும் இதுதான் சுதந்திரம் என்று நினைத்துக் கொண்டே, சுதந்திரத்தின் எல்லையைத் தங்களை அறியாமலே கடந்து, அத்துமீறிச் சர்வாதிகாரத்தின் எல்லையை எப்படித் தொடுகிறார்கள் என்பது மிகவும் சுவாரஸ்யமானது.

தான் சுதந்திரமாக இருக்கிற மகிழ்ச்சி மட்டும் சிலருக்குப் போதாது. அடுத்தவனைச் சுதந்திரமாக இருக்கமுடியாமல் செய்வதன் மகிழ்ச்சியும் கூடவே வேண்டும். தான் சுதந்திரமாக இருப்பது, பிறரைச் சுதந்திரமாக இருக்க விடாதது

இரண்டும் ஒரே ஆளிடம் இருக்க முடியும். அத்து மீறிய சுதந்திரம்தான் சர்வாதிகாரத்தின் ஆரம்பம். சர்வாதிகாரம் அங்கேதான் முளை விடுகிறது.

அடுத்தவன் சுதந்திரமாக இருக்கக் கூடாது என்பவன் தான் சுதந்திரமாக இருக்கத் தகுதியற்றவன். தான் சுதந்திர மாக இருக்க வேண்டும் என்று நினைப்பவன் அடுத்தவனையும் சுதந்திரமாக இருக்க விட வேண்டும். பக்குவமும், பொறுப்பு உணர்ச்சியும் இல்லாவிட்டால் இந்த எல்லைகளைக் கட்டிக் காப்பது மிகவும் சிரமம். தன் சுதந்திரத்தின் எல்லைகளை விரிவடையச் செய்து கொண்டே, அடுத்தவனு டைய சுதந்திரத்தின் எல்லைகளைக் குறுக்கி நெருக்கும் முயற் சிக்குத்தான் சர்வாதிகாரம் என்று பெயர்.

சர்வாதிகாரத்தின் சாயல்கள் பல. தான் நினைக்கிற படியே எல்லாரும் நினைத்தாக வேண்டும் என்று எண்ணுவது தன்னைப் போலவே எல்லாரும் செய்ய வேண்டும் என்று எண்ணுவது. தான் பேசுவதையே எல்லாரும் பேச வேண்டும் என்று எண்ணுவது. தன் மாதிரியே எல்லாரும் இருக்க வேண்டும் என்று நிர்ப்பந்திப்பது.

மகான்களும் கூட அப்படிச் செயல்படுவது உண்டு. ஆனால், தங்களைப் போலவே எல்லாரும் இருக்க வேண்டும் என்கிற மகான்களின் ஆசை உடனே பலிப்பதில்லை. அதே சமயம், சர்வாதிகாரிகளின் ஆசை உடனே பலித்து விடும். அன்பிற்குக் கட்டுப்படாதவர்கள் கூட அதிகாரத்திற்குக் கட்டுப்படும் நாடு இது.

உதாரணமாக, மகாத்மா காந்தி, எல்லா மக்களும் உண்மை பேச வேண்டும் என்று ஆசைப்பட்டார். எல்லா மக்களும் அகிம்சையைக் கடைப்பிடிக்க வேண்டுமென்று நினைத்தார். எல்லா மக்களும் ஆடம்பரத்தைக் கடைப் பிடிக்க வேண்டாம் என்று கூறினார்.

முப்பது ஆண்டுகளுக்கு மேலாகியும் அது முழுமையாகப் பலிக்கவில்லை. நல்ல விஷயங்களை ஆனாலும் அதிகாரத்தை வைத்துக்கொண்டு பயமுறுத்திச் சொன்னால், உடனே அதில்

ஒரு செயல்படும் வேகம் தெரியும். உதாரணம், இருபது அம்சத் திட்டமும் ஐந்து அம்சத் திட்டமும்.

சுமாரான மக்கள் அன்பிற்குக் கட்டுப்படுவதைவிட அதிகாரத்திற்குக் கட்டுப்படுவார்கள். சர்வாதிகாரத்திற்கு, இன்னும் பயந்து கட்டுப்படுவார்கள்.

சுதந்திரத்துக்கு—சுதந்திரத்தை அனுபவிப்பதற்கு—ஜனநாயகத்திற்கு —ஜனநாயகத்தை அனுபவிப்பதற்கு —மக்களைத் தயாரித்துப் பக்குவப் படுத்த வேண்டும். இல்லாவிட்டால் கஷ்டம்.

ஆனால், சர்வாதிகாரத்திற்கு — அடக்குமுறைக்கு — அப்படி மக்களைத் தயாரிக்கவோ, பக்குவப்படுத்தவோ வேண்டியதில்லை. பிசைந்த களிமண்ணை வைத்துப் பிள்ளையாரும் பிடிக்கலாம், குரங்கும் பிடிக்கலாம். சர்வாதிகாரத்தின் கைகளில் மக்கள் களி மண்ணாகப் பிசைபடுவார்கள். மக்களே சில குழப்பமான சமயங்களில் தாங்கள் என்ன பேசுகிறோம் என்பது புரியாமல், 'நம்ம நாட்டுக்கு சுதந்திரம், ஜனநாயகம் இதெல்லாம் லாயக்கில்லை சார்! 'டிக்டேடர்ஷிப்' தான் வேண்டும். அப்பத்தான் உருப்படும்' என்று அடிக்கடி பேசுவதைக் கேட்கலாம். இப்படி எது லாயக்கு, எது வேண்டும், எது வேண்டாம் என்றெல்லாம் பேசுகிற உரிமை கூட ஜனநாயகத்தில்தான் இருக்கும். சர்வாதிகாரத்தில் அந்த உரிமை கூட இராது.

சர்வாதிகாரத்தில், எது வேண்டும் எது வேண்டாம் என்றெல்லாம் மக்களைப் பேச விடவோ, முடிவு எடுக்க விடவோ மாட்டார்கள்.

சுதந்திரத்துக்குள்ளேயே சில சர்வாதிகாரங்கள் உண்டு. ஒரு சிலருக்காகப் பலர் சிரமப்படுகிற நிர்ப்பந்தங்கள் எல்லாம் அதில் சேரும்.

ஓர் ஊரில் ஏதோ ஒரு எக்ஸ்பிரஸ் ரயில் நிற்கவில்லை. அந்த எக்ஸ்பிரஸ் ரயில் தங்கள் ஊரில் நிற்க வேண்டும் என்பதற்காகப் பலங்கொண்ட மக்கள் ஒன்று திரண்டு அந்தப் பாதையில் வருகிற மற்ற ரயில்களைக் கல்லாலடிக்

கிறார்கள். தண்டவாளத்தில் பாறாங்கல்லைப் புரட்டி வைக்கிறார்கள். இதனால் ரயில்களில் வருகிற பொதுமக்கள், குழந்தை குட்டிகளுக்குக் காயம், சேதம் எல்லாம் ஏற்படுகிறது. ரயில்வே நிர்வாகத்தோடு ஒரு கிராமத்துக்கு உள்ள மனத்தாங்கலை, பிரயாணம் செய்கிற மற்றப் பொது மக்களைத் துன்புறுத்துவதால் எப்படித் தீர்த்துக் கொண்டு விட முடியும்? இது வெகுஜன சர்வாதிகார வகையைச் சேரும்.

தனக்குப் பயன்படாதது மற்றவர்களுக்கும் பயன்படக் கூடாது என்றெண்ணுவது ஒருவகையான சர்வாதிகாரச் சாயல். தனக்கும் பயன்பட முடிந்து மற்றவர்களுக்கும் பயன்படுகிறாற் போல இருக்கிற ஒன்றை மற்றவர்களுக்கு மறுப்பது சர்வாதிகாரத்தின் பிறிதொருசாயல். சர்வாதிகாரி என்பவன், எங்கோ ஏழு கடல்களைக் கடந்து அப்பாலிருக்கும் தீவு ஒன்றிலிருந்து உருவாகிவரும் ராட்சஸன் என்று நினைப்பதில் பயனில்லை. மக்களுக்கு நடுவே மக்களைப் போலவே அவர்கள் இருக்கிறார்கள். சந்தர்ப்பம் கிடைத்தால் பெரிய சர்வாதிகாரியாகிறார்கள். சந்தர்ப்பம் கிடைக்கா விட்டால் சாதாரண சர்வாதிகாரியாகவே இருந்து விடுகிறார்கள். இதுதான் வித்தியாசம். சாதாரண சர்வாதிகாரிகளுக்குக் கொடுமைக்காரர்கள் என்று மட்டும் பெயர் கொடுத்து விட்டு விடுகிறோம். புகழ்பெற்ற, நாடு முழுவதும் கொடுமைப்படுத்துகிற பெரிய கொடுமைக் காரர்களுக்குச் சர்வாதிகாரிகள் என்று பெயர் கொடுக்கிறோம், அல்லது கௌரவப்படுத்துகிறோம்.

சில பாமர மக்கள் தாங்கள் கொண்டாடுவதன் மூலமும் அளவற்றுப் புகழ்வதன் மூலமுமே, சுமாரான சர்வாதிகாரிகளை முதல்தரமான சர்வாதிகாரிகளாக மாற்றி விடுகிறார்கள்.

நாடுகளை ஆள்பவர்களிலும், ராணுவக் கேந்திரங்களிலும் ராஜீயவிவகாரங்களிலும்தான் சர்வாதிகாரிகள் உருவாக முடியும் என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம். வீடுகளில்,

அலுவலகங்களில், அரசியல் கட்சித் தலைமைகளில், கல்வி நிலையங்களில், குடியிருப்புப் பகுதிகளில், சிறிய ஊர்களின் தெருக்களில், எங்கே வேண்டுமானாலும் எப்படிவேண்டு மானாலும் சர்வாதிகாரிகள் உருவாகி விடுவார்கள். உருவாகி யிருக்கிறார்கள்.

எங்கெங்கெல்லாம், நிர்ப்பந்தம் இருக்கிறதோ, எங்கெங்கெல்லாம் அபிப்பிராயங்கள் மக்கள் மேல் திணிக்கப்படுகின்றதோ, எங்கெங்கெல்லாம் மக்களின் சுயசிந்தனை அடக்கி ஒடுக்கப்படுகிறதோ அங்கெல்லாம் சர்வாதிகார நோயின் அறிகுறிகள் தெரியத் தொடங்கு கின்றன. 'ஜீவகாருண்ய விலாஸ் கசாப்புக் கடை' என்று மட்டன் ஷாப்புக்குப் பெயர் வைப்பது போல் சில சர்வாதி காரங்களுக்கு ஜனநாயக ரீதியில் பெயர் கொடுக்கப்பட்டிருக் கலாம். அந்தப் பெயருக்கு எந்த அர்த்தமும் இருக்காது. நிதானமான ஒரு பெயரின் கீழ் மிகவும் தீவிரமான கொடு மைகள் நடந்து கொண்டிருக்கும். அவ்வளவுதான்.

மிகவும் குருட்டுத்தனமாக ஒன்றைப் பின்பற்றும் இயல்பும், கண்மூடித்தனமான வீர வணக்க மனப்பான்மை யும் எந்த மக்களிடம் நிரம்பியிருக்கிறதோ அங்கே சர்வாதி காரிகள் தாராளமாக உருவாக முடியும். வளர்ந்து செழிக்க வும் முடியும்.

பொதுமக்கள் கண்களை இறுக்க மூடிக் கொண்டு, குனிந்து குனிந்து கும்பிட்டுக் கொண்டேயிருந்தால் கழுதைக் குக் கூட அவர்களை ஆசீர்வதிக்கும் சக்தி வந்துவிடும். ஒவ்வொரு தலைமுறையிலும் மக்கள் தங்களை ஆசீர்வதிக்கும் நபர்களைத் தாங்களே உருவாக்கிக் கொள்கிறார்கள். பின்பு உருவாக்கியவர்களின் கவனக்குறைவினால், ஆசீர்வதிப்பவர் களே தலையில் கையை வைப்பவர்களாகவும் மக்களை மொட்டையடிக்கிறவர்களாகவும் மாறி விடுவது உண்டு.

பொறுமையின்மை, தாழ்வு மனப்பான்மை, அதிகாரங் களைச் சேர்த்து வைத்துக் கொள்ளும் பேராசை ஆகியவற்றால் ஒருவர் படிப்படியாகச் சர்வாதிகாரியாக முடியும். ஒருமுறை மனித ரத்தத்தைச் சுவைத்த புலி எப்படி 'மேன் ஈட்டர்'

ஆக மாறி விடுகிறதோ அப்படியே எதேச்சாதிகாரத்தின் அதீத ருசியைக் கண்ட புலி 'ஜனநாயக ஈட்டர்' ஆக மாறி விடுகிறது. சுதந்திரத்தின் எல்லைகள் மிகவும் நுணுக்க மானவை. ஒவ்வொருவனுடைய உரிமையும் அடுத்தவனுடைய உரிமை என்ற எல்லையைப் பெற்றிருக்கிறது. சங்கிலிக் கண்கள் போல் ஒன்று இன்னொன்றுடன் சம்பந்தப்பட்டிருக்கும் அமைப்பில், யாரும், எதுவும் தீவு போல் தனித்து வாழ்ந்துவிட முடியாது.

பலர் கூடிக் கலந்து வாழும் வாழ்க்கையில் ஒருவரையொருவர் சகித்து, ஏற்று, ஏந்தி ஒப்புக்கொண்டு வாழத் தெரிய வேண்டும். பிறரையும், பிறருடைய உணர்வுகளையும் புரிந்து கொண்டு வாழ முடியாத நிலையே ஒருவனைச் சர்வாதிகார அறிகுறிதான்.

சுதந்திரம்—சர்வாதிகாரம் ஆகியவற்றின் எல்லைகள் ஆரம்பமாகின்ற இடம்—முடிகிற இடம்—நுணுக்கமானவை —ஜாக்கிரதையானவை. நாசூக்கானவை.

ஏனெனில், ஒவ்வொன்றின், ஒவ்வொருவரின்— சுதந்திரம் முடிகிற எல்லையில்தான் அடுத்ததின், அடுத்தவரின் சுதந்திரம் ஆரம்பமாகிறது. இந்த எல்லைகள் புரியாவிட்டால் சுதந்திரத்தைக் காக்கவும், சர்வாதிகாரத்தைத் தடுக்கவும் முடிவது சிரமமானதே. 

# ஆசிரியரின் பிற நூல்கள்

| | |
|---|---|
| ராணி மங்கம்மாள் | 10 50 |
| பொய்ம்முகங்கள் | 10 00 |
| 'பூக்களை யாரும் மிதிக்கக்கூடாது' | 6 00 |
| அறத்தின் குரல் (மகாபாரதக் கதை) | 21 00 |
| துளசி மாடம் | 15 50 |
| பாண்டிமாதேவி | அச்சில் |
| கற்சுவர்கள் | 6 75 |
| வெற்றி முழக்கம் | அச்சில் |
| மணிபல்லவம் | ,, |
| நீல நயனங்கள் | 20 00 |
| பொன் விலங்கு | 25 00 |
| சத்திய வெள்ளம் | 20 00 |
| நித்திலவல்லி | அச்சில் |
| குறிஞ்சி மலர் | 18 00 |
| கோபுர தீபம் | 14 00 |
| சமுதாய வீதி (சாகித்ய அகாதமி பரிசு பெற்றது) | 12 00 |
| பிறந்த மண் | 10 50 |
| நெற்றிக்கண் | 8 00 |
| அனிச்சமலர் | 5 50 |
| நெஞ்சக்கனல் | 6 00 |
| நினைவின் நிழல்கள் | 7 00 |
| ஆத்மாவின் ராகங்கள் | அச்சில் |
| கபாடபுரம் | 7 00 |
| மனக்கண் | அச்சில் |
| மகாத்மாவைத் தேடி | 4 75 |
| வஞ்சிமாநகரம் | 5 25 |
| பட்டுப் பூச்சி | 5 00 |
| மலைச்சிகரம் | அச்சில் |
| நிசப்த சங்கீதம் | 12 00 |
| இது பொது வழியல்ல | 6 00 |
| ஒப்புரவு | 5 25 |
| பிரதிபிம்பம் | 5 00 |

